ஸ்ரீரஸ்து.

பெரியபெருமாள் ஸ்ரீரங்கநாச்சியார் திருவடிகளே சரணம்

பட்டர் திருவடிகளே சரணம்







# ஸ்ரீகுணரத்நகோசம்—வியாக்யான அவதாரிகை.

(ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர்)





நாம் முத்தி பெறுவதற்குரிய உபாயங்களில் திவ்ய தம்பதிகளான பெருமாளையும் பிராட்டியையும் ஸ்துதிசெய்வதென்பது மிகச்சிறந்த உபாயமாகத் தொன்றுதொட்டு மஹரிஷிகளாலும் மஹாசார்யர்களாலும் கொள்ளப்பட்டிருக்கின்றது. அறிவிலிகளான நாம் நமது இளைய புன்கவிதைகளைத் தொடுத்து ஸ்துதி செய்வதிற்காட்டிலும் அறிவிற்சிறந்த ஆரியர்கள் அருளிய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு ஸ்துதி செய்தால் எம்பெருமானுடைய திருவுள்ளம் விரைவில் கனியுமாதலால், இப்படிப்பட்ட நன்மையை நாம் பெற்றுவாழ்வதற்காகவே ஆளவந்தார் முதலிய நம் பூருவாசாரியர்கள் பரம கருணையோடு அமுதிலுமாற்றவினிய பல பல ஸ்தோத்ரங்களை அநுக்ரஹித்தருளியுள்ளார்கள்.

அவ்வாசிரியர்களுள் **பட்டர்** மிகச்சிறந்த ஸ்தானத்தை வஹித்தவர். இவர் ஸ்ரீரங்கநாதன் விஷயமாக ஸ்ரீரங்கராஜஸ்தவமும், ஸ்ரீரங்க நாச்சியார் விஷயமாக ஸ்ரீ குணரத்ந கோசமும் அருளிச்செய்து பக்தர்கள் திறத்தில் பரமக்ருபையைக் காட்டியருளினவர். இவருடைய திருத் தகப்பனாரான கூரத்தாழ்வான்போல்வார் அருளிச்செய்த பஞ்சஸ்தவம் முதலான ஸ்துதிநூல்களுமிருந்தாலும் பட்டருடைய இவ்விரண்டு ஸ்துதிகளுக்கு இணையான க்ரந்தம் இவ்வுலகில் இதுகாறும் அவதரித்ததில்லையென்றால் இது அதிசயோக்தியாகாது. இவ்விரண்டினுள்ளும் ஸ்ரீ குணரத்ந கோசத்தின் காம்பீர்யம் வாசாமகோசரமானது. இதுதன்னில் சொல்தொடையும் பொருள்தொடையும் அமைந்திருக்குமழகு அற்புதம் என்னலாமத்தனை. இதுதன்னிலேயே **✳அநாக்ராதாவத்யம்✳** என்கிற (8ஆம்) ச்லோகத்தில் பெரிய பிராட்டியாரை நோக்கிப் பரமவிலக்ஷணமான வாக்விந்யாஸ சைலியை அடியேனுக்கு அநுக்ரஹித்தருள்கவென்று தாமே ப்ரார்த்தித்திருப்பதனால் அப்படியே ஸ்ரீரங்கநாச்சியாருடைய அநுக்ரஹமடியாக வாய்த்த அந்யாத்ருச காம்பீர்ய யுக்தமான ரசநாவைகரி இந்த ஸ்தோத்ரமொன்றுக்கே அஸாதாரணமாயிருக்கும். **"பரிசிதமிவ அநாபி கஷந்ம் வாணீ விலஸிதம் மஹ்யம் பஹுமுகய"** என்று ப்ரார்த்தித்தபடியே, இதிலுள்ள சொற்களெல்லாம் நமக்குக் கைவந்தவையாயிருந்தாலுங்கூட அர்த்தஜ்ஞானம் மிகவும்

அருமைப்படும்படியமைந்த அமைப்பு இந்த ஸ்துதியிற்போல் வேறு எதிலுங் கண்டதில்லை.

இதற்கு வியாக்கியானமெழுதப்புகுந்த அடியேன் இதனுடைய ஆழ்பொருள்களைச் செவ்வனே அறிந்துகொண்டேனென்பதில் அந்தரங்கம் அதிசங்கைகொண்டேயுள்ளது. ***அஜ்ஞாநாம் அஹமக்ரணீ:*** என்றிருக்குமடியேன் இதில் ப்ரவர்த்திப்பது ஸாஹஸமேயானாலும் பல மஹான்களின் நியமனத்தை அநிவார்யமாகக்கொண்டும் ஸ்ரீரங்கநாச்சியாருடையவும் பட்டருடையவும் பரமக்ருபையையே தஞ்சமாகக்கொண்டும் ப்ரவர்த்தியாநின்றேன்.

பெரிய பிராட்டியாருடைய திருக்கல்யாண குணங்களாகிற ரத்நங்களுக்கு இந்த க்ரந்தம் பொக்கிசம் போன்றிருத்தலால் இதற்கு **ஸ்ரீ குணரத்ந கோச** மென்று திருநாமமிட்டருளினர். இந்நூலில் அநுபவிக்கப்படாத பிராட்டியின் திருக்குணங்கள் வேறெங்கும் கிடைக்கமாட்டாவென்பது தாற்பரியம். இந்த ஸ்தோத்ரந்தன்னிலேயே (10) ***தேவி ச்ருதிம் பகவதீம் ப்ரதமே புமாம்ஸ: த்வத் ஸத்குணௌககமணி கோச க்ருஹம் க்ருணந்தி*** என்கிற ச்லோகத்தில் வேதங்களுக்கு ஸ்ரீ குணரத்ந கோசமென்று திருநாமமிடவேணுமென்று தமக்குத் திருவுள்ளமிருப்பதாகக் காட்டியருளுகிறார். அந்தத் திருநாமத்தையே தம்முடைய இந்த க்ரந்தத்திற்கு இட்டருளினபடியால் இது வேதம்போல் மதிக்கத்தக்கதென்கிற கருத்தும் வெளியாகும்.



இந்த ஸ்தோத்ரம் ஸ்ரீரங்கநாதனுக்கும் பரமபோக்யமானதென்னுமிடம் மேல் ***ச்ரிய: ஸ்ரீ: ஸ்ரீரங்கேசய*** என்கிற ஒன்பதாம் ச்லோகத்தின் பின்னடிகளால் தெற்றென விளங்கும். "பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடி, தென்னாவென்னு மென்னம்மான் திருமாலிருஞ் சோலையானே" (திருவாய்மொழி 10—7—5.) என்கிறபடியே எம்பெருமான் தானே தன்னுடைய குணாநுபவ ரூபமான திருவாய்மொழியை ஆழ்வார் பாடினதாக வைத்துப் பாடித் தானே ரஸாநுபவம் செய்தாப்போலே, பெரியபெருமாளும் தம் தேவியாருடைய பெருமைகளைத் தாமே பட்டர் திருவாக்கினால் பாடுவித்துக் காதாரக் கேட்டுக் களிப்பதாகத் தொனிக்கின்றதாயிற்று அந்த ச்லோகத்தினால்.

பட்டர் ஸ்ரீரங்கநாதன் விஷயமாக வருளிச்செய்த ச்லோக ராசிகளுள் நாலில் ஒரு பங்கேயாக இந்த லக்ஷ்மீஸ்துதி அமைந்தாலும் ***வைதக்த்ய வர்ணகுண கும்பந கௌரவம் யாஸ் கண்டூல கர்ணகுஹரா: கவயோ தயந்தி*** என்று இதுதன்னில் தாமே பருவிச் செய்யும்படியான ஏற்றம் இதுதனக்கே உரியதாகும். பிராட்டியை முற்படத்தொழுது பிறகு பெருமானைத் தொழவேணுமென்கிற சாஸ்த்ரார்த்தம் ஆச்ரயண காலத்தைப் பற்றியதேயன்றி ஸ்தோத்ர சமயத்தைப்பற்றியதன்றாதலால், ஸ்ரீரங்கராஜஸ்தவமருளிச்செய்தபிறகே இந்த ஸ்ரீ குணரத்நகோசமருளிச் செய்ததாயிற்று. ஸ்தோத்ர ரத்நத்திற்குப் பிறகு சதுச்ச்லோகி போலவும் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவாதிகளுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்தவம் போலவும். *

வியாக்கியான அவதாரிகை முற்றிற்று.

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீரஸ்து

श्रीरङ्गनायकी समेत श्रीरङ्गनाथपरब्रह्मणे नमः ॥

## ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த

# ஸ்ரீகுணரத்நகோசம்.

(ஸ்ரீ காஞ்சீ, பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய வியாக்கியானத்தோடு கூடியது)
(பட்டர் தனியன்)

*ஸ்ரீபராசரபட்டார்ய: ஸ்ரீரங்கேசபுரோஹித:,
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே.

### ஸ்தோத்ராரம்பம்.

**श्रियै समस्तचिदचिद्विधानव्यसनं हरेः ।**
**अङ्गीकारिभिरालोकैः सार्थयन्त्यै कृतोऽञ्जलिः ॥**

**ச்ரியை ஸமஸ்த சிதசித் விதாந வ்யஸநம் ஹரே:,**
**அங்கீகாரிபிராலோகைஸ் ஸார்த்தயந்த்யை க்ருதோஞ்ஜலி:,** (1)



**ஹரே: ஸமஸ்த சிதசித் விதாந வ்யஸநம்** — எம்பெருமானுக்குண்டான ஸகல சேதநா சேதநவஸ்து ஸ்ருஷ்டி ச்ரமத்தை, **அங்கீகாரிபி: ஆலோகை:**— அங்கீகார ஸூசகங்களான கடாக்ஷ வீக்ஷணங்களினால், **ஸார்த்தயந்த்யை ச்ரியை**— ஸபலமாக்குகின்ற பெரிய பிராட்டியார்க்கு, **அஞ்ஜலி: க்ருத:**— ஓரஞ்ஜலி செயயப்பட்டது என்கை.

பட்டர் ஸ்தோத்ரம் தொடங்கும் போதே ஒரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டுக் கொண்டே தொடங்குகிறார். ஜகத் வ்யாபாரத்தில் எம்பெருமானுக்கே அந்வயமுள்ளதென்றும் தத்ஸாக்ஷித்வ மாத்ரமே பிராட்டிக்கு உள்ளதென்றும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தமாகையாலே அதனை இதில் வெளியிட்டருளுகிறாராயிற்று. ஜகத் வ்யாபார ச்ரமமெல்லாம் எம்பெருமானுக்கேயுள்ளதென்பது பூர்வார்த்தத்தில் விளக்கப்பட்டது. பிராட்டி உடனிருந்து அநுக்ரஹிக்குமவளென்பது உத்தரார்த்தத்தில் விளக்கப்பட்டது.

ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் (44) * **ப்ரலய ஸமய ஸுப்தம் ஸ்வம் சரீரைகதேசம் வரத! சிதசிதாக்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணந:, கசிதமிவ கலாபம் சித்ரமாதத்ய தூந்வந் அநுசிகிநி சிகீவ க்ரீடஸி ஸ்ரீ ஸமக்ஷம்** * என்ற ச்லோகத்தில் விரிய வருளிச்செயத வர்த்தத்தை இங்குச் சுருங்க அருளிச்செய்தாராயிற்று. அந்த ச்லோகத்தின் கருத்தாவது— பிரளய காலத்தில் உறக்கங்கொண்டதுபோல் ஒடுங்கிப்போய் தேவரீருடைய திருமேனியில் ஏகதேசமாய்க்கிடந்த சேதநாசேதநப்பொருள்களை ஸ்வஸங்கல்பத்தினாலேயே விவித விசித்ர ஜகதாகாரேண பரிணமிப்பியா நின்று தேவரீர் பிராட்டியின் திருமுன்பே விளையாடாநின்றீர்; இந்த விளையாட்டு எங்ஙனே

---

*: **இத்தத்தனியனுக்கு விரிவான வியாக்கியானம் எமது ஸ்ரீரங்கராஜஸ்தவ வியாக்கியானத்தொடக்கத்திற் காண்க.**

**யிராநின்றதென்னில்**, ஆண்மயிலானது தன்னுடலுக்குள்ளே யொடுங்கியிருக்கின்ற தோகைகளை நன்கு விரித்துப் பேடையினெதிரே யாடுவது போன்றிரா நின்றது— என்கை. இந்த மயில் த்ருஷ்டாந்தமிட்டதனால் கிடைப்பதொரு தத்துவமுண்டு; கலாபம் ஆண் மயிலுக்கு உண்டேயல்லது பெண் மயிலுக்குக் கிடையாது. அதுபோல் ஜகத் வ்யாபாரமும் எம்பெருமானுக்கே யுள்ளதென்பதாம்.

கூரத்தாழ்வானும் ஸ்ரீஸ்தவத்தின் முதல் ச்லோகத்தில் ***யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தே அகிலம்*** என்றார். தேசிகனும் ஸ்ரீஸ்துதியில் * **யத் ஸங்கல்பாத் பவதி கமலே!** * என்ற ச்லோகத்தில் இந்த ஸித்தாந்தந்தன்னையே தழுவி யருளினார்.

இந்த ஸ்ரீகுணரத்ந கோசம் விசேஷித்து ஸ்ரீரங்கநாச்சியாரை நோக்கியே அவதரித்ததாகையாலும், இதில் **"ஸார்த்தயந்த்யை"** என்று வர்த்தமாநப்ரயோகம் செய்திருக்கையாலும் இதற்குச் சேர இந்த ச்லோகத்தின் பொருளை நிர்வஹிக்கிற புடையொன்றுண்டு; அதாவது, எம்பெருமான் ஜகத் ஸ்ருஷ்டி செயதருளும்போது பிராட்டி ஸாக்ஷிணியாயிருக்கிறாளென்பது இங்குச் சொல்லப்படுவதன்று; இவ்விஷயம் மேலே ***யத்ப்ரூபங்கா: ப்ரமாணம்*** என்கிற ச்லோகத்தின் முதல் பாதத்திலே சொல்லப்படுகிறது; இங்குச் சொல்லுகிறதாவது— ஸ்ரீரங்கநாச்சியாரான இந்தத் திருக்கோலத்தின் அதிசயமே சொல்லப்படுகிறது. இவளுடைய ஸந்நிதியிலே வந்து புகுமவர்களை இவள் காருண்ய த்ருஷ்டியோடே கடைக்கணித்து அங்கிகரித்தருள்வுதனால் எம்பெருமான் தன்னுடைய ஜகத் ஸ்ருஷ்டிச்ரமம் ஸபலமானதாகத் திருவுள்ளம் பற்றுகிறானாம். இப்பொருள் **ஸார்த்தயந்த்யை** என்கிற வர்த்தமாந நிர்த்தேசத்திற்கு மிகவுமிணங்கும். ஸ்ரீரங்கநாச்சியாருடைய அங்கீகாரஸூசககடாக்ஷாம்ருத தாரைகளுக்கு இலக்காவதே சேதநா சேதந ஜந்ம ஸாபல்யமென்று சொல்லிற்றாயிற்று. (1)

**उल्लासपल्लवितपालितसप्तलोकी निर्वाहकोरकितनेमकटाक्षलीलाम्।**
**श्रीरङ्गहर्म्यतलमङ्गलदीपरेखां श्रीरङ्गराजमहिषीं श्रियमाश्रयामः ॥२॥**

**உல்லாஸ பல்லவித பாலித ஸப்தலோகீ**
**நிர்வாஹ கோரகித நேம கடாக்ஷ லீலாம்,**
**ஸ்ரீரங்க ஹர்ம்யதலமங்கள தீபரேகாம்**
**ஸ்ரீரங்கராஜமஹிஷீம் ச்ரியமாச்ரயாம:** (2)

**உல்லாஸ பல்லவித**— (ஸப்த லோகங்களின்) ப்ராதுர்ப்பாவத்தினால் தளிர் பெற்றதும், **பாலிதஸப்தலோகீ நிர்வாஹகோரகித**— ஸம்ரக்ஷிக்கப்பட்ட ஏழுலகங்களின் நிர்வாஹத்தாலே ஸஞ்ஜாத கோரகமுமான, **நேம கடாக்ஷ லீலாம்**— அரையுமான கடாக்ஷ வீக்ஷண லீலையையுடையவளாய், **ஸ்ரீரங்கஹர்ம்யதல மங்கள தீபரேகாம்**— ஸ்ரீரங்க திவ்ய விமானப்ரதேசத்திற்கு மங்கள தீபஜ்வாலை போன்றவளாய், **ஸ்ரீரங்கராஜமஹிஷீம்**— ஸ்ரீரங்கநாதனுடைய திவ்யமஹிஷியாயிருக்கின்ற, **ச்ரியம்**— ஸ்ரீரங்கநாயகியை, **ஆச்ரயாம:**— சரணமடைகின்றோம்.

அடியேன் இந்த ஸ்தோத்ரத்திற்கு வெகுநாளைக்கு முன்னமே உரையெழுத நினைத்தும் இதுவரை பெறாதிருந்ததற்குக் காரணமொன்றுண்டு; **அதாவது,**

இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்திற்குப் பரமக்ருபாதிசயமாகப் பொருள் உணரப் பெருமையே. ஈற்கெனவே சிலர் வியாக்கியானமெழுதி யிருந்தாலும், பொருளும் கருத்தும் அவகாஹிக்கப்பெறுகின்றிலோம். உல்லாஸமென்னுஞ் சொல் ச்லோகத்தின் ஆதியிலுள்ளது. எதினுடைய உல்லாஸமென்றால் ஸப்த லோகியின் உல்லாஸமென்று சொல்லவேணும். அந்த ஸப்த லோகிபதம் முன்னேயிருக்கவேண்டியது தான் அந்வயத்திற்கு யோக்யமானது. அது முதற்பாதத்தின் முடிவில் உள்ளது. ஸப்த லோகியின் உல்லாஸத்தாலே பல்லவிதமாயும், ஸப்த லோகியின் நிர்வாஹத்தாலே கோரகிதமாயுமுள்ள கடாக்ஷ லீலையையுடையவள் என்னும் பொருள் விவக்ஷிதமாகில் ச்லோக விந்யாஸம் இப்போதிருக்கிற ரீதியில் இருக்க நியாயமில்லை. ஸப்த லோகிக்கு 'பாவித' என்றொரு விசேஷணமிருப்பதும் ஸ்வரஸமாக அந்வயிக்கவில்லை. அன்றியும், ஆழ்வானருளிச் செய்த ஸ்ரீஸ்தவத்தில் *யஸ்யா: கடாக்ஷம்ருது வீக்ஷண தீக்ஷணேந ஸத்யஸ் ஸமுல்லஸித பல்லவ முல்லலாஸ* என்றுள்ள ச்லோகத்தின் சாயையில் இந்த ச்லோக மருளிச்செய்யப்பட்டது போல் தோன்றுகிறது. அங்கு "ஸமுல்லஸித பல்லவம்" என்றிருப்பதையும், இங்கு "உல்லாஸ பல்லவித" என்றிருப்பதையும் உற்று நோக்குங்கால் இரண்டின் சாயையும் ஒன்றாகவே தோன்றுகின்றது. ஆனால், ஆழ்வான் *ஸமுல்லஸித பல்லவம்* என்று ஸாதித்தது உலகத்தில் அந்வயிக்கிறது. இங்கு *உல்லாஸ பல்லவித* என்று இவரருளிச் செய்தது கடாக்ஷ லீலையில் அந்வயிக்கிறது. ஆகவே அதற்குமிதற்கும் ஸம்பந்தமில்லை போலவும் தோன்றுகின்றது. ஆழ்வான் ஸ்ரீஸூக்தி எப்படியாவதிருக்கட்டும், ப்ரக்ருத ச்லோகத்தைத் தனியே அந்வயித்துக்கொள்வோமென்று பார்க்கில் அந்த:கரணத்ருப்திகரமாகப் பொருள் விளங்கவில்லை. உலகமெல்லாம் இவ்விதமாகவே அநுஸந்தித்துக் கொண்டிருக்கையாலே பாடஸ்கலனம் சிந்திக்கவும் இடமில்லை. ஆகவே ஒருவாறு வியாக்கியானிக்கப்படுகிறது.

ஸ்ரீரங்கநாச்சியாரின் நேம கடாக்ஷ லீலையினால் ஸப்த லோகமும் உத்பத்தியையும் ரக்ஷணத்தையும் பெறுகின்றதாம். அப்படி உத்பத்தி பெறுங்காலத்தில் கடாக்ஷ லீலையானது பல்லவாவஸ்தையிலிருக்கும்; ரக்ஷணம் பெறுங்காலத்தில் கோரகத்தின் (முகுளத்தின்) அவஸ்தையிலிருக்கும். **நேம** என்றது **அர்தம** என்றபடி. பெண்மைக்குத் தக்கபடி திருக்கண்களைப் பூர்த்தியாக விழித்துக் கடாக்ஷிக்கை யன்றிக்கே அரைகுறை நோக்காகக் கடாக்ஷிப்பதன் பெருமையே இங்கு வருணிக்கப்படுகிறபடியால் மேல் புஷ்பாவஸ்தைக்குச் செல்லாதே கோரகாவஸ்தையோடு நிறுத்தப்பட்டது. ஆக ஸப்த லோகியையுண்டாக்கிப் பாதுகாக்கும் கடாக்ஷ மஹிமையையுடையவள் ஸ்ரீரங்கநாயகியென்றதாயிற்று.

**ஸ்ரீரங்க ஹர்ம்யதலமங்கல தீபரேகாம்**— ஸ்ரீரங்கவிமானத்தருகே திருவிளக்கேற்றிவைத்தாற்போலேயிராநின்றாளென்கை. அங்கு இருளைப் போக்கவேண்டித் திருவிளக்கேற்றி வைக்க ப்ரஸக்தி யில்லாமையாலே மங்கள தீபமென்றது.

**ஸ்ரீரங்கராஜமஹிஷீம்** — **ஸ்ரீரங்கநாதனோடுகூட** ஸாம்ராஜ்யா பிஷிக்தையாய்க் கொண்டு ரக்ஷிக்குமவளென்றபடி. இப்படிப்பட்ட ஸ்ரீயை ஆச்ரயிக்கிறோமென்றதாயிற்று. (2)

**अनुकलतनुकाण्डालिङ्गनारम्भशुम्भत् प्रतिदिश भुजशाख श्रीसखानोकहर्द्धिः ।**
**स्तननयनगुलुच्छस्फारपुष्प द्विरेफा रचयतु मयि लक्ष्मीकल्पवल्ली कटाक्षान् ॥३॥**

*அநுகல தநுகாண்டாலிங்காரம்பசும்பத்*
*ப்ரதிதிசபுஜசாக ஸ்ரீஸகா நோகஹர்த்தி:,*
*ஸ்தநநயந குளுச்சஸ்பாரபுஷ்ப த்விரேபா*
*ரசயது மயி லக்ஷ்மீகல்பவல்லீ கடாக்ஷாந்.* (3)

ஸ்ரீரங்கநாச்சியாரைக் கற்பகக் கொடியாக ரூபிக்கிறாரிதில். உலகில் கொடியானது ஒரு விருக்ஷத்தின் மேல் படருமாபோலே இக்கொடியும் ஸ்ரீரங்கநாதனாகிற கல்ப வ்ருக்ஷத்தின்மேற்படராநின்றது. லோகத்தில் விருக்ஷத்தின்மேல் கொடிபடருவதனால் கொடிக்கு அபிவிருத்தியேயொழிய விருக்ஷத்திற்கு அபிவிருத்தியென்பது கிடையாது. ப்ரக்ருதத்திலோவென்னில், பிராட்டியாகிற கொடி தன்மேல் படர நினைத்தவாறே ஸ்ரீரங்கநாதனாகிற விருக்ஷம் சதசாகமாகப் பணைக்கின்றதாம். *தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய்* என்று எம்பெருமானுக்குச் சொல்லப்படுகிற விசேஷம் இயற்கையன்றிக்கே அபிமதஜநஸம்ச்லேஷ நிபந்தநமாயிருக்கும்.

**அநுகலம்** என்றது 'அநுக்ஷணம்' என்றபடி. இது, மேலே **சும்பத்** என்ற சோபநக்ரியையில் அந்வயிக்கும். தநுகாண்டாலிங்கன ஆரம்பத்தாலே அநுக்ஷணம் வளர்கின்ற புஜசாகைகளையுடையதாம் ஸ்ரீரங்கநாதனாகிற கல்பவ்ருக்ஷம். **தநுகாண்ட** மென்று ஸ்ரீரங்கநாதனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைச் சொன்னபடி. அதனைத் தழுவ வேணுமென்று பிராட்டியார் உத்யோகித்தவளவிலேயே அந்த திவ்ய மங்கள விக்ரஹமாகிற கற்பகத்தருவிலே புஜங்களாகிற சாகைகள் திசைகள் தோறும் பணைக்கின்றனவாம். இங்ஙனே பணைக்கச்செய்யவல்ல பெருமையையுடையது ஸ்ரீரங்க நாயகியாகிற கற்பகக்கொடி. **दिशासुदिशासु प्रतिदिशम् । सर्वासु दिशासु** என்றபடி. சதுர்ப்புஜனை எம்பெருமானுடைய நான்கு புஜங்களும் நான்கு திசைகளிலும் பணைக்கத் தொடங்கி சதஸஹஸ்ரமாகப் பணைத்தபடி. * **वृक्ष इव स्तब्धो दिवि तिष्ठत्येकः** * * **वासुदेवतरुच्छाया** * என்கிற பிரமாணங்களைத் தழுவி எம்பெருமானை அநோகஹ மென்றது. அநோகஹமென்று வ்ருக்ஷத்துக்குப் பெயர்.

இந்த கற்பகக்கொடி இன்னமும் எப்படிப்பட்டதென்னில்; **[ஸ்தநநயநகுளுச்ச ஸ்பாரபுஷ்பத்விரேபா]** உலகில் கொடியிலே பூங்கொத்தும பூவிற்படிந்த வண்டுகளுமிருக்குமே. இங்கும் அப்படியே யிராநின்றதென்கிறார். பிராட்டியாருடைய ஸ்தநங்கள் பூங்கொத்துக்களாகவும் திருக்கண்கள் புஷ்பங்களாகவும், கருவிழிகள் பூவிற்படிந்த வண்டுகளாகவும் கொள்ளப்பட்டனவென்க. குளுச்ச மென்று பூங்கொத்துக்குப் பெயர்; ஸ்தநமாகிற குளுச்சத்தையும், நயநமாகிற ஸ்பார புஷ்ப த்விரேபத்தையுமுடையதென்று யதாக்ரமம் அந்வயமாகக்கடவது. **ஸ்பாரபுஷ்பம்**— விகஸித புஷ்பம். **த்விரேபம்**-வண்டு. வண்டுக்கு **வாசகமான (ப்ரமர)** என்னுஞ் சொல்லில் இரண்டு ரேபங்கள் **(ரகரங்கள்)** இருக்கிறபடியாலே **த்விரேப**மென்று வண்டுக்குப் பெயராயிற்றென்று சொல்லுவதுண்டு.

ஆக இப்படிப்பட்ட, லக்ஷ்மீகல்பவல்லீ மயி கடாக்ஷாந் ரசயது— ஸ்ரீரங்க நாயகியாகிற கற்பகக்கொடி என்னைக் கடாக்ஷித்தருளவேணுமென்றாராயிற்று. கடாக்ஷ வீக்ஷணம் செய்கிற ஸாமர்த்தியம் லக்ஷ்மிக்கு உண்டேயல்லது கற்பகக்கொடிக்கு ஸம்பாவிதமன்றே; ஆகவே "கல்பவல்லீ கடாக்ஷாந் ரசயது" என்று எங்ஙனே சொல்லலாமென்று சங்கையுண்டாகும். இங்கே பரிணாமாலங்காரமென்று கொண்டால் சங்கா பரிஹாரமாகும். * **परिणामः क्रियार्थश्चेत् विषयी विषयात्मना** * என்பது பரிணாமாலங்காரத்தின் லக்ஷணம். * **प्रसन्नेन दृगब्जेन वीक्षते मदिरेक्षणा** * என்பது லக்ஷ்யம் (3)

**यद्भ्रूभङ्गाः प्रमाणं स्थिरचररचनातारतम्ये मुरारेः वेदान्तास्तत्त्वचिन्तां मुरभिदुरसि यत्पादचिह्नैस्तरन्ति ।**
**भोगोपोद्घातकेलीचुलकितभगवद्वैश्वरूप्यानुभावा सा नः श्रीरास्तृणीताममृतलहरिधीलंघनीयै रपाङ्गैः ॥४॥**

யத்ப்ரூபங்கா: ப்ரமாணம் ஸ்திரசர ரசநாதாரதம்யே முராரே:
வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாத சிஹ்நைஸ் தரந்தி,
போகோபோத்காத கேளீசுலகித பகவத்வைச்வரூப்யா நுபாவா
ஸா ந: ஸ்ரீராஸ்த்ருணீதாம் அம்ருத லஹரிதீ லங்கநீயை ரபாங்கை: (4)

ஸ்ரீரங்கநாச்சியார் அமுதப்பெருக்கான தம்முடைய கடாக்ஷ வீக்ஷணங்களாலே நம்மை அபிஷேகம் செய்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறார் இதில். நாச்சியாருக்குள்ள மூன்று விசேஷங்களை மூன்று பாதங்களாலே அருளிச்செய்கிறார்.



**முராரே: ஸ்திர சரரசநா தாரதம்யே யத்ப்ரூபங்கா: ப்ரமாணம்—** எம்பெருமான் செய்தருளும் ஸ்தாவர பதார்த்த ஸ்ருஷ்டியிலும் ஜங்கம பதார்த்த ஸ்ருஷ்டியிலும் பலவகையான தாரதம்யம் காண்கிறது; இதற்குப் பிராட்டியின் புருவநெறிப்பே காரணமென்கிறது. தாரதம்யமாவது – நீசோச்சபாவம். ஸ்தாவர பொருள்களில் நீசோச்ச பாவமாவது—கள்ளிச்செடி, நுணாமரம், வேப்பமரம், வேங்கைமரம் என்றிப்படிப்பட்ட மரங்கள் க்ஷுத்ரங்களாகவும், மகிழமரம், பாரிஜாதமரம், தேன்மாமரம், சந்தனமரம் என்றிப்படிப்பட்டவை உத்துங்கங்களாகவுமிருக்கை. ஸ்தாவர பதார்த்தங்களில் இப்படி பல்லாயிரம் வகுப்பில் பலவகையான தாரதம்யம் காணலாம். இனி ஜங்கம பதார்த்தங்களில் தாரதம்யமாவது தேவமநுஷ்ய திர்யகாதிரூபேண பேதங்களும், இவற்றினுள்ளும் ப்ரஹ்மாதி பிபீலிகாந்தமாகக் காணும் வஸ்துக்களிலுண்டான பல வகைப்பட்ட நீசோச்சபாவமும். ஆக இப்படிப்பட்ட தாரதம்யத்தில் நிதாநம் பிராட்டியின் புருவ நெறிப்பென்கிறது. ஆழ்வானும் ஸ்ரீஸ்தவத்தின் முதல் ச்லோகத்தில் * யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே அகிலம் * என்றருளிச்செய்தார். இவ்வாசிரியர்தாமும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே * நம: ஸ்ரீரங்கநாயக்யை யத்ப்ரூவிப்ரம பேதத:, ஈசேசிதவ்ய வைஷம்யநிம்நோந்நதமிதம் ஜகத் * என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். இங்கு வக்தவ்யங்களெல்லாம் அவ்விடங்களில் நம்முடைய வியாக்கியானங்களிலே சொன்னோம்.

**வேதாந்தா: முரபிதுரஸி யத்பாத சிஹ்நை: தத்வ சிந்தாம் தரந்தி—** தத்வ நிர்ணயம் பண்ணவந்த உபநிஷத்துக்களுக்கும் எது பரதத்வம் என்று விசிகித்ஸை யுண்டாயிற்றாம்; ஸ்ரீமந்நாராயணனுடைய திருமார்பில் லக்ஷ்மீபாத லாக்ஷாரஸாங்கத்தைக்கண்டு இவனே பரதத்வமென்று அறுதியிட்டனவாம் அவ்வுபநிஷத்துக்கள். ஒரு பக்கத்தில் சிவனையும், மற்றொரு பக்கத்தில் பிரமனையும், இன்னொரு பக்கத்தில் இந்திரனையும் பரதத்வமாகப் பேசிக் காடுபாய்ந்த வேதாந்தங்கள் ***ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ***

— ஹ்ரீச் ச தே லக்ஷ்மீச் ச பத்ந்யௌ * என்று லக்ஷ்மீபதித்வத்தை யிட்டு நாராயணனுக்கே பாரம்யத்தை நிஷ்கர்ஷித்தனுவென்றபடி. *பொல்லாத தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத்தேவரைத் தேறேன்மின்தேவு* (நான்முகன் திருவந்தாதி) என்று திருமழிசைப் பிரானுடைய நிஷ்கர்ஷமே உபநிஷத்துக்களுக்கும் நிஷ்கர்ஷமாயிற்றென்க. இப்படி தன்னுடைய ஸம்பந்தத்தாலே எம்பெருமானுக்கும் பாரம்யத்தை விளக்கும்படியான பெருமை வாய்ந்தவள் பிராட்டியென்றதாயிற்று. இங்கு "யத்ஸம்பந்தேந தத்வசிந்தாம் தரந்தி" என்னுமல் "யத்பாத சிஹ்நை:" என்றது திவ்யதம்பதிகளுக்குண்டான ப்ரணயகேளிபரிமாற்றங்களை யநுஸந்தித்துச் சொன்னபடி. *லக்ஷ்மீசரணலாக்ஷாங்க ஸாக்ஷி ஸ்ரீவத்ஸவக்ஷஸே* என்றன்றோ நம் ஆசார்யர்கள் பணிக்கும் பரிசு.

**போகோபோத்காத கேளீ சுலகித பகவத்வைச்வரூப்யாநுபாவா**— ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் *ஸ்வவைச்வரூப்யேண ஸதா அநுபூதயாபி அபூர்வவத் விஸ்மய மாததாநயா* என்றருளிச் செய்ததை சமத்காரமாக விவரிக்கிறபடியாயிற்றிது. பிராட்டியை அநுபவிக்கக் காதல்கொண்ட எம்பெருமான் தன்னுடைய சில அவயவங்களால் அநுபவிக்கப்போராதென்று திருவுள்ளம்பற்றித் தன் அவயவங்களை ஆயிரமாயிரமாகப் பணைக்கச் செய்து [விச்வரூபமெடுத்து] அனுபவிக்கப் புகுகிறுனும்; அந்த அவயவப்பரப்புதானும் அநுபவஉபக்ரமத்திலேயே அஸத்கல்பமாயொழிகின்றதாம். இதனல் பிராட்டியுடைய வைதக்த்யாதிசயம் சொன்னபடி. * அல்லி மலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்* என்று ஆழ்வாரருளிச் செய்ததற்கும் இதுவொரு வியாக்கியானமாகும். இந்த ஸ்தோத்ரத்தின் முடிவிலும் *தசசதபாணிபாத* என்று தொடங்கியுள்ள ச்லோகம் முழுவதாலும் இவ்விஷயமே விவரிக்கப்படுகின்றமை காண்க.

மிதிலாபுரியில் ஸீதாபிராட்டியின் விவாஹ காலத்தில் அங்குக் குழுமின ஜனங்கள் சொன்ன பேச்சுக்களைக் கம்பர் தம்முடைய ராமாயணத்தில் ஒரு அற்புதமான செய்யுளினுல் பேசுகிறுர் "நம்பியைக்காண நங்கைக்கு ஆயிரநயனம் வேண்டும்" என்று இராமனுடைய பக்ஷத்தைச் சேர்ந்தவர்கள் சொன்னுர்களாம்; அதாவது இராமனது வடிவழகைக் காண்பதற்கு ஸீதாபிராட்டிக்கு இரண்டு கண்கள் போதா; ஆயிரங்கண்கள் வேண்டும் என்றபடி. இதைக்கேட்டுப் பிராட்டியின் பக்ஷத்தவர்கள் சொன்னுர்களாம் "கொம்பினைக் காணுந்தோறும் குரிசிற்கு மன்னதேயாம்" என்று. அதாவது, இராமனுடைய வடிவழகு முழுவதையும் காண்கைக்கு ஸீதைக்கு ஆயிரம் கண்கள் வேண்டுமென்றது உண்மையாகவேயிருக்கட்டும்; பிராட்டியின் ஒவ்வொரு வடிவையும் காண்பதற்கு இராமன் ஆயிரம் கண்கள் படைக்கவேண்டும் என்றபடி. இப்பொருள் **"காணுந்தோறும்"** என்ற சொல்லாற்றலால் கிடைக்கின்றது. இவ் விஷயம் இவ்விடத்திற்குப் பொருத்தமாக அநுஸந்திக்கத்தக்கது.

விச்வரூபமென்றாலும் வைச்வரூப்யமென்றாலும் ஒக்கும். ஸ்வார்த்தே ஷ்யஞ் ப்ரத்யயம் என்றுணர்க. * चातुर्वर्ण्यादीनामुपसंख्यानम् * என்பது வியாகரணம்.

ஆக மூன்று பாதங்களினலும் சொல்லப்பட்ட பெருமையைத் தொகுத்து ஸா என்கிறுர். அப்படிப்பட்ட ஸ்ரீரங்கநாயகி. [அம்ருத லஹரீ லேங்கநேயை: அபாங்கை:

**ந: ஆத்ருணிதாம்]** அம்ருதப்ரவாஹமென்கிற புத்தியோடே ப்ராப்யங்களான கடாக்ஷவீக்ஷணங்களினால் நம்மை ஆச்சாதநம் செய்யவேணும்; அதாவது, பரிபூரண கடாக்ஷம் செய்தருளவேணுமென்கை. ... ... ... ... (4)

**यद्यावत्तव वैभवं तदुचितस्तोत्राय दूरे स्पृहा**
**स्तोतुं के वयमित्यदश्च जगृहुः प्राञ्चो विरिञ्चादयः ।**
**अप्येवं तव देवि वाङ्मनसयोर्भाषानभिज्ञं पदं**
**कावाचः प्रयतामहे कवयितुं स्वस्ति प्रशस्त्यै गिराम् ॥५॥**

**யத் யாவத் தவ வைபவம் தது3சிதஸ்தோத்ராய தூ3ரே ஸ்ப்ருஹா**
**ஸ்தோதும் கே வயமித்யத3ச்ச ஜக்3ருஹு: ப்ராஞ்சோ விரிஞ்சாத3ய:**
**அப்யேவம் தவ தே3வி! வாங்மநஸயோர் பாஷாநபிஜ்ஞம் பத3ம்**
**காவாச: ப்ரயதாமஹே கவயிதும் ஸ்வஸ்தி ப்ரசஸ்த்யை கி3ராம்.** **(5)**

I am incompetent to praise You or even to want to do so — Because Your auspicious qualities are incalculable even to Brahma downwards

*பிறையேறு சடையானும் பிரமனுமிந்திரனும்* என்னப்பட்ட மேலாத்தேவர்களுக்குங்கூட நிலமல்லாத ஸ்ரீரங்கநாச்சியாரின் வைபவத்தை நீசனேன் நிறையொன்றுமிலேன் பேசப்புகுவது மஹத்தான ஸாஹஸமென்று நைச்யாநுஸந்தானம் பண்ணிக்கொள்ளுகிறார் இதில்.

**[ஹே தேவி! தவ வைபவம் யத் யாவத்]** பெரிய பிராட்டியாரே! உம்முடைய வைபவம் எப்படிப்பட்டதோ, எவ்வளவிற்றோ; அஃதொன்றுமறியேன் நான். வைபவத்தைப் பன்னியுரைப்பதுதானே ஸ்தோத்ரம் செய்வதாவது; வைபவம் இத்தகைத்தென்பதையே அறியப் பெறாதவனன்றோ அடியேன். **[தநுசிதஸ்தோத்ராய ஸ்ப்ருஹா தூரே]** தேவரீருடைய அந்த வைபவத்திற்குத் தகுதியாக ஸ்தோத்ரம் செய்ய ஆசைப்படுவதற்கும் நான் அதிகாரியல்லேன் என்கை. ஸ்தோத்ரம் செய்வதென்பது ஒருபுறமிருக்கட்டும். அதில் ஆசை கொள்வதற்காவது நான் அதிகாரியோவென்று பார்த்தால் அதுவுமில்லை-என்று சொல்லுகிறவிதனால் பிராட்டி வைபவத்தின் ஒப்புயர்வற்ற பெருமை சொல்லிற்றாயிற்று.

பிரமன் முதலிய தேவர்கள் என்பெருமையைத் துதிக்கவில்லையோ? அப்படி நீரும் துதிக்கத் தட்டுண்டோவென்று பிராட்டி திருவுள்ளம் பற்றுவதாகக் கொண்டு இரண்டாவது பாதமருளிச் செய்கிறார் **[ப்ராஞ்ச: விரிஞ்சாதயச்ச ஸ்தோதும் கே வயமிதி அத: ஜக்ருஹு:]** பிரமன் முதலான முன்னையமரர்கள் தேவரீருடைய ஸ்துதியில் இழிந்திலர்களென்று சொல்லுகின்றிலேன்; ஸ்துதிக்க இழிந்தவர்களே அவர்கள்; ஆனால் என்னவென்று சொல்லி இழிந்தார்களென்று பார்க்கில், **ஸ்தோதும் கே வயம்**— தேவரீரைத் துதிக்க நாங்கள் எவ்வளவிலோம்! என்று தங்களுடைய அநதிகாரத்தை வாய்வெருவிக் கொண்டேயிழிந்தார்கள். அவர்களுடைய பாசுரமே அதுவானால் என்னைப்போன்ற அறிவிலிகள் அருகுவருவதற்கும் ப்ரஸக்தியில்லையன்றோ என்பதாக சேஷபூரணம் செய்து கொள்வது. **அத:**- இந்த ஸ்துதிசெய்வதாகிற காரியத்தை, **ஜக்ருஹு:**- பரிக்ரஹித்தார்கள் என்றபடி.

அப்யேவம்— ஏவமபி; இவ்விஷயத்தை யாம் நன்கறிந்திருக்கச் செய்தேயும் என்று கருத்து. [காவாச: வயம்] ஆத்மநி பஹுவசநமாய் ஏகவசநார்த்தமே பெற்றுக் கிடக்கிறது. குத்ஸிதவாக்கையுடைய அடியேன் என்றபடி. சொற்சுவையும் பொருட்சுவையுமின்றிக்கே வாய்வந்தபடி பிதற்றுமவனான நான் என்கை. குத்ஸிதமென்னும் பொருளில் குசப்தமாய் அதற்கு காதேசம் ப்ராப்தமாயிருக்கின்றது; * ईषदर्थे च * என்பது அநுசாஸநம். [வாங்மநஸயோ: பாஷாநபிஜ்ஞும் தவ; பதம் கவயிதும் ப்ரயதாமஹே] வாக்குக்கும் மநஸ்ஸுக்கும் எட்டாததான தேவரீருடைய ஸ்வரூபத்தைப் பற்றிக் கவி செய்யப்புகா நின்றேனந்தோ!. பத மென்றது ஸ்வரூபமென்றபடி, மநச்சப்தம் ஸகாராந்த மானாலும் அது வாக்சப்தத்தோடு சேர்ந்து ஸமாஸமடையும்போது 'வாங்மநஸ' என்று அகாராந்த சப்தமாகிறது. *அசதுரவிசதுரே* த்யாதி வியாகரணமறிக. (பாஷாநபிஜ்ஞும்) என்பதற்கு-பரிச்சேதிக்கவரிது என்பது பரமதாற்பரியம்.

[ஸ்வஸ்தி ப்ரசஸ்த்யை கிராம்—கிராம் ப்ரசஸ்த்யை ஸ்வஸ்தி] நல்ல வாக்குக்கள் என்வாயில் புகுந்து கெட்டுப்போகாமே அவற்றின் பெருமை பொலிக. அநதிகாரியானவொருவன் வேதத்தைச் சொல்லப்புகுந்தால் அந்த வேதவாக்கியங்கள் காது கொண்டு கேட்கவொண்ணாதபடி சீர்குலைந்து கெடுமன்றோ; அப்படி என்வாயிற் புகுந்து நல்ல வாக்குக்கள் நிலைகுலைந்து போகாமே நலங்கெடாமே நன்குவாழ்கவென்று அவற்றுக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறார். இதுவொரு விலக்ஷணமான நைச்யாநுஸந்தானவிறு. ... (5)

स्तोतारं तमुशन्ति देवि कवयो यो विस्तृणीते गुणान्
स्तोतव्यस्य, ततश्च ते स्तुतिधुरा मय्येव विश्राम्यति ।
यस्मादस्मदमर्षणीय फणिति स्वीकारतस्ते गुणाः
क्षान्त्यौदार्यदयादयो भगवति! त्वां प्रस्नुवीरन् प्रथाम् ॥ ६ ॥

ஸ்தோதாரம் தமுசந்தி தேவி கவயோ யோ விஸ்த்ருணீதே குணாந்
ஸ்தோதவ்யஸ்ய, ததச்ச தே ஸ்துதிதுரா மய்யேவ விச்ராம்யதி,
யஸ்மாதஸ்மதமர்ஷணீயபணிதிஸ்வீகாரதஸ் தே குணா:
க்ஷாந்த்யௌதார்யதயாதயோ பகவதி ஸ்வாம் ப்ரஸநுவீரந் ப்ரதாம். (6)

***பெரிய பிராட்டியாரை ஸ்துதிப்பதற்குத் தாம் அநதிகாரி யென்றார் கீழ்ச்லோகத்தில்; அப்படியானால் இனி வாய்மூடி நிற்க வேண்டியதொழிய வாய் திறந்தொன்று பணிக்க ப்ரஸக்தியில்லையே யென்ன, பெரிய பிராட்டியாரை ஸ்துதிப்பதில் தம்மொருவர்க்கே அதிகார பூர்த்தி யுள்ளதென்று ஒரு சமத்காராதிசயந் தோற்ற அருளிச் செய்கிறாரிதில்.

[தேவி! தே ஸ்துதிதுரா மய்யேவ விச்ராம்யதி] பெரியபிராட்டியாரே! தேவரீரை ஸ்துதிப்பதென்னும் காரியத்தில் அடியேனொருவனே துரந்தரனாயிருக்கக்கடவேன்; என்னைத் தவிர்த்து மற்று யாரும் தேவரீரை ஸ்துதிப்பதில் அதிகாரம் வஹிக்க இயலாது என்றபடி. 'உம்மை ஸ்துதிக்க நான் அநதிகாரியென்பதும், உம்மை ஸ்துதிக்க நானே அதிகாரியென்பதும் பரஸ்பரவ்யாஹத பாஷணமாயிருந்ததே! இம்

ச்லோகம் சொல்லும்போது அவித்வானாயிருந்து இப்போது வித்வானாய் விட்டீரோ?' என்ன; அதுவொன்றுமில்லை, நான் ஆலோசியாமல் அநதிகாரியென்றேன்; ஆலோசித்தவளவில் நானே அதிகாரியென்று தோற்றிற்று; அதை விரிய விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன், கேளீர் என்கிறார்.

[ய: ஸ்தோதவ்யஸ்ய குணாந் விஸ்த்ருணீதே, தம் ஸ்தவய: ஸ்தோதாரமாசக்ஷதே] உலகில் ஒருவனை ஸ்தோதா வென்று சொல்லுவது எதனாலே யென்று பார்க்க வேணும்; ஸ்தோதா என்பதற்கு ஸ்தோத்ரம் பண்ணுகிறவனென்று பொருள், இந்தப் பெயர் எவனுக்கு வழங்குகிறதென்னில், எவனைக்குறித்து ஸ்தோத்ரம் செய்யவேணு மென்று இழிகிறானோ, அவனிடத்திலுள்ள நற்குணங்களை நன்கு விளங்கச் செய் பவனேயன்றோ ஸ்தோதாவாகிறான், இதில் விவாத மொன்றில்லையே.

**[ததச்ச தே ஸ்துதிதுரா மய்யேவ விச்ராம்யதி]** ஸ்தோதாவின் லக்ஷணம் இதுவேயாதலால், இந்த லக்ஷணம் என்பக்கலிலே ஸமந்விதமாகிறபடியாலே தேவரீருக்கு நானே ஸ்தோதாவாகத் தகும் என்றபடி. கீழ்ச்சொன்ன ஸ்தோதாவின் லக்ஷணம் தம்பக்கலில் எங்ஙனே ஸமந்விதமாகிற தென்பதை உத்தரார்த்தத்தாலே மூதலிக்கிறார்.



**[ஹே பகவதி! அஸ்மதமர்ஷணீய பணிதி ஸ்வீகாரத: தே க்ஷாந்திஔதார்ய தயாதயோ குணா: யஸ்மாத் ஸ்வாம் ப்ரதாம் ப்ரஸ்நுவீரந்,** ததச்ச தே ஸ்துதிதுரா மய்யேவ விச்ராம்யதி.] இப்போது நான் வாய்விட்டுச் சொல்லப்போகிற உக்திகளானவை காது கொண்டு கேட்கப் பொருத துருக்திகளேயாம்; இவற்றையும் தேவரீர் காதாரக் கேட்கப் போகிறீர்; கேட்டு வாளாவிருக்கையன்றிக்கே "குழலினிது யாழினி தென்பர் தம்மக்கள் மழலைச்சொல் கேளாதவர்" என்ற கணக்கிலே, இந்த இளையபுன் கவிதைகளையும் மழலைச் சொல்லாகக் கொண்டு பரமப்ரீதியடைந்து, குற்றங்களுக்காக தண்டிக்கையன்றிக்கே க்ஷமாகுணத்தைக்காட்டியும், அதற்கு மேலே ஸர்வஸ்வதானம் பண்ணி ஔதார்ய குணத்தைக் காட்டியும், அதற்கு மேலே தயாவாத்ஸல்யாதி குணங்களைக் காட்டியும் போருவீர்; இதில் ஸந்தேஹமில்லை. ஆகவே என்னுடைய கவிதைகள் இம்முகத்தாலே தேவரீருடைய திருக்குணங்களை விஸ்தரிப்பிக்கையாலே "ஸ்தோதவ்யஸ்ய குணாந் யோ விஸ்த்ருணீதே ஸ: ஸ்தோதா" என்கிற ஸ்தோத்ருலக்ஷணம் என்பக்கலிலே ஸமந்விதமாகக் குறையில்லையே. இந்த லக்ஷணத்திற்கு அந்யத்ர அதிவ்யாப்தி ஸம்பவிக்கவும் ப்ரஸக்தியில்லை யென்பதை **"மய்யேவ விச்ராம்யதி"** என்பதனால் காட்டுகிறார். அதிவ்யாப்தி ஏன் ஸம்பவியாதென்னில்; தம்மைப் போலே அமர்ஷணீயோக்திகளைச் சொல்லிப் பிராட்டியின் க்ஷாந்த்யௌதார்ய தயாதி குணங்களை தாராளமாக ப்ரஸரிக்கச் செய்யவல்லவர்கள் வேறு யாருமில்லை யென்றும், இருக்கமுடியாதென்றும் திருவுள்ளம்.

ஆக இந்த ச்லோகத்தின் பரமதாற்பரிய மென்ன வெனில்; ஸ்ரீரங்கநாச்சியாரின் ஸ்துதியாக நான் இப்போது விண்ணப்பம் செய்யப்போகிற வார்த்தைகள் தோஷ பூயிஷ்டங்களாய் கர்ணாருந்துதமாயிருக்குமாகிலும் க்ஷமாவாத்ஸல்யாதி குணநிதியான நாச்சியார் அவற்றைப் பரம போக்கியமாகவே ஸ்வீகரித்தருளக் குறையிராது; இப்படிப்பட்ட அஸஹ்யோக்திகளை நான் தவிர வேறு யாரும் சொல்லகில்லார்;

நானும் சொல்லாதே வாய்மூடி நின்றால் பிராட்டியின் க்ஷமா வாத்ஸல்யாதி குணங்கள் ப்ரகாசிக்க வழியில்லாமே குமிருந்து போமித்தனை; ஆகவே நான் ஸ்துதி செய்ய இழிவது மிகவும் ஆவச்யகமேயாயிற்று என்றவாறும்.

குணகணு: ஸ்வாம் ப்ரதாம் ப்ரஸ்நுவீரந் என்றது—குணகணங்கள் விளக்கம் பெறும் என்றபடி. ... ... ... ... (6)

**सूक्तिं समग्रयतु नः स्वयमेव लक्ष्मीः श्रीरङ्गराजमहिषी मधुरैः कटाक्षैः।**
**वैदग्ध्यवर्णगुणगुम्भनगौरवैर्यां कण्डूलकर्णकुहराः कवयो धयन्ति ॥ ७ ॥**

**ஸூக்திம் ஸமக்ரயது ந: ஸ்வயமேவ லக்ஷ்மீ:**
**ஸ்ரீரங்கராஜமஹிஷீ மதுரை: கடாக்ஷை:,**
**வைதக்த்யவர்ணகுணகும்பநகௌரவைர் யாம்**
**கண்டூல கர்ணகுஹரா: கவயோ தயந்தி.** (7)

only by your grace I learn to forge to praise you I may ... grant it

***கீழ்ச்லோகத்தில் **"அஜ்ஞமதமர்ஷணீயபணிதி"** இத்யாதி சொன்னதைத் திருச்செவிசாத்தின ஸ்ரீரங்கநாச்சியார், "பட்டரே! உம்முடைய திருநாவீறு உலகம் போற்றும் பெருமையுடைத்தாயிருக்க இப்படி சொல்லுவீரோ? நைச்யாநுஸந்தானம் ஸ்வரூபப்ராப்தமாகிலும் அதற்கொரு அளவில்லையோ? விசேஷித்து நம்முடைய கடாக்ஷம் பெற்றிருக்கிற நீர் ஆச்சரியமான ஸூக்திகளைப் பொழிய வல்லீராயிருக்க, இப்படியும் சொல்லத்தகுமோ?" என்றருளிச் செய்ய, அடியேனுக்கு இயல்பாக ஒரு நாவீறு உண்டோ? அது சிறிதுமில்லை; ***ஸ்ரீரங்கராஜகமலாபதலாலிதத்வம் யத்வா அபராத்யதி மம ஸ்துதிஸாஹஸேஸ்மிந்*** என்று முற்கொனவே (ஸ்ரீரங்கராஜஸ்தவ—உபக்ரமத்தில்) விண்ணப்பஞ் செய்திருக்கின்றேனே; தேவரீருடைய கடாக்ஷவீக்ஷணத்தின் பலனாகவே எனக்கு நாவீறு ஸித்திக்கவேணும் என்கிறதாயிற்று இந்த ச்லோகத்தில்.

**[ஸ்ரீரங்கராஜமஹிஷீ லக்ஷ்மீ: ஸ்வயமேவ மதுரை: கடாக்ஷை: ந: ஸூக்திம் ஸமக்ரயது]** ஸ்ரீரங்கநாத திவ்யமஹிஷியான ஸ்ரீரங்கநாச்சியார் என்னுடைய வேண்டுகோளின்றிக்கே தாமே தம்முடைய நிர்ஹேதுக கருணையடியாக இனிய கடாக்ஷவீக்ஷணங்களைச் செய்து நம்முடைய வாயில் நல்ல உக்திகள் நிரம்பி வரும்படியாக அநுக்ரஹிக்க வேணுமென்கை. என்னுடைய ப்ரயத்நமடியாக உக்திகள் வெளிவருமாகில் அவை தீதாயிருக்குமேயொழிய நன்றாயிருக்க விரகில்லை; பெரிய பிராட்டியார் தாமே தம்முடைய ஸ்துதியைத் தலைக்கட்டிக் கொள்ளத் திருவுள்ளம் பற்றுமளவில் அந்த கவிதைகள் இனிமையே வடிவெடுத்திருக்கத் தட்டில்லை என்றதாயிற்று. நாச்சியாரின் திருக்கண்ணோக்கமடியாக வெளிவரும் ஸூக்திகளின் அதிசயம் எப்படியிருக்குமென்பதை உத்தரார்த்தத்தாலே வெளியிடுகிறார்.

**[யாம் ஸூக்திம் வைதக்த்யவர்ண குணகும்பந கௌரவை: கவய: கண்டூல கர்ணகுஹரா: ஸந்த: தயந்தி]** சொல்நோக்கு பொருள்நோக்கு தொடைநோக்கு நடைநோக்கு என்னும்படியான விசேஷங்கள் அமைந்து, 'இன்னமும் கேட்கவேணும், இன்னமும் கேட்கவேணும்' என்று கவிகள் ஆசைப்படும்படியான ஸூக்தியை ஸ்ரீரங்கநாச்சியார்

அநுக்ரஹித்தருள வேணுமென்றதாயிற்று. வைதக்த்யம்—பொருட்பொலிவு. வர்ண
குணம்—சொற்பொலிவு; இவையித்தனையும் செறிந்திருக்கப் பெறுவது நம்பநம்;
அஃதிருந்துவிடுமாகில் கவிகள் ஊணுமுறக்கமுமின்றிக்கே அதையே அம்ருதபான
மாகப் பருகுவர்களாயிற்று, கண்டூலகர்ணஹுரா: என்றது—தினவுகொண்ட செவி
களையுடையராய்க் கொண்டு என்றபடி. 'ச்ருண்வந்தி' என்ன வேண்டுமிடத்து தயந்தி
என்று பாநார்த்தகமான தாதுவையிட்டு அருளிச் செய்ததானது, பண்டிதர்களுக்கு
ஸூக்திச்ரவணமே ஸுதாபாநஸமமென்று தோற்றுவிக்க: ... ... (7)

**अनाघ्रातावद्यं बहुगुणपरीणाहि मनसो**
**दुहानं सौहार्दं परिचितमिवाथापि गहनम्।**
**पदानां सौभ्रात्रादनिमिषनिषेव्यं श्रवणयोः**
**त्वमेव श्रीर्मह्यं बहुमुखय वाणीविलसितम् ॥ ८॥**

The same elaborated

**அநாக்ராதாவத்யம் பஹுகுணபரீணாஹி மநஸோ**
**துஹாநம் ஸௌஹார்தம் பரிசிதமிவாதாபி கஹநம்,**
**பதாநாம் ஸௌப்ராத்ராத் அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:**
**த்வமேவ ஸ்ரீர் மஹ்யம் பஹுமுகய வாணீவிலஸிதம்.** (8)



***கீழ்ச்லோகத்திற்கே விவரணமாயிருக்கிறது இந்தச்லோகம். "லக்ஷ்மீ: ஸ்வயமேவ
ந: ஸூக்திம் ஸமக்ரயது" என்றாரே கீழ்ச்லோகத்தில்; அந்த ஸூக்தியின் பெருமை
எப்படிப்பட்டதாயிருக்கவேணுமென்ன, இப்படிப்பட்டதாயிருக்கவேணுமென்கிறாரிதில்.
கீழ்ச்லோகத்தில் பிராட்டியை நேராக நோக்கி ப்ரார்த்தியாதே படர்க்கையாக வைத்துச்
சொல்லி நின்றது. அது தகுதியன்றே. முன்னிலையாக வைத்து, தேவரீர் இப்படிப்
பட்ட வாக்விலாஸத்தைப் பெருக்கியருள வேணுமென்று ப்ரார்த்திக்கிறது இதில்.

நான்காவது பாதத்திலுள்ள ஸ்ரீ: என்பது விளி (ஸம்போதநம்!); **[ஹேஸ்ரீ: த்வ
மேவ மஹ்யம் வாணீவிலஸிதம் பஹுமுகய]** ஸ்ரீரங்கநாச்சியாரே! தேவரீர்தாமே வாக்வி
லாஸத்தை அடியேனுக்கு பஹுமுகமாக அநுக்ரஹித்தருளவேணும். "இந்த ப்ரார்த்
தனையை ஸரஸ்வதியிடத்திலன்றோ செய்ய வேணும், என்பக்கலிலே செய்வதில் பய
னுண்டோ? நான் கொடுக்கக் கூடியது ஐச்வர்யம்; ஸரஸ்வதி கொடுக்கக் கூடியது
வாக்விலாஸம்; இப்படி வ்யவஸ்திதமாயிருக்க, அவளை விட்டு என்னை வேண்டுவது
கூடாதென்று பிராட்டி திருவுள்ளமாகுமென்றுகருதி **'த்வமேவ'** என்று அவதாரண
சிரஸ்கமாக அருளிச் செய்கிறார். அடியேனுடைய அநந்யதைவத்வ அத்யவஸாயம்
குலைய வொண்ணாது; தேவரீர் தரமாட்டாத தொன்றில்லை. எங்கள் குடியிலே தேவதாந்
தரபஜநம்பண்ணி ஒன்றை வேண்டுவாரில்லை; எதுவேணுமானாலும் திவ்யதம்பதி
களையே ப்ரார்த்திப்போம் நாங்கள் — என்கிற இவ்வளவு விவக்ஷை ஏவகாரத்தில் உண்
யும். திருவரங்கத்தமுதனாரும் நூற்றந்தாதியின் நிகமனத்தில் "தென்னரங்கன் அண
யாக மன்னும் பங்கயமாமலர்ப்பாவையைப் போற்றுதும்" என்றார்; [illegible]ற்கு? என்ன
"என் தலைமிசையே இராமானுசனடிப் பூமன்ன" என்றார். இத்தால் எந்த புருஷார்த்
ஸித்திக்கும் பிராட்டியையே பிரார்த்திக்கத் தகுமென்றதாயிற்று.

நாம் ப்ரார்த்திக்கிற வாணீவிலஸிதம் எப்படிப்பட்டதாயிருக்க வேண்டுமென்பதை முதலிட்டு மூன்று பாதங்களாலே சிறப்புறக் கூறுகிறார். **[அநாக்ராதாவத்யம்]** அக்ஷரங்களையும் பதங்களையும் வாக்கியங்களையும் பற்றின தோஷங்கள் பலவும் ஸம்பாவிதமிறே உலகில்; அப்படிப்பட்ட தோஷங்களில் ஒன்றினுடையவும் ஸம்பந்தலேசமும் இருக்கலாகாது. காதுக்குக் கடுவாயிருத்தல், அச்லீலமாயிருத்தல், ப்ரக்ரமபங்காதி துஷ்டமாயிருத்தல் கூடாதென்கை. **[பஹுகுண பரீணாஹி]** தோஷவர்ஜிதமாயிருக்கை யென்பது ஓர் அதிசயமன்றே; அலங்காரபுஷ்டி முதலிய குணவிசேஷங்கள் மிகுந்திருக்கவேணுமே. “சிறப்புடன் பூனை இறப்பிலிருந்தால், புறப்படமாட்டாதெலி” என்று ஒருவன் குறள்பாடினனும்; இதில் தளை பிறழ்வு முதலிய குற்ற மொன்றுமில்லையெனினும் ஹாஸ்யாஸ மொன்றுக்கே இலக்கானவிதில் குணபரிபோஷமொன்றுமில்லையே; அங்ஙனன்றிக்கே, சப்தாலங்காரம் அர்த்தாலங்காரம் முதலிய குணங்களெல்லாம் நிரம்பியிருக்கையாகிற ஏற்றமு முண்டாக வேணுமென்கிறார். **[மநஸஸ் ஸௌஹார்தம் துஹாநம்]** தோஷவர்ஜிதமாயும் குணபரிபுஷ்டமாயுமிருப்பதற்கு மேற்படவும் சில அதிசயங்களுண்டு; அவை இது தொடங்கி மூன்று விசேஷணங்களாலே சொல்லப்படுகின்றன. நிர்தோஷமாய் குணபுஷ்கலமாயிருந்துவைத்தும் பிறர்நெஞ்சு நோகும்படியாயிருக்குமாகில் பயனில்லையே; அங்ஙனன்றிக்கே, கேட்கக் கேட்க நெஞ்சு கனியும்படியாயிருக்க வேணுமென்கிறார்.



**[பரிசிதமிவ அதாபி கஹநம்]** பதங்களெல்லாம் கேட்டதாகவே யிருக்கும்; அப்படியிருக்கச் செய்தேயும் தாற்பரியம் குருமுகமாகக் கேட்டே அறிய வேண்டும்படியாயிருக்க வேணும். உண்மையில் இந்த விசேஷணம் பட்டர் ஸ்ரீஸூக்திக்கே தகும்; அதுதன்னிலும் இந்த திவ்யக்ரந்தத்திற்கு விசேஷித்துத் தகும். **[பதாநாம் ஸௌப்ராத்ராச் ச்ரவணயோ: அநிமிஷநிஷேவ்யம்]** கீழ்ச் சொன்ன எல்லாவற்றிலுமிது மிகச் சிறந்த அதிசயம். **हठादाकृष्टानां कतिपयपदानां रचयिता** — ஹடாதாக்ருஷ்டாநாம் கதிபய பதாநாம் ரசயிதா * என்னும்படி கவிசொல்ல வல்லார் பலருளரே; அப்படிப்பட்டவர்களின் ரசனைகளில் இந்த விசேஷம் காணவரிது. பதங்களுக்கு ஒன்றோடொன்று சேர்த்தியுண்டாகி விலக்ஷணமான வொரு ச்ராவ்யதையுண்டு; அது பொலிந்திருக்க வேணுமென்கிறார். ***या पदानां पराऽन्योन्यमैत्री शय्येति कथ्यते** — யா பதாநாம் பரா அந்யோந்ய மைத்ரீ சய்யேதி கத்யதே * என்னப்பட்ட சய்யாவிசேஷம் ஸஹ்ருதய ஹ்ருதயைகவேத்யமாயிருக்கும். அதுதான் **பதாநாம் ஸௌப்ராத்ர** மென்கிறது. அது உண்டாகில் ரஸிகர்கள் நித்ராந்தியின்றிக்கே அநுபவிப்பர்களாயிற்று. ஆக இப்படிப்பட்ட அதிசயங்கள் பொலிந்த வாக்விலஸிதத்தை யருள்புரிய வேணுமென்றாராயிற்று. விலஸிதமென்றும் விலாஸமென்றும் பர்யாயம். **भावे क्तप्रत्यय: ॥** (8)

श्रियः श्रीः श्रीरङ्गेशय तव च हृद्यां भगवतीं
श्रियं वक्ष्याऽपूर्वयमिह फणामः शृणुतराम् ।
[illegible]ां ते भूयास्तां सुखतरलतारे श्रवणतः
पुनर्हर्षोत्कर्षात् स्फुटतु भुजयोः कञ्चुकशतम् ॥ १० ॥

He addresse Ranga who asks why Come to Him. Rather it is to make You delighted

இப்படி நிர்ப்பந்தித்தவாறே 'அங்ஙனமே கேட்கிறோம், சொல்லிக்காணும்' என்றார் பெருமாள். 'வெறுமனே கேட்கிறோமென்றால் போராது; கேட்டருளுகிறபோதைத் திருவுள்ளப் பூரிப்பு வடிவிலே தொடைகொள்ளலாம்படியிருக்கவேணும், என்கிறார் உத்தரார்த்தத்தாலே. [ச்ரவணத: தே த்ருசௌ ஸாகதரலதாரே பூயாஸ்தாம்] தேவியாரை உயர்த்திச் சொல்லுமது கேட்குமளவில் தேவரீருடைய திருக்கண்கள் ஆனந்த மிகுதியாலே கருவிழி சுழலமிடப் பெறவேணும். இவ்வளவுதானே, பின்னையுமுண்டோ வென்றார் பெருமாள்; [புநர் ஹர்ஷோத்கர்ஷாத் புஜயோ: கஞ்சுகசதம் ஸ்புடது] அடியேன் விண்ணப்பம் செய்து கொண்டே வருவேன்; கேட்டு உடல் பூரித்து புஜங்களில் சாத்தியிருந்த கஞ்சுகம் வெடித்து அகலவேணும்; மறுபடியும் வேறொரு கஞ்சுக மணிந்து கொண்டு நிற்க, பின்னையும் விண்ணப்பஞ் செய்வேன்; அதுகேட்டு மீண்டும் உடல் பூரிப்பாலே அந்த கஞ்சுகமும் வெடித்து அகலவேணும்; இங்ஙனே க்ரமேண பலபலகஞ்சுகங்கள் வெடிக்க வேணும்; இப்படிப்பட்ட ஹர்ஷாதிசயம் எனக்குத் தெரிய வேணுமென்கிறார்.

எம்பெருமானுக்கும் இங்ஙனே விக்ருதியை விளைக்கவல்லதாம்படி இந்த ஸ்துதி அமையப்போகிறது (அல்லது) அமையவேணும் என்கிற ஆசம்ஸையை இப்படிப்பட்ட வசநவ்யக்தியாலே வெளியிட்டாராயிற்று.

தொடங்கும்போதே ச்ரியச்ஸ்ரீ:! என்று புகழ்ந்துகொண்டே தொடங்கினது ஒரு சாதுர்யம்; பிராட்டியாரை எவ்வளவு உயர்த்திப் பேசினாலும் *திருவுக்குந் திருவாகிய செல்வா* என்னப்பட்ட தேவரீருடைய பெருமைக்கொரு கொத்தையில்லையென்று காட்டினபடி. த்வத்தோபி உச்சை: என்பதற்கு — தேவரீருடைய உயர்த்தியைக் காட்டிலும் உயர்த்தியாக என்கிற பொருள் தவிர மற்றொருவகையான பொருளும் சொல்லலாம்; அதாவது, தேவரீர் திருவாக்காலே பிராட்டியைத்துதித்தால் எவ்வளவு அதிசயமாக இருக்குமோ, அதனிலும் விஞ்சின அதிசயமாக நான் துதிக்கப்போகிறேன் என்பதாம். இங்கு வயம் என்று தம்மை பஹுவசனத்தாலே சொல்லிக்கொண்டது— இதுதன்னாலே தமக்கொரு கௌரவமுண்டாவதாகத் திருவுள்ளம்பற்றியென்க. (9)

देवि ! श्रुतिं भगवतीं प्रथमे पुमांसः
त्वत्सद्गुणौघमणिकोशगृहं गृणन्ति ।
तद्द्वारपाटनपटूनि च सेतिहास-
संतर्कणस्मृतिपुराणपुरस्सराणि ॥१०॥

தேவி! ச்ருதிம் பகவதீம் ப்ரதமே புமாம்ஸ:
த்வத்ஸத்குணௌகமணிகோசக்ருஹம் க்ருணந்தி,
தத்த்வாரபாடநபடூநி ச ஸேதிஹாஸ
ஸந்தர்க்கணஸ்ம்ருதிபுராணபுரஸ்ஸராணி (10)

***ஸ்ரீரங்கநாதனுடைய திருமேனியும் பூரிக்கும்படியாக ஸ்ரீரங்கநாச்சியாருடைய ஸ்துதியை செய்யப்போவதாகக் கீழ்லோகத்தில் ப்ரதிஜ்ஞாதமாயிற்று; அதன்படியே ஸ்துதிக்க இழிந்தாராய்; "मानाधीना मेयसिद्धिः — மாநாதீநா மேயஸித்தி:" என்றபடியே ப்ரமேயஸித்தியிப்பது ப்ரமாணாதீனமாகையாலே, பிராட்டியின் வைபவமாகிற ப்ரமேயத்திற்கு ஸாதகமான ப்ரமாணத்தை முதலிக்கவேண்டி இதிஹாஸ புராணத் உபப்ருஹ்மணங்களிலும் உபப்ருஹ்மிதமான ச்ருதிதான் இவ்விஷயத்திற்கு ப்ரமாண

ழென்று அருளிச்செய்கிறார் இந்தச்லோகத்தில். தாம் அருளியருளுகிற ஸ்துதிக்கு ஸ்ரீகுணரத்நகோசமென்று திருநாமமென்றிட்டதையும் அர்த்தாத் ஸூசிப்பித்தருளுகிறார் முத்ராலங்காரவகையில்.

[ஹேதேவி! ப்ரதமே புமாம்ஸ: பகவதீம் ச்ருதிம் த்வத்ஸத்குணௌகமணி கோசக்ருஹம் க்ருணந்தி] வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே! வ்யாஸபராசரவால்மீகி ப்ரப்ருதிகளும் ஸ்ரீபராங்குச பரகால யதிவராதிகளுமான பூர்வபுருஷர்கள் *சுடர்மிகுசுருதியை தேவரீருடைய திருக்கல்யாண குண கணங்களாகிற ரத்னங்களை இட்டுவைப்பதற்கான பாண்டாகாரமாகச் சொல்லுகிறார்கள். ஸ்ரீமஹாலக்ஷ்மியின் திருக்கல்யாண குணங்கள் மிகவிளங்குவது வேதங்களிலே யென்று பெரியார்கள் திருவுள்ளம் பற்றுகிறார்களென்றதாயிற்று. வேதத்தின் ஒரு பகுதியான ஸ்ரீஸூக்தத்திலே பிராட்டியின் பெருமை விளங்குவது உண்மையே; இவ்வளவே கொண்டு வேதமடங்கலும் பிராட்டியின் பெருமையையே ஓதுகின்றனவென்று சொல்லப் பொருத்த முண்டோவென்று சிலர் சங்கிக்கக்கூடும். எம்பெருமானுக்குண்டான பெருமை யெல்லாம் பிராட்டியினால் தானென்று * श्रद्धया देवो देवत्वमश्नुते -- ச்ரத்தயா தேவோ தேவத்வமச்நுதே * இத்யாதி வேதவாக்யங்கள் ஓதியிருக்கையாலே வேதமெல்லாம் பிராட்டியின் பெருமையையே சொல்லுகின்றதென்று கொள்ளக்குறையில்லையன்றோ. "திருவில்லாத் தேவரைத் தேறேன்மின்தேவு" என்று திருமழிசைப்பிரானருளிச் செய்தபடி பிராட்டியின் ஸம்பந்தமில்லாமல் தேவன் தேவத்வத்தைப் பெறமுடியாதாகையாலே தேவனுடைய பெருமையைச் சொல்லுமிடமெல்லாம் தேவியின் பெருமையைச் சொல்லிற்றாகவே கொள்ளலாமிறே.

நம்மாழ்வாருடைய திருவாய்மொழிக்குத்தனியனிட்டருளின பெரியார்கள் *வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேலான்ற தமிழ்மறைகளாயிரமும்* என்று தென்திருவரங்கங் கோயில் கொண்டானுடைய பெருமையே திருவாய்மொழியாயிரத்திலும் பேசிற்றாக வருளிச்செய்தார்கள்; இது எங்ஙனே பொருந்தும்? *கங்குலும் பகலுமென்கிற பதிகமொன்று தவிர மற்றொரு பாசுரத்திலும் திருவரங்கத்தின் ப்ரஸ்தாவமே வரப்பெறாமலிருக்கின்ற திருவாய்மொழியாயிரம் ஸ்ரீரங்கநாத வைபவஸமர்ப்பகமாக எங்ஙனேயாகும்? என்று சங்கிப்பார்க்கு நம் ஆசார்யர்கள் அருளிச்செய்யும் ஸமாதானம் இங்கு நோக்கும். ஸகலதிவ்ய தேசத் தெம்பெருமான்களுடையவும் பெருமை ஸ்ரீரங்கநாதனுடைய பெருமையினுள்ளீடு என்கிற பரமார்த்தம் போலே தேவாதிதேவனுடைய பெருமையெல்லாம் தேவதேவதிவ்யமஹிஷியின் பெருமையினுள்ளீடென்கிற பரமார்த்தமும் கண்ணழிவற்றதாகையாலே இங்ஙனேயருளிச்செய்யக் குறையில்லை யாயிற்று.

ச்ருதிக்கு பகவதீம் என்று விசேஷணமிட்டது—அபௌருஷேயத்வ நித்யத்வ நிர்தோஷத்வாதிப்ரயுக்தமான பூஜ்யதையை யிட்டு. [ப்ரதமே புமாம்ஸ:] என்றது—வேதார்த்தங்களை விசதீகரித்தருளின மஹர்ஷிகளையும் ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் முட்கொண்டது. இந்த மூதுவர்கள் ச்ருதியைப் பெரிய பிராட்டியாருடைய திருக்கல்யாண குணங்களாகிற ரத்னங்களுக்குக் கோசக்ருஹமாகக் கூறுகின்றார்களென்றது —பிராட்டியின் குணங்கள் வேதத்திலே ஸுரக்ஷிதமாகக் காணக்கிடைக்குமென்கிறார்களென்றபடி. ரத்னங்களைக் காண்பது எப்படி கோசக்ருஹத்திலோ அப்படி ஸ்ரீமஹாலக்ஷ்மீகுணங்களைக்காண்பது ச்ருதியிலே யென்றதாயிற்று.

ஆனால் ச்ருதியிலே பகவத்குணப்ரதிபாதநம் காண்கிறதேயொழிய லக்ஷ்மீகுண ப்ரதிபாதநம் காணவில்லையே யென்று சிலர் நினைக்கக்கூடுமென்று கருதி உத்தரார்த்தமருளிச் செய்கிறார் [தத் த்வாரபாடநேத்யாதி.] கோசக்ருஹத்தில் ரத்னங்களுள்ளன வென்றால் வாசலிலே இறைந்துகிடக்கமாட்டாவே; உள்ளே திறந்து பார்த்தாலன்றோ காணக்கிடைக்கும். அதுபோலவே வேதமாகிற பெட்டியையும் திறந்து பார்க்கவேணும்; இதிஹாஸபுராணாதிகளாகிற திறவுகோலையிட்டுத் திறந்து பார்க்குமளவில் பிராட்டியின் பரபாவம் வேதத்திலே எளிதாகக் காணக் கிடைக்குமென்கை. இதிஹாஸ புராணங்களெல்லாம் பிராட்டியினாலேயே எம்பெருமானுக்குப் பெருமை விளைந்ததாக நிரூபணம் செய்திருக்கிறபடியாலும், வேதந்தன்னிலும் * श्रद्धयाऽदेवो देवत्वमश्नुते — ச்ரத்தயாதேவோ தேவத்வமச்நுதே * இத்யாதிவாக்யங்களிலே அது ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கிறபடியாலும் வேதத்தில் எம்பெருமானுக்குப் பெருமை சொல்லுமிடமெல்லாம் பிராட்டிக்கும் பெருமை சொன்னதாகத் தேறுமிறே.

[ஸேதிஹாஸேத்யாதி.] இதிஹாஸங்களாவன ஸ்ரீராமாயணாதிகள். ஸம்தர்க்கணமாவது— ஸமீசீந தர்க்கம். *आर्षं धर्मोपदेशं च वेदशास्त्राविरोधिना । यस्तर्केणानुसंधत्ते स धर्मं वेद नेतरः ॥* என்கையாலே தர்க்கமும் நிர்ணயகமாகக்கடவது *तर्काप्रतिष्ठानात्* என்று ஸூத்ரகாரர் தர்க்கத்தை வெறுத்தது ப்ரமாணாநுகுணமல்லாத சுஷ்கதர்க்கத்தையேயாம். அது தோன்றவே இங்கு 'ஸம் தர்க்கண' என்றது. வேதார்த்த விசாரரூபமீமாம்ஸையும் ஸம்தர்க்கண சப்தார்த்தமாகலாம். ஸ்ம்ருதிகளாவன மந்வாதிஸ்ம்ருதிகள். புராணங்களாவன ஸ்ரீவிஷ்ணுபுராணாதிகள். இவை கொண்டே வேதார்த்த நிர்ணயம் பண்ணவேண்டியிருக்கையாலே இவற்றை 'தத் த்வாரபாடநபடுநி' என்றது மிகப்பொருந்தும். லக்ஷ்மீதந்த்ராதிகளையும் ஆழ்வாரருளிச் செயல்களையும் பற்ற 'புரஸ்ஸராணி' என்றது.

ஸேதிஹாஸஸந்தர்க்கண பதத்திற்கும் ஸ்ம்ருதிபுராண புரஸ்ஸரபதத்திற்கும் சேர்த்து கர்மதாரய ஸமாஸம் பண்ணவேணும். सेतिहास संतर्कणानिच तानि स्मृतिपुराण पुरस्सराणीति कर्मधारयः । स्नातानुलिप्तवत् ।

ஆசிரியர், தம்முடைய இந்த ஸ்துதிக்ரந்தத்திற்கு ஸ்ரீகுணரத்நகோசமென்று திருநாமமிட்டருளினாரிறே; இத்திருநாமம் வேதத்திற்கும் ஒக்குமென்று இரண்டாவது பாதத்தாலே ஸூசிப்பித்தபடி. "ஸேதிஹாஸ......புரஸ்ஸராணி" என்றது விசேஷணமாத்ரமாகையாலே 'உபப்ரும்ஹணாநி' என்றொரு விசேஷ்யபதம் அத்யாஹரித்துக் கொள்வது. (10)

आहुर्वेदानमानं कतिचन कतिचाराजकं विश्वमेतत्
राजन्वत्केचिदीशं गुणिनमपि गुणैस्तं दरिद्राणमन्ये ।
भिक्षावन्ये सुराजम्भवमिति च जडास्ते तलातल्यकार्षुः
ये ते श्रीरङ्गधामाङ्गणकनकलते! न क्षणं लक्ष्यमासन् ॥ ११

For want of Your
Grace [illegible]
[illegible]
totally [illegible]

ஆஹுர் வேதாநமாநம் கதிசந கதிசாராஜகம் விச்வமேதத்
ராஜந்வத் கேசிதீசம் குணிநமபி குணைஸ் தம் தரித்ராணமந்யே,
பிக்ஷாவந்யே ஸுராஜம்பவமிதி ச ஜடாஸ்தே தலாதல்யகார்ஷு:
யே தே ஸ்ரீரங்கதாமாங்கணகநகலதே! ந க்ஷணம் லக்ஷ்யமாஸந். (11)

***மேற்லோகத்தில் ப்ரமாணப்ரஸ்தாவம் செய்தருளினபடியாலே அந்த ப்ரமாணங்களாகிற விளக்கில் விட்டில் படும் பாட்டை யடைந்து அகர்த்தப்படுமவர்களை யெடுத்துரைத்து இவர்கள் ஸ்ரீரங்கநாச்சியாருடைய திவ்யகடாக்ஷத்திற்கு இரைப் பொழுதும் இலக்காகப் பெறுமையினால்தான் இப்படி அபப்பொருள்களைக் கூறி அலர்த்தப்பட்டொழிகிறார்களென்கிறார். புறசமயிகள் வேதபாஹ்யர்களென்றும் குத்ருஷ்டிகளென்றும் இருவகைப்படுவர். வேதத்தை ப்ரமாணமாக இசையாதே விலகிநிற்பவர்கள் பாஹ்யர்களாவர். வேதத்தை ப்ரமாணமென்றிசைந்துவைத்தும் அதிலே அபார்த்தங்களைச் செய்து போருமவர்கள், குத்ருஷ்டிகளாவர், *ஆஹு: வேதாந் அமாநம் கதிசந* என்பதனாலே வேதபாஹ்யர்களைச் சொன்னாராயிற்று. சிலர் வேதங்களை அப்ரமாண மென்றார்களென்கை. ஸௌகதசார்வாகாதிகள் இங்கே விவக்ஷிதர்கள். இவர்களும் மேலே சொல்லப்படுகிறவர்களும் அவ்யபதேச்யர்களாகையாலே சிலர், சிலர் என்றே குறிப்பிடுகிறபடி. [கதிச அராஜகம் விச்வம் ஏதத்] இது காபிலர் களின் வாதத்தை அநுவதிக்கிறபடி. இந்த ஜகத்தை அநாதமென்கிறார்களவர்கள். ப்ரக்ருதி புருஷர்களுக்குமேல் ஈச்வரஸத்பாவமே இல்லை யென்பவர்களாயிற்று அவர்கள். தத்வத்ரயே ஈச்வரப்ரகரணே — "காபிலர் ப்ரதாநம் காரணமென்றார்கள்; ப்ரதாநம் அசேதநமாகையாலும் ஈச்வரன் அதிஷ்டியாதபோது பரிணமிக்கமாட்டாமையாலும் ஸ்ருஷ்டிஸம்ஹாரவ்யவஸ்தை கூடாமையாலும் அதுவும் சேராது." என்றருளிச் செய்ததும் அவ்விடத்து வியாக்கியானமும் இங்கே அநுஸந்தேயம்.



[ராஜந்வத் கேசித் ஈசம்] 'விச்வம் ஆஹு:' என்ற இரண்டு பதமும் இங்கு அநுஷங்கம் செய்து கொள்ளத்தக்கது. இது காணாதர்களின் மதம் சொல்லுகிறபடி. அவர்கள் சாஸ்த்ரரூப ப்ரமாணத்தாலே ஈச்வரனை அங்கிகரிக்கையன்றிக்கே அநுமான பலத்தாலே அங்கிகரிக்கிறார்களத்தனை. அந்த ஆநுமாநிகேச்வரனுக்கு நிமித்த காரணத்வமாத்ரத்தையே இசைகிறார்களாகையாலே இவர்களும் யதார்த்தவித்துக் களல்லர். [அந்யே ஈசம் தம் குணிநமபி குணைர் தரித்ராணம் ஆஹு:] இது மாயாவாதிகளின் மதம். ஸமஸ்த கல்யாண குணாத்மகனான ஸர்வேச்வரனை குணதரித்ரனென்கிறார்களாயிற்று அவர்கள். *परास्य शक्तिर्विविधैव श्रूयते. स्वाभाविकी ज्ञानबलक्रिया च। यस्सर्वज्ञस्सर्ववित्। अपहतपाप्मा। सत्यकाम स्सत्यसंकल्पः* இத்யாதிப்ரஹ்மப்ரமாண ஸித்த அநந்தகல்யாண குணைகதாநத்வத்தை யுடையனான ஸர்வேச்வரனை குண சூந்யனென்கிறார்களந்தோ! நிர்க்குணத்வத்தைச் சொல்லும் ச்ருதிகள் ஹேயகுணாபாவத்தைச் சொல்லுகின்றனவென்று நிஷ்கர்ஷிக்க மாட்டார்மையாலே.

[அந்யே பிக்ஷுஜன ஸௌராஜ்யபாஜம்] 'ஆஹு:' என்ற க்ரியையை இங்கும் அநுஷங்கித்துக் கொள்வது. சைவர்கள் ஈச்வரஸத்பாவத்தை இசைந்துவைத்தும் அந்த ஈச்வரத்வத்தை *வெந்தாரென்பும் சுடுநீறும் மெய்யில் பூசிக் கையகத்து ஓர் சந்தார்தலைகொண்டு உலகேழுந்திரியும் பெரியோனிடத்தே ஏறிட்டுரைக்கிறானாயிற்று. ஸ்வரக்ஷணேபி ஸ்வயமசக்தனை ஈச்வரனென்று கூறுவது மிகவும் பரிஹாஸ்யமென்று காட்டுதற்காக பிக்ஷுஜன என்றது.

[இதிச ஜடாஸ் தே தலாதலி அகார்ஷு:] இங்ஙனே அவ்யபதேச்யர்களின் மதங்கள் மற்றும்பலவுமிருக்கையாலே (இதி) என்று வழிகாட்டினபடி. இவர்களெல்லாரும் கருவிலே திருவிலாத மூர்க்கர்களாகையாலே (ஜடா:) என்கிறார். தலாதலி அகார்ஷு:—

தரையைக் கையாலடித்து வாதயுத்தம் நடத்துவது தலாதலி யெனப்படும். **கேசாகேசி தண்டாதண்டி** இத்யாதிகள்போலே தலாதலியும் கொள்ளக்கடவது. யுத்தம் செய்பவர்கள் குடுமியைப் பிடித்துக்கொண்டும் தடியை வீசிக்கொண்டும் போர்புரிவதுபோல, வாதயுத்தம் செய்பவர்கள் கையைத் தரையிலே அறைந்து வாதிப்பது இயல்பு. இங்ஙனே வாதிப்பவர்களின் வாதங்களெல்லாம் லக்ஷ்மீகடாக்ஷ லக்ஷ்யத்வாபாவ நிபந்தனமென்கிறது நான்காமடி. **ஹே ஸ்ரீரங்கஹர்ம்யாங்கணகநகலதே! யே தே க்ஷணம் லக்ஷ்யம் நாஸந் தே ஏவம் அகார்ஷு:**— என்று யோஜிப்பது. ஸ்ரீரங்கவிமானத்தின் கீழே படர்ந்த கனகக் கொடியோ! என்னலாம்படி விளங்குகின்ற ஸ்ரீரங்கநாச்சியாரே! உமக்கு க்ஷணகாலமும் இலக்காகாதவர்கள் யாவரோ அவர்களே இப்படிப்பட்ட துர்வாதிகளாக ஆயினர் என்றதாயிற்று. மூன்றாவது பாதத்திலுள்ள **(தே)** என்பது தச்சப்தத்தின் ப்ரதமாபஹுவசநம். நான்காவது பாதத்திலுள்ள **(தே)** என்பது யுஷ்மச்சப்தத்தின் ஷஷ்டிஏகவசநார்த்தகம். ... ... ... *(11)*

**मनसि विलसताऽक्ष्णा भक्तिसिद्धाञ्जनेन**
**श्रुतिशिरसि निगूढं लक्ष्मि! ते वीक्षमाणाः ।**
**निधिमिव महिमानं भुञ्जते येऽपि धन्याः**
**ननु भगवति! दैवीं संपदं तेऽभिजाताः ॥ १२**



**மநஸி விலஸதாக்ஷ்ணா பக்திஸித்தாஞ்ஜநேந**
**ச்ருதிசிரஸி நிகூடம் லக்ஷ்மி தே வீக்ஷமாணா:,**
**நிதிமிவ மஹிமாநம் புஞ்ஜதே யேபி தந்யா:**
**நநு பகவதி தைவீம் ஸம்பதம் தேபிஜாதா:** (12)

✻✻✻—லக்ஷ்மீகடாக்ஷத்திற்கு இலக்காகாதவர்கள் துர்வாதிகளாய் நசித்துப்போகிறார்களென்று கீழ்ச்லோகத்திலருளிச் செய்து, அப்படிப்பட்டவர்களல்லாத பாக்யசாலிகள் நிதிபெற்று வாழ்கிறார்களென்று இந்தச்லோகத்தாலருளிச் செய்கிறார். **பகவதி நநு லக்ஷ்மி!**—ஸகலகல்யாண குணஸம்பத்தியுள்ள ஸ்ரீரங்கநாச்சியாரே! **யேபி தந்யா:**— யாவர் சில பாக்கியசாலிகள், **பக்திஸித்தாஞ்ஜநேந**— பக்தியாகிற ஸித்தாஞ்ஜனத்தை யுடையதாய்க்கொண்டு, **மநஸி விலஸதா அக்ஷ்ணா**— நெஞ்சிலுள்ளே விளங்கும் ஞானக் கண்ணினால், **ச்ருதிசிரஸி நிகூடம் தே மஹிமாநம்**—வேதாந்தங்களிலே மறைந்துகிடக்கிற உம்முடைய வைபவத்தை, **நிதிம் வீக்ஷமாணா இவ**—கண்ணிலே ஸித்தாஞ்ஜனமணிந்து கொண்டு நிதியைக்காண்பார் போலே காணுகின்றவர்களாகி, **புஞ்ஜதே**— அநுபவிக்கிறார்களோ, **தே**—அன்னவர்கள், **தைவீம் ஸம்பதம் அபிஜாதா:**— மோக்ஷஹேதுவான தைவஸம்பத்துக்கு இட்டுப் பிறந்தவர்களாகிறார்கள்.

நிதியானது பூமியில் ஆங்காங்கு மறைந்து கிடக்கிறதோ, அப்படியே பெரியபிராட்டியாரின் வைபவமும் வேதாந்தங்களில் ஆங்காங்கு மறைந்துகிடக்கின்றது. **நிதி** எல்லார்க்கும் எளிதானதன்று; ✻**உபர்யுபரி ஸஞ்சரதாம் அத்ருச்யம்**✻ (வரத [illegible]) என்று தேசங்கள் [illegible] மேலே மேலே நடந்து செல்வார்க்கும் காணவரிதாயிருக்குமாயிற்று நிதி; அப்படிப்பட்ட **நிதியையும்** பார்ப்பதற்கு ஒரு வழி உண்டு; நிதியைக்காட்டிக்கொடுக்கும் ஸித்தாஞ்ஜனமென்று ஒன்றுளதாம், அதனைக்

**கண்ணி**லேயணிந்து கொண்டு காண்பார்க்கு மூலைமுடுக்குகளில் மறைந்து கிடக்கிற நிதியும் காணவெளிதாகும். அப்படியே வேதாந்தங்களில் மறைந்து கிடக்கிற ஸ்ரீமஹாலக்ஷ்மீவைபவமாகிற நிதியும் பக்தியாகிற ஸித்தாஞ்ஜனத்தினாலே விபூஷிதமான அகக்கண்ணுடையார்க்குக் காணவெளிதாகுமென்றதாயிற்று. இதனால் வேதாந்தங்களில் எம்பெருமானுடைய வைபவம் எப்படி ஸ்பஷ்டமாக ஓதப்பட்டிருக்கின்றதோ அப்படி பிராட்டியின் வைபவம் ஸ்பஷ்டமாக ஓதப்பட்டிராவிடினும் பாக்யாதிகைகபோக்யமான நிதிபோலே நிகூடமாயிருக்கும்; ஆஸுரஸம்பத்துக்கு இட்டுப் பிறவாதே தைவஸம்பத்துக்கு இட்டுப்பிறந்தவர்கள் பக்திவசாத் அதைக்கண்டறிந்து அநுபவிக்க ப்ராப்தராகிறார்கள் என்றதாயிற்று.

**'பக்திஸித்தாஞ்ஜநேந'** என்பதற்கு— 'பக்தி: ஸித்தாஞ்ஜநமிவ யஸ்ய தத்' என்று பஹுவ்ரீஹிபண்ணி, ஸித்தாஞ்ஜனம் போன்ற பக்தியையுடையதான என்று பொருள் கொள்வது பாங்கு. பஹுவ்ரீஹி கொள்ளாமல் 'பக்தியாகிற ஸித்தாஞ்ஜனத்தாலே' என்று கொண்டு (அதாவது ஸ்வயம் விசேஷ்யமாகக் கொண்டு) அதை **விலஸதா என்**பதிலே அந்வயிப்பாருமுண்டு. அகத்தினுள்ளே பக்திஸித்தாஞ்ஜனத்தினாலே விளங்குகின்ற (ஞானக்) கண்ணினாலே வீக்ஷமாண:— என்க.

**[தைவீம் ஸம்பதம் தே அபிஜாதா:]** *தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாய ஆஸுரீ மதா* என்றும் *மாசுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி* என்றுமுள்ள கீதாச்லோகங்களை இங்கே அநுஸந்திப்பது. ... (12)

**अस्येशाना जगत इति तेऽधीमहे यां समृद्धिं**
**श्रीः! श्रीसूक्तं बहुमुखयते तां च शाखानुशाखम् ।**
**ईष्टे कश्चिज्जगत इति यः पौरुषे सूक्त उक्तः**
**तं च त्वत्कं पतिमधिजगावुत्तरश्चानुवाकः ॥१३॥**

**அஸ்யேசாநா ஜகத இதி தேதீமஹே யாம் ஸம்ருத்திம்**
**ஸ்ரீ:! ஸ்ரீஸூக்தம் பஹுமுகயதே தாஞ்ச சாகாநுசாகம்,**
**ஈஷ்டே கச்சிஜ் ஜகத இதி ய: பௌருஷே ஸூக்த உக்த:**
**தஞ்ச த்வத்கம் பதிமதிஜகாவுத்தரச் சாநுவாக:** (13)

***பிராட்டியினுடைய வைபவப்ரதிபாதநத்திலே ஸ்ரீஸூக்தமானது இதம்பரமாக ப்ரவ்ருத்தமானதென்றும், புருஷஸூக்தாதிகளும் தத்வைபவப்ரதிபாதனத்திலே விச்ராந்தமாகிறதென்றும் அருளிச்செய்கிறாரிதில். ***अस्येशाना जगतः**—அஸ்யே சாநா, ஜகத:* என்பது ச்ருதியின் அநுவாதமிருக்கிறபடி. **ஹே ஸ்ரீ:! தே யாம் ஸம்ருத்திம் அஸ்யேசாநா ஜகத இதி அதீமஹே**— வாரீர் பெரிய பிராட்டியாரே! *அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ*. என்கிற வேதவாக்யத்தினால் உம்முடைய யாதொரு அதிசயத்தை அத்யயனம் பண்ணிவருகிறோமோ, நாம் (ஸம்ருத்திம்) **சாகாநுசாகம் ஸ்ரீஸூக்தம் பஹுமுகயதே**— அவ்வதிசயத்தை சாகைகள் தோறுமுள்ள ஸ்ரீஸூக்தமானது பஹுமுகமாக விசதீகரியாநின்றது. **பௌருஷே ஸூக்தே**—புருஷஸூக்தத்தில், **ஜகத: கச்சித் ஈஷ்டே இதி ய: உக்த:**— 'ஜகத்துக்கெல்லாம் ஒருவன் ஈச்வரனாகை

வுளன்' என்று யாவனொருவ பரமபுருஷன் ஓதப்பட்டிராநின்றானோ, **தம்—அந்த ஸ்ரீமந் நாராயணனை, உத்தர: அநுவாக:—** நாராயணாநுவாகமானது, **த்வத்கம்: பதிம் அதி ஜகௌ—**உம்முடைய பர்த்தாவாக ஓதிற்று.

தைத்திரீய ஸம்ஹிதை நாலாவது காண்டம் நாலாவது ப்ரச்நத்தின் முடிவிலுள்ள ✳**அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ**✳ என்கிற வாக்கியத்தினால் பெரிய பிராட்டியாருடைய ஓர் பெருமை [அதாவது, ஸகலஜகதீச்வரீத்வரூபமான பெருமை] அநுஸந்திக்கப்பட்டுவருகின்றது. அந்தப் பெருமையை ✳**ஹிரண்யவர்ணாம் ஹரிணீம்**✳ என்று தொடங்கியுள்ள ஸ்ரீஸூக்தமானது நன்கு விவரித்திருக்கின்றது. புருஷ ஸூக்தத்தினால் நாராயணனுக்கு ஏற்படுகிற பெருமையுங்கூட நீர் அவனுக்கு திவ்யமஹிஷியாக அமையப் பெற்றதனாலேயே என்பதாக நாராயணாநுவாகம் தெரிவிக்கின்றது என்றாராயிற்று.

இரண்டாவது பாதத்தின் முதலிலிருக்கிற **ஸ்ரீ:** என்பது ஸம்புத்தி. **[சாகாநு சாகம்] "इदं हि पौरुषं सूक्तं सर्ववेदेषु पठ्यते—** இதம் ஹி பௌருஷம் ஸூக்தம் ஸர்வ வேதேஷு பட்யதே." என்று ஒவ்வொரு வேத சாகையிலும் புருஷஸூக்தம் ஓதப் பட்டுவருவதாகச் சொல்லியிருக்கிறது. கூரத்தாழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் ✳**ஸர்வச்ருதிஷ்வநுகதம்— ஸூக்தம் து பௌருஷம்**✳ என்றருளிச்செய்தார். அந்த புருஷஸூக்தம் போலவே ஸ்ரீஸூக்தமும் தைத்திரீய சாகையில் மாத்திரமன்றிக்கே மாத்யந்திநாதி ஸகல சாகைகளிலு மோதப்படுவதாக ✳சாகாநுசாகமென்பதனால் தெரிவிக்கப்படுகிறது. **[ஈஷ்டே கச்சிஜ் ஜகத இதி ய: பௌருஷே ஸூக்த உக்த:]** "ஈஷ்டே கச்சிஜ் ஜகத:" என்று இவ்வாநுபூர்வியான வாக்யம் புருஷஸூக்தத்தில் காணாமையினாலே இது சப்தாநுவாதமன்று, அர்த்தாநுவாதம் என்று கொள்ளக் கடவது. ✳**पुरुष एवेदं सर्वम्। यद्भूतं यच्च भव्यम्। उतामृतत्वस्येशानः**✳ இத்யாதிவாக்யங்களின் அர்த்தாநுவாதமிருக்கிறபடி. [உத்தரச்சாநுவாக:] ✳**अद्भ्यस्संभूतः**✳ என்று தொடங்கியுள்ள அநுவாகம் உத்தராநுவாகமெனப்படுகிறது. அதில் ✳**ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ**✳ என்கிற வாக்யம் இங்கு விவக்ஷிதம். ... ... (15)

उद्बाहुस्त्वामुपनिषदसावाह नैका नियन्त्रीं
श्रीमद्रामायणमपि परं प्राणिति त्वच्चरित्रे ।
स्मर्तारोऽस्मज्जननि यतमे सेतिहासैः पुराणैः
निन्युर्वेदानपि च ततमे त्वन्महिम्नि प्रमाणम् ॥ १४ ॥

உத்பாஹுஸ் த்வாமுபநிஷதஸாவாஹ நைகா நியந்த்ரீம்
ஸ்ரீமத்ராமாயணமபி பரம் ப்ராணிதி த்வச்சரித்ரே
ஸ்மர்த்தாரோஸ்மஜ்ஜநநி யதமே ஸேதிஹாஸை: புராணை:
நிந்யுர் வேதாநபி ச ததமே த்வந்மஹிம்நி ப்ரமாணம். (14)

✳✳✳கீழ்ச்சொன்ன உபநிஷத்து மாத்திரமன்றிக்கே இதிஹாஸ புராணங்களுங் கூட பிராட்டியின் வைபவ ப்ரதிபாதகத்திலே உபாஸீனங்களாகின்றன வென்கிறதில். **[ஹே அஸ்மஜ்ஜநநி]** எங்களுக்குத் தாயான பெரிய பிராட்டியாரே! **[ஆஹோ உபநிஷத்**

**அகா உத்பாஹுஸ்ஸதீ த்வாம் நியந்த்ரீம் நாதம]** கீழ்ச்லோகத்திற் சொன்னபடியே உபநிஷத்துமாத்ரமே கைதூக்கிக்கொண்டு உம்முடைய ஐச்வர்யத்தைச் சொல்லுகிறதன்று; பின்னையோவென்னில்; **[ஸ்ரீமத்ராமாயணமபி த்வச்சரித்ரே பரம் ப்ராணிதி]** ஸ்ரீராமாயணமும் உம்முடைய மஹிமவர்ணனத்தில்தான் உயிர்தரித்திருக்கின்றது. **[ஸ்மர்த்தார: யதமே]** ஸ்ம்ருதி கர்த்தாக்களென்று யாவர் சில பராசராதி மஹர்ஷிகளுள்ளார்களோ. [ததமேபிச] அவர்களுங்கூட. **ஸேதிஹாஸை: புராணை:—** இதிஹாஸங்களோடு கூடின புராணங்களாலே. இதிஹாஸங்களாலும் புராணங்களாலுமென்றபடி. **[வேதாந் த்வந்மஹிம்நி ப்ராமாணம் நிந்யு:]** வேதங்களை உம்முடைய வைபவத்திலே ப்ராமாண மாக்கினார்கள். 'ப்ராமாணம் நிந்யு:' என்றது 'ப்ராமாணதாம் நிந்யு:' என்று பொருள்படுகையாலே பாவப்ரதாநநிர்தேச மென்று கொள்ளக்கடவது. த்விகர்மகப்ரயோகம்.

*ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம் **உத்க்ருத்ய புஜமுச்யதே*** என்ற ப்ராமண வசனத்தையடியொற்றி **(உத்பாஹு:)** என்றது. **'அஸௌ உபநிஷத்'** என்றது—கீழ்ச்லோகத்தில் 'உத்தரச்சாநுவாக:' என்றதை நினைப்பூட்டிநிற்கும்.

[ஸ்ரீமத்ராமாயணமபித்யாதி] "இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றம் சொல்லுகிறது" என்ற ஸ்ரீவசநபூஷண திவ்ய ஸூக்தி இங்கே அநுஸந்தேயம். **"காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாச் சரிதம் மஹத்"** என்று ஸ்ரீவால்மீகி பகவான் தானே வாயோலையிட்டு வைக்கையாலே இங்ஙனே துணிந்து சொல்லக் குறையில்லையாயிற்று. கருணாகாகுத்ஸ்தனென்று போற்றப்படுகிற ஸ்ரீராமபிரான் கருணாமூர்த்தியாயிருந்தாலும் பிராட்டியின் ஸஹயோகத்தினாலேயே அப்பெருமானுடைய காருண்யம் தலையெடுத்துக் கார்யகரமாகிறதென்றும், அவள் கூடியிருக்கப் பெறாத காலத்தில் அவனுடைய காருண்யம் ஜீவிக்கிறதில்லை யென்றும் அந்வயவ்யதிரேகங்களாலே நிரூபிக்கத் தகுதியிருப்பதனாலே ஸ்ரீராமாயணம் முழுவதும் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் வைபவப்ரதிபாதனத்திலே விச்ராந்தமாகிறதென்று சொல்லுவது பொருத்த முடைத்தேயாகும். ப்ராணிதி என்ற க்ரியையினால் ஸ்ரீராமாயணத்திற்கு ஸீதாசரித்ரப்ரதிபாதனமே ஜீவநாடியென்பது தேறும்.

உத்தரார்த்தத்தில் **யதமே** என்றது யே என்றபடி. **ததமே** என்றது தே என்றபடி. வேதோபப்ரும்ஹண ப்ரவ்ருத்தர்களான பராசராதிமஹர்ஷிகளும் உம்முடைய வைபவத்தைப் பேசாநின்றவர்களாய்க் கொண்டு வேதார்த்தத்தை விவரித்தவர்களாயினர் என்றதாயிற்று. (14)

आकुब्राममनियामकादपि विभोरासर्वनिर्वाहकात्
ऐश्वर्यं यदिहोत्तरोत्तरगुणं श्रीरङ्गभर्तुः प्रिये ।
तुङ्गं मङ्गलमुज्ज्वलं गरिमवत्पुण्यंपुनः पावनं
धन्यं यत्तदश्च वीक्षणभुवस्ते पञ्चषा विप्रुषः ॥१५॥

ஆகுக்ரமநியாமகாதபி விபோராஸர்வநிர்வாஹகாத்
ஐச்வர்யம் யதிஹோத்தரோத்தரகுணம் ஸ்ரீரங்கபர்த்து: ப்ரியே!,
துங்கம் மங்கலமுஜ்ஜ்வலம் கரிமவத் புண்யம் புந: பாவநம்
தந்யம் யத் தததச்ச வீக்ஷணபுவஸ் தே பஞ்சஷா விப்ருஷ:. (15)

***"मानाधीना मेयसिद्धिः— மாநாதீநா மேயஸித்தி:" ஆகையாலே பிராட்டியின் வைபவமாகிற ப்ரமேயத்திற்கு இன்னின்னவை ப்ரமாணமென்று கீழே காட்டின ராயிற்று. இனி ப்ரமாணப்ரதிபந்நமான பிராட்டியினைச்வர்யத்தை யருளிச்செய்து போருகிறார்.

ஸ்ரீரங்கபர்த்து: ப்ரியே!—ஸ்ரீரங்கநாத திவ்யமஹிஷியான ஸ்ரீரங்கநாச்சியாரே!; ஆ குக்ராமநியாமகாத் ஸர்வநிர்வாஹகாத் ஆவிபோரபி—சிறியதொருக்ராமத்திற்குத் தலைவனானவன் முதற்கொண்டு ஸர்வலோகநிர்வாஹகனான பிரமனளவாக, உத்தரோத்தர குணம் யத் ஐச்வர்யமஸ்தி— மேன் மேலும் பெருகிக்கொண்டே செல்லும் அதிசயத்தையுடைத்தான யாதோரைச்வர்யமுள்ளதோ; அதுவும்; துங்கம்—மேருமுதலிய மலைகளாய்க்கொண்டு உன்னதமாயிருக்கின்ற வஸ்துஸமூஹமும்; மங்களம்—சந்தன குஸுமஹரித்ரா குங்குமாதிகளாய்க்கொண்டு மங்கள கரமாயிருக்கின்ற வஸ்துஸமூஹமும், உஜ்ஜ்வலம்— மணித்யுமணிதீபாதிகளாய்க் கொண்டு ப்ரசுரப்ரகாசயுக்தமான வஸ்துஸமூஹமும்; கரிமவத்—ஹிமவான் மந்தரம் மைநாகம் முதலிய மலைகளாய்க் கொண்டு குருத்வகுணயுக்தமான வஸ்து ஸமூஹமும், புண்யம்—யஜ்ஞயாகாதிகளாய்க் கொண்டு பரலோகஸாதநபூதஸுக்ருதராசியும்; புந:—பின்னையும், பாவநம்— கங்காயமுநாஸரஸ்வதி காவேரீப்ரப்ருதிகளாய்க்கொண்டு பரிசுத்திகரங்களாயிருப்பனவும், தந்யம்— நவநிதிரூபமாய்க்கொண்டு பாக்யபலபூதவஸ்துஸமூஹமும். யத்அஸ்தி— யாதொன்றுள்ளதோ; தத்அதச்ச— ஆக இப்படிப்பட்ட மேம்பட்டவஸ்துக்களெல்லாம்; தே வீக்ஷணபுவ: பஞ்சஷா: விப்ருஷ:—தேவரீருடைய கடாக்ஷகந்தளிதங்களான ஐந்தாறு சிறுதிவலைகளாமித்தனை. உலகத்தில் நல்லதென்று குலாவப்படுகிற ஸகலவஸ்துக்களும் லக்ஷ்மீகடாக்ஷ லேசத்தாலேதான் நன்மைபெற்று விளங்குகின்றனவென்று சொல்லிற்றாயிற்று.

உலகில் நல்லதாக நவிலப்படுகிற எந்த வஸ்துவும் ஒரேயளவில் நிற்பதில்லை. ஒருவனை ஒரு குக்ராமத்திற்கு அதிகாரியாகக் காண்கிறோம். மற்றொருவனை ஒரு பெரிய க்ராமத்திற்குத் தலைவனாகக் காண்கிறோம். இன்னொருவனை மஹாநகரத்திற்கு அத்யக்ஷனாகக் காண்கிறோம். இப்படி மேன்மேலும் ஏற்றம் ஏறிக்கொண்டே செல்லுகிறது. கல்வி அழகு முதலிய எதையெடுத்துக் கொண்டாலும் இவையும் எல்லார்க்கும் ஸமரீதியில் இருப்பதில்லை. அளவுகடந்த நீசோச்சபாவம் காணப்பட்டேவருகிறது. இதைத்திருவுள்ளம்பற்றியே 'உத்தரோத்தரகுணம்' என்றருளிச் செய்தபடி. ஆழ்வானருளிச்செய்த ஸ்ரீஸ்தவத்தில் "ஐச்வர்யம் மஹதேவ வா அல்பமதவா" "ஐச்வர்யம் யதசேஷபும்ஸி" என்ற இரண்டு ச்லோகங்களின் பொருளையும் இங்கு ச்லோகம் ஸூசிப்பித்ததாயிற்று. ... ... (15)

एको मुक्तातपत्रप्रचलमणिघृणात्कारिमौलिर्मनुष्यः
स्यहन्नावल्गथो न गणयति मतान् यत् क्षणं क्षोणिपालान्।
यत्सं तिष्ठन् ऽन्यः कृपणमशरणो दर्शयन् दन्तपङ्क्ती
तत्ते श्रीरङ्गराजप्रणयिनि! नयनोदञ्चितन्यञ्चिताभ्याम् ॥१६॥

Wealth and Poverty are due to Nachiar Grace or absence

ஏகோ முக்தாதபத்ரப்ரசலமணிகணத்காரிமௌலிர் மநுஷ்ய:
த்ருப்யத்தந்தாவலஸ்தோ ந கணயதி நதாந் யத் க்ஷணம் க்ஷோணி பாலாந்
யத் தஸ்மை திஷ்டதேந்ய: க்ருபணமசரணோ தர்சயந் தந்தபங்க்தீ
தத் தே ஸ்ரீரங்கராஜப்ரணயிநி! நயநோதஞ்சிதந்யஞ்சிதாப்யாம். (16)

*** உலகில் ஒருவன் ஐச்வர்யத்தின் எல்லையில் நிற்பதும் மற்றொருவன் தாரித்ர்யத்தின் எல்லையில் நிற்பதுமெல்லாம் லக்ஷ்மீகடாக்ஷத்தின் உண்மையாலும் இன்மையாலுமே யென்கிறாரிதில். **ஹே ஸ்ரீரங்கராஜப்ரணயிநி!**—வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே!, **ஏகோ மநுஷ்ய: த்ருப்யத்தந்தாவலஸ்த:**—ஒரு மனிதன் மத்தவாரணத்தின் மீது வீற்றிருப்பவனாகி, **முக்தாத பத்ரப்ரசலமணிகணத்காரிமௌலி:**—முத்துக்குடையில் அசைகின்ற ரத்னஸரங்களாலே கணகண வென்று ஒலி செய்யப்பெற்ற முடியையுடையனாய், **நதாந் க்ஷோணிபாலாந்**—அச்சமயத்தில் தன்னை வணங்கின அரசர்களை, **க்ஷணம் ந கணயதி இதி யத்**—ஒரு நொடிப்பொழுதும் லக்ஷியம் செய்கிறதில்லை யென்பதான ஐச்வர்ய காஷ்டை யாதொன்றுண்டோ, இதுவும். **அந்யோ மநுஷ்ய:**— வேறொரு மனிதன், **க்ருபணம்** (யதாததா) **தந்தபங்க்தீ தர்சயந்**—ரிக்கதைந்யம் விளங்கும்படி பல்வரிசைகளைக் காட்டிக்கொண்டிருப்பவனாய், **தஸ்மை திஷ்டதே இதி யத்**—கீழ்ச்சொன்ன மதோன்மத்தனுக்குத் தன்வறுமையை வெளியிட்டுக்கொண்டு நிற்கிறானென்பதான தாரித்ர்ய காஷ்டை யாதொன்றுண்டோ; **தத் தே நயநோதஞ்சிதந்யஞ்சிதாப்யாம்**—அதெல்லாம் தேவரீருடைய கடாக்ஷவீக்ஷணத்தின் விஸ்தாரத்தாலும் ஸங்கோசத்தாலுமேயாம். ஐச்வர்ய காஷ்டைக்கு ஹேது நயநோதஞ்சிதம்; தாரித்ர்யகாஷ்டைக்கு ஹேது நயநந்யஞ்சிதம் என்று க்ரமேண அந்வயித்துக் கொள்வது.

"கண்டார்வணங்கக் களியானைமீதே கடல் சூழுலகுக்கொரு காவலராய், விண்டோய் நெடு வெண்குடை நீழலின்கீழ் விரிநீருலகாண்டு" என்று (பலச்ருதியில்) திருமங்கையாழ்வாரருளிச்செய்கிறபடியே ஒருவன் மதயானைமீதேறி முத்துக்குடை நீழலின்கீழ் வீற்றிருக்க, ஸாமந்தர்கள் வந்து பணிந்தாலும் கடைக்கண்ணோக்கமும் செய்யாதே மதாந்தனாய்க்கிடக்கும் செல்வச் செருக்கைக் காணாநின்றோம்; அந்த நிலைமையில் மற்றொருவன் தன்னுடைய ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்களைக் காட்டிக்கொண்டு பல்லையுமிளித்துக்கொண்டு யாசகமுத்ரையோடுநிற்கும் தரித்ரக்கோலத்தையும் காணாநின்றோம்; இவையிரண்டும் லக்ஷ்மீகடாக்ஷவீக்ஷாவிஸ்தார—ஸங்கோச நிபந்தனம் என்றாராயிற்று.

*तस्मै तिष्ठते* என்றவிடத்தில் *प्रकाशनस्थेयाख्ययोश्च* என்றபாணினிஸூத்ரத்தினால் சதுர்த்தீகாரகம் ப்ராப்தமாயிற்று. **गोपी कृष्णाय तिष्ठते—आशयं प्रकाशयतीत्यर्थः ।** ஆழ்வானும் வரதராஜஸ்தவத்தில் ***विश्वस्मै त्वं करिगिरिपुरस्तिष्ठस इह*** என்று ப்ரயோகித்தருளினார். கண்டார்வணங்கக் களியானைமீதே விண்தோய்நெடு வெண்குடை நீழலின்கீழ் வீற்றிருக்குமவனைக்குறித்துத் தன்னுடைய யாசகத்வத்தைக் காட்டிக்கொண்டு நிற்கிறானென்ற பொருளில் **'தஸ்மை திஷ்டதே'** என்று ப்ரயோகம் செய்யப்பட்டிருப்பதாகக் கொள்ளக்கடவது. மூன்றாவது பாதத்தின் முடிவில் **'தந்தபங்க்திம்'** என்று ஏகவசநாந்தமாகச் சிலர் பாடமோதுவர்; **'தந்தபங்க்தீ'** என்று த்விவசநாந்தமான பாடமே சிறக்கும்.

இதில், ரதி தொடங்கி ஏழுநன்மைகள் சொல்லப்பட்டன; ஸகலவிதநன்மை களும் இவற்றில் அடங்கிப்போகும். ரதியாவது ப்ரீதி; பகவத்பாகவதர்களைக் கண்டால் நிலாத் தென்றல் புஷ்பம் சந்தனம் முதலானவற்றைக் கண்டாற்போல் உண்டாகும் உகப்பு. மதிஸரஸ்வதிகளாவன—*तन्मे समर्पय मतिं च सरस्वतीं च त्वामञ्जसा स्तुतिपदैर्यदहं धिनोमि—தந்மே ஸமர்ப்பய மதிஞ்ச ஸரஸ்வதீஞ்ச த்வாமஞ்ஜஸா ஸ்துதிபதைர் யத ஹம் திநோமி." (வரதராஜபஞ்சாசத்) என்று தேசிகன் ப்ரார்த்தித்தபடியே வகுத்த விஷயத்தில் ஸ்தோத்ரம் செய்வதற்குப் பாங்கான ஞானமும் வாக்கும். த்ருதியாவது தைர்யம்; ஸ்தைர்யமாகவுமாம். மனவுறுதியைச் சொன்னபடி. ஸம்ருத்தியாவது—*युवा स्यात्साधु युवाध्यायकः* என்று தொடங்கி உபநிஷத்தில் சொல்லப்பட்ட பூர்த்தி. ஸித்தியாவது—கோரினவை யெல்லாம் தலைக்கட்டப்பெறுகை. ஸ்ரீயாவது இன்ன தென்று சொல்லவேண்டுமோ? ஸ்ரீஸ்தவத்தில் *ஐச்வர்யம் யததேசஷபும்ஸி யதிதம்* இத்யாதி ச்லோகார்த்தம் இங்கே அநுஸந்தேயம்.

'தவ ப்ரூலதா யதோமுகம் சலேத்' என்னமல் 'சிசலிஷேத்' என்று அருளிச் செய்ததனால் லக்ஷ்மீகடாக்ஷம் ப்ரஸரிப்பதற்கு முன்னமே இந்நன்மைகளெல் லாம் வெள்ளமிடத்தொடங்குமென்றதாயிற்று. அஹம்பூர்விகையாவது—நான்முன்னே கிளம்புகிறேன், நான்முன்னே கிளம்புகிறேன் என்று ரதிமதிஸரஸ்வத்யாதிகள் ஒவ் வொன்றும் முற்கோலிப்புறப்படுகை. [अहं पूर्वम् अहं पूर्वमिति विवादो यस्यां क्रियायाम्—सा अहम्पूर्विका ।] கூலங்கஷா: பரிவஹந்தி என்றது புத்ரபௌத்ர சிஷ்யப்ரசிஷ்யபரம் பரையளவும் வெள்ளங்கோப்பதைச் சொன்னபடி. (17)

Do

सह स्थिरपरित्रसव्रजविरिञ्चनाकिञ्चनैः
अनोकहबृहस्पतिप्रबलविक्लबप्रक्रियम् ।
इदं सदसदात्मना निखिलमेव निम्नोन्नतं
कटाक्षतदुपेक्षयोस्तव हि लक्ष्मि! तत्ताण्डवम् ॥१८॥

Differences in the world are due to your grace and absence of it

ஸஹ ஸ்திரபரித்ரஸவ்ரஜவிரிஞ்சநாகிஞ்சநை:
அநோகஹப்ருஹஸ்பதிப்ரபலவிக்லபப்ரக்ரியம்,
இதம் ஸதஸதாத்மநா நிகிலமேவ நிம்நோந்நதம்
கடாக்ஷதுபேக்ஷயோஸ் தவ ஹி லக்ஷ்மி! தத் தாண்டவம். (18)

*உலகிற் காணும் ஸகலபதார்த்தங்களிலுமுள்ள நீசோச்சபாவமுமெல்லாம் லக்ஷ்மீகடாக்ஷஸங்கோசவிகாஸங்களுக்கு அதீனமானதென்கிறார் இதில். ஸ்திர பரித்ரஸ வ்ரஜ விரிஞ்சநாகிஞ்சநைஸ் ஸஹ] ஸ்திரமென்றது ஸ்தாவர மென்றபடி; பரித்ரஸ மென்றது ஜங்கமமென்றபடி. வ்ரஜம்—ஸமூஹம். மரம் மலை மண்டபம் முதலானவை ஸ்தாவரங்கள். அப்படி நிலைநின்று நில்லாமல் அலைந்து கொண்டும் அசைந்து கொண்டு மிருப்பவை ஜங்கமங்கள். இவ்விதமான பேதம் தவிர, [விரிஞ்சந அகிஞ்சநை:] அண்டங் களுக்கெல்லாம் அதிபதியான நான்முகக்கடவுள்போல மஹாதனிகர்களாயிருத்தல், ஒருசிறுபொருளுமின்றிக்கே அகிஞ்சநர்களாயிருத்தல் என்கிற பேதமும் காணுகின்றே மிறே. இவ்வளவேயுமன்றிக்கே [அநோகஹப்ருஹஸ்பதி] *கவையாகிக்கொம்பாகிக் காட்டகத்தே நிற்குமவையல்ல மல்ல மரங்கள்—சவைநடுவே, நீட்டோலைவாசியா.

கின்றான் குறிப்பறிய மாட்டாதவனேமரம்* என்கிறபடியே மரமென்னலாம்படியான அறிவிலிகளாயிருத்தல், பூலோகப்ருஹஸ்பதி யென்னும்படியாக வித்வந்மணிகளாயிருத்தல் என்கிறபேதமும் காணாநின்றோமிறே. இவ்வளவேயுமன்றிக்கே [ப்ரபல விக்ல பப்ரக்ரியம்] வீரசூரர்களாயிருத்தல் எலியெலும்பர்களாயிருத்தல் என்னும்படியான வாசியும் காணநின்றது. இப்படிப்பட்ட ப்ரகாரங்களையுடைத்தான. [இதம் நிகிலமேவ] இந்த ப்ரபஞ்சம் முழுவதுமே. [ஸதஸதாத்மநா நிம்நோந்நதம்] நல்லதாயும் கெட்டதாயுமிருக்கிற ஆகாரத்தாலே அதமமாயும் உத்தமமாயுமிராநின்றது. [ஹே லக்ஷ்மி! தத் தவ கடாக்ஷதத்துபேக்ஷயோ: தாண்டவம் ஹி:] வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே! கீழ் விவரித்தவண்ணமான ஏற்றத்தாழ்வுகளெல்லாம் உம்முடைய கடாக்ஷத்தினுடையவும் அஃதில்லாமையினுடையவும் கூத்தாமத்தனை.

ஸ்தாவரஜங்கமாத்மகமான இப் ப்ரபஞ்சத்தில், சிலர் ஸம்பந்நர்களாயும், சிலர் தரித்ரர்களாயும், சிலர் வித்வான்களாயும் சிலர் மூடர்களாயும், சிலர் ப்ரபலர்களாயும் சிலர் துர்ப்பலர்களாயும் இப்படி விஷமமான நிலையிலிருப்பதற்குக்காரணமேதென்னில்; பிராட்டியின் அநுக்ரஹப்ரவாஹம் பெருகினவிடம் உத்துங்கஸ்திதியிலும், அது பெருகாதவிடம் அதமஸ்திதியிலுமிருக்கின்றதென்றதாயிற்று. ... ... (18)

कालें शंसति योग्यतां चिदचितोरन्योन्यमालिङ्गतोः

भूताहंकृतिबुद्धिपञ्चकरणीखान्तप्रवृत्तीन्द्रियैः ।
अण्डानावरणैस्सहस्रमकरोत्तान् भूर्भुवस्स्ववेतः
श्रीरङ्गेश्वरदेवि! ते विहृतये संकल्पमानः प्रियः ॥१९॥

**காலே சம்ஸதி யோக்யதாம் சிதசிதோ: அந்யோந்யமாலிங்கதோ:**
**பூதாஹங்க்ருதிபுத்திபஞ்சகரணீஸ்வாந்தப்ரவ்ருத்தீந்த்ரியை:**
**அண்டாநாவரணைஸ் ஸஹஸ்ரமகரோத் தாந் பூர்புவஸ்ஸ்வர்வத:**
**ஸ்ரீரங்கேச்வரதேவி! தே விஹ்ருதயே ஸங்கல்பமாந: ப்ரிய:** (19)

***எம்பெருமான் ஜகத்ஸ்ருஷ்டியை நிர்வஹித்தருள்வதும் லக்ஷ்மீவிஹாரார்த்தமாகவேயென்கிறாரிதில். ஹே ஸ்ரீரங்கேச்வரதேவி!—ஸ்ரீரங்கநாச்சியாரே; [சிதசிதோ: அந்யோந்யம் ஆலிங்கதோ: ஸதோ:] சேதநாசேதநங்கள் ஒன்றோடொன்று பிசிறிக் கிடக்குமளவில்; அதாவது, *அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸாத:* என்றும், *அசிதவிஷ்டாந் ப்ரலயே ஜந்தூந்* என்றும் சொல்லும்படியான நிலைமையிலிருந்தவளவிலென்றபடி. [காலே யோக்யதாம் சம்ஸதிஸதி] கரணகளேபரயோகம் செய்கையாகிற ஸ்ருஷ்டிக்குரிய பருவம் வந்தவாறே என்றபடி. காலமானது ஸ்ருஷ்டியோக்யதையைத்தெரிவிப்பதாவது இதுவேயிறே.

அப்போது எம்பெருமான் செய்தருள்வதேதென்னில்; [தே விஹ்ருதயே] உம்முடைய திருவிளையாடலுக்குறுப்பாக. [ப்ரிய: ஸங்கல்பமாந:] உம்முடைய வல்லபனான ஸ்ரீரங்கநாதன் *सोऽकामयत बहु स्यां प्रजायेयेति ।* என்று உபநிஷத்து ஓதினபடியே பஹுபவநஸங்கல்பம் செய்துகொண்டவனாய். [பூத அஹங்க்ருதி புத்தி பஞ்சகரணீ ஸ்வாந்த ப்ரவ்ருத்தீந்த்ரியை:] பூதங்களாவன—நிலம் நீர் தீகால் விசும்பு என்கிற பஞ்சபூதங்கள். அஹங்க்ருதியாவது—ப்ரக்ருதியின் விகாரரூபமான அஹங்காரதத்வம்.

புத்தியாவது மஹத்தத்வம். (பஞ்சகரணீ) பஞ்சாநாம் கரணாநாம் ஸமாஹார:—பஞ்சகரணீ = கரணங்களாவன இந்திரியங்கள். மேலே ப்ரவ்ருத்தீந்த்ரிய சப்தத்தாலே கர்மேந்த்ரியங்களைச் சொல்லுகையாலே இங்கு ஜ்ஞாநேந்த்ரியங்களைச் சொல்லிற்றாகக் கடவது. *செவிவாய் கண் மூக்குடலென்றைம்புலனும்* என்னப்பட்ட த்வக் சக்ஷுஸ் ச்ரோத்ர ஜிஹ்வா க்ராணங்களைச் சொன்னபடி. ஸ்வாந்தமாவது—ஜ்ஞாநேந்த்ரியங்களினுடையவும் கர்மேந்த்ரியங்களினுடையவும் செய்கைகளுக்கு இன்றியமையாததான மனஸ்ஸு. ப்ரவ்ருத்தீந்த்ரியங்களாவன — கர்மேந்த்ரியங்களென்னப்படுகிற வாக்பாணிபாத பாயூபஸ்தங்கள். இவற்றோடுகூடவும். [ஆவரணை:] ஸப்தாவரணங்களோடு கூடவும். [பூர் புவஸ் ஸ்வர்வத்:] பூலோகபுவர்லோக ஸ்வர்லோகங்களையுடையவையான. [தாந் ஸஹஸ்ரம் அண்டாந்] ப்ரஸித்தங்களாய் ஆயிரக்கணக்காகவுள்ள அண்டங்களை. [அகரோத்] படைத்தருளினன்.

ஸ்ரீரங்கநாச்சியாரே! உம்முடைய முகோல்லாஸத்தையே தன்பேறாகவுடையவனை உம்முடைய ப்ரியவல்லபன் (ஸ்ரீரங்கநாதன்), உம்முடைய விஹாரார்த்தமாகவே *பொங்கைம் புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்காரமனங்களே* என்னப்பட்ட தத்வங்களோடும் ஸப்தாவரணங்களோடும் பூர்புவஸ் ஸ்வர்லோகங்களோடும் கூடின [ஸ்ரீவிஷ்ணுபுராணாதிஸித்தங்களான] பல்லாயிரமண்டங்களைப் படைத்தருளினானென்றதாயிற்று. இவற்றுக்கு லீலாவிபூதியென்று பெயர்; யாருடைய லீலையென்றால் இவ்வதம்பதிகளினுடைய லீலையென்னவேணும். இருவர்க்கும் லீலையாயிருக்கச் செய்தேயும் முக்கியமாகப் பிராட்டியினுடைய லீலையைக் கணிசித்தே இவற்றைப் படைத்தருளினதாகச் சொன்னவிது எம்பெருமானுடைய பரமரஸிகத்வத்தைச் சொல்லிற்றாய்த் தலைக்கட்டும். ... (19)



शब्दादीन्विषयान् प्रदर्श्य विभवं विस्मार्य दास्यात्मकं
वैष्णव्या गुणमाययात्मनिवहान् विप्लाव्य पूर्वः पुमान् ।
पुंसा पण्यवधूविडम्बितवपुषा धूर्तानिवायासयन्
श्रीरङ्गेश्वरि! कल्पते तव परीहासात्मने केलये ॥२०॥

சப்தாதீந் விஷயாந் ப்ரதர்ச்ய விபவம் விஸ்மார்ய தாஸ்யாத்மகம்
வைஷ்ணவ்யா குணமாயயாத்மநிவஹாந் விப்லாவ்ய பூர்வ: புமாந்,
பும்ஸா பண்யவதூவிடம்பிவபுஷா தூர்த்தாநிவாயாஸயந்
ஸ்ரீரங்கேச்வரி! கல்பதே தவ பரீஹாஸாத்மநே கேலயே. (20)

*** "விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும், பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா" என்கிறபடியே சேதநர்களுக்குக் கரணகளேபரப்ரதானம் பண்ணினது பகவத்விஷயத்தில் அவற்றை விநியோகிப்பதற்கேயாயிருக்கும். அப்படியிருந்தும், *தாமுளரே தம்முள்ளம் முள்ளுளதே தாமரையின் பூவுளதே ஏத்தும் பொழுதுண்டே, வாமன் திருமருவுதாள் மருவு சென்னியரே, செவ்வேயருநரகம் சேர்வதரிது* (இரண்டாந்திருவந்தாதி) என்கிறபடியே நிர்வேதத்துக்குடலாக அந்த கரணகளேபரங்களை விஷயாந்தரங்களிலே மூட்டுகின்ற ஸம்ஸாரிகளையும் ஸர்வேச்வரனேயாயிற்று படைப்பது; இதுதானும் பிராட்டியோடுகூடி ஒரு விநோதரஸ

நடியாடிக்கைக்காகவிறே. மஹாராஜர்கள் கூன்குறள் குருடு செவிடுகளையும் சேரவைத்துக் கூத்தாடவைத்துக் கண்டு களிப்பதென்றொன்றுண்டே; அந்தக் கட்டளையிலே இதுவுமாகிறது. ஆக, பிராட்டியின் நர்மகேளிக்காகவே இங்ஙனே செய்து போருவதென்கிறாரிதில்.

ஹே ஸ்ரீரங்கேச்வரி! — வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே!; பூர்வ: புமாந் — புராண புருஷராகிய ஸ்ரீரங்கநாதர், சப்தாதீந் விஷயாந் ப்ரதர்ச்ய — சப்தாதிகளான விஷயாந்தரங்களைக் காட்டி, தாஸ்யாத்மகம் விபவம் விஸ்மார்ய — பகவச் சேஷத்வமாகிற ஐச்வர்யத்தை மறக்கச் செய்து, பண்யவதூவிடம்பிவபுஷா பும்ஸா — விலைமாதின் வேஷங்கொண்ட புருஷனாலே, தூர்த்தாந் இவ — தூர்த்தர்களை [வஞ்சிப்பது] போல, வைஷ்ணவ்யா குணமயயா — * தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா * என்னப்பட்டதாய், விஷ்ணுவாகிய தன்னாலே நிருமிக்கப்பட்டதாய், ஸத்வ ரஜஸ் தமோரூப குணத்ரயாத்மகமாயிருக்கிற மாயையினாலே, ஆத்மநிவஹாந் விப்லாவ்ய — ஜீவராசிகளை வஞ்சித்து, ஆயாஸயந் — பரிச்ரமப்படுத்தாநின்றவராய்க் கொண்டு, தவ பரிஹாஸாத்மநே கேலயே கல்பதே — தேவரீருக்கு வேடிக்கை விளையாட்டின் பொருட்டு ஸமர்த்தராகிறார்.

பண்யவதூவிடம்பிசரீரகனை புருஷனுடைய ஸ்தானத்தில் 'தைவீமாயா' கொள்ளக்கடவது. தூர்த்தர்களின் ஸ்தானத்திலே ஆத்ம நிவஹங்கள் கொள்ளக்கடவன. ஆக, காரணமும் கர்மமும் உபமாநத்வேந ஒன்றும் உபமேயத்வேந ஒன்றுமாய இரண்டு வஸ்து சொல்லப்பட்டதுபோல கர்த்தாவும் இரண்டு சொல்லப்பட வேண்டும். 'பூர்வ: புமாந்' என்று பரமபுருஷனொருவனே கர்த்தாவாகச் சொல்லப்பட்டிருக்கக் காண்கிறோம். பரமபுருஷஸ்தாநே ஒரு மஹாப்ரபு உபமாநமாக நெஞ்சிற் கொள்ளத் தக்கவனவன். நவராத்ரி முதலான உத்ஸவவிசேஷங்களிலே ஒரு மஹாப்ரபுவானவன் ஒரு புருஷனுக்கு வேச்யையின் வேஷமிடுவித்து அவனைக் கொண்டு சில தூர்த்தர்களை மயக்கி [அதாவது, அவனை மெய்யான மாதராக நினைக்கச்செய்து] அவ்விநோதத்தாலே தான் தன் மஹிஷிக்கு ஒரு லீலா ரஸமளிப்பன்; அதுபோலவே எம்பெருமானும் தைவமாயையைக்கொண்டு ஸம்ஸாரிகளை விஷயப்படுகுழிகளிலே விழவிட்டு இவ்வகையான விநோதத்தாலே தன்னுடைய தேவியாருக்கு ஒரு லீலா ரஸம் காட்டுவதாகச் சொல்லிற்று. ச்லோகத்தில் 'பூர்வ: புமாந்' என்கிற ஒரு கர்த்ருபதமேயுள்ளது; அதிலிருந்து புமாந் என்பதை மாத்திரம் அநுஷங்கம் செய்து கொண்டு நிர்வஹிக்கக்கடவது. பண்யவதூவிடம்பிவபுஷா பும்ஸா தூர்த்தாந் ஆயாஸயந் புமாநிவ—என்றதாயிற்று. (20)

यद् दूरे मनसो यदेव तमसः पारे यदत्यद्भुतं
यत् कालादपचेलिमं सुरपुरी यद्गच्छतो दुर्गतिः ।
सायुज्यस्य यदेव सूतिरथ वा यद् दुर्ग्रहं मद्गिरां
तद्विष्णोः परमं पदं तव कृते मातस्समाम्नासिषुः ॥२१॥

யத் தூரே மநஸோ யதேவ தமஸ: பாரே யதத்யத்புதம்
யத் காலாதபசேலிமம் ஸுரபுரீ யத் கச்சதோ துர்க்கதி:,
ஸாயுஜ்யஸ்ய யதேவ ஸூதிரத வா யத் துர்க்ரஹம் மத்கிராம்
தத் விஷ்ணோ: பரமம் பதம் தவ க்ருதே மாதஸ் ஸமாம்நாஸிஷு: (21)

***கீழ்ச்லோகத்தில் பிராட்டிக்கான லீலாவிபூத்யுபயோகத்தை அருளிச்செய்தார்; இனி நித்யவிபூதியின் உபயோகத்தைப்பற்றியும் சொல்லவேண்டுகையாலே அது சொல்லுகிறது இந்த ச்லோகத்தில். ஹே மாத:! தத் விஷ்ணோ: பரமம் பதம் தவ க்ருதே ஸமாம்நாஸிஷு:—தாயீர் ஸ்ரீரங்கநாச்சியாரே! அந்தத் திருநாடு தேவரீருக்காகவே அமைந்ததென்று வைதிகர்கள் ஓதுகின்றார்களென்கை. *வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணு: அசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ* என்று திவ்யதம்பதிகளிருவர்க்குமே அது ஆஸ்தானமாகச் சொல்லப்பட்டிருந்தாலுங்கூட *ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப* (திருவாய்மொழி 4-9-10.) என்கிற பாசுரத்தை ஆழ்ந்து நோக்குமளவில் பிராட்டிக்கே ப்ராதாந்யம் ப்ரதிபந்நமாகிறபடியாலே "பரமம் பதம் தவ க்ருதே ஸமாம்நாஸிஷு:" என்கை குறையில்லையென்க. அந்த பரமபதத்தின் சிறப்பை மூன்று பாதங்களாலே பரக்கவருளிச்செய்கிறார்.

[யத் மநஸ: தூரே.] இப்படிப்பட்டதென்று நெஞ்சாலும் நினைக்கவொண்ணாதென்றபடி. இன்னாருடைய நெஞ்சென்று இங்கே சொல்லிற்றில்லையாகிலும் ஸ்வாமியெம்பெருமானார் ஸ்ரீவைகுண்டகத்யத்திலே "ब्रह्मादीनां वाङ्मनसागोचरे श्रीमति वैकुण्ठे दिव्यलोके—ப்ரஹ்மாதீநாம் வாங்மநஸாகோசரே ஸ்ரீமதி வைகுண்டே திவ்யலோகே" என்றருளிச்செய்திருக்கையாலே நான்முகக்கடவுள் முதலானோருடைய நெஞ்சுக்கு மெட்டாததென்று சொல்லிற்றாகக் கொள்ளக்கடவது.

[யதேவ தமஸ: பாரே] யாதொரு ஸ்தாந விசேஷம் ப்ரக்ருதிமண்டலத்திற்கு அப்பாலுள்ளதோ. *तमसः परस्तात्* என்றும் *क्षयन्तमस्य रजसः पराके* என்றும் ச்ருதியும் ஓதிற்று. *चतुर्दशभुवनात्मकमण्डं दशगुणितोत्तरं चावरणसप्तकं समस्तं कार्यकारणजातमतीत्य वर्तमाने परमव्योमशब्दाभिधेये ......... वैकुण्ठे* என்ற ஸ்ரீவைகுண்டகத்ய ஸ்ரீஸூக்தியுமிங்கே அநுஸந்திப்பது.

[யத் அத்யத்புதம்] அத்புதமென்றும் ஆச்சர்யமென்றும் உலகில் சப்த விசேஷங்கள் வழங்கிவருவதுண்டே; இதெல்லாம் அந்த ஸ்தாநவிசேஷத்திற்கே பொருந்துமத்தனை. அங்குள்ள ஸந்நிவேசவிசேஷங்களாலே மிகவும் அற்புதமானது. "அத்யத்புதத்வமாவது—அநுக்ஷணம் அபூர்வாச்சர்யாவஹத்வம்" என்பது தத்வத்ரயவ்யாக்க்யானத்திலே மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி. [யத் காலாத் அபசேலிமம்] *न कालस्तत्र वै प्रभुः* என்றும் *कलामुहूर्तादिमयश्च कालो न यद्विभूतेः परिणामहेतुः* என்றும், *या वै न जातु परिणामपदास्पदं सा कालातिगा तव परा महती विभूतिः* என்றும் சொல்லுகிறபடியே காலக்ருதபரிணாமமில்லாத தேசமென்கை. காலத்தை வரையறுப்பவர்களான சந்த்ரஸூர்யர்கள் அங்கில்லாமையாலும், காலவிபாகத்திற்கு அங்கு ப்ரயோஜநந்தானொன்றுமில்லாமையாலும், அகாலகால்யமாயிருக்கும்.

[யத் கச்சத: ஸௌரபுரீ தூர்க்கதி:] அந்த ஸ்தான விசேஷத்தையடைந்தவனுக்கு ஸ்வர்க்காதிலோகம் நரக நிர்விசேஷமாய்த்தோற்றுமென்கை. *एते वै निरयास्तात! स्थानस्य परमात्मनः—ஏதே வை நிரயாஸ் தாத! ஸ்தாநஸ்ய பரமாத்மந:* என்னக்கடவதிறே.

[பாதேவ ஸாயுஜ்யஸ்ய ஸங்கதி:] *निरञ्जनः परमं साम्यमुपैति* *தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்வர்* என்கிறபடியே அவனோடொப்பபெறுகின்ற பரமஸாம்யாபத்திக்கு நிலமானவிடம். [அதவா மந்த்ராம் யாத் நூர்க்ரஹம்] திவ்யதம்பதிகளின் திவ்யக்ருபாவிசேஷத்தாலே எதையும் வருணிக்க வல்லவரான தம்முடையவாக்குக்கு எட்டாததென்கிறார். இது மிகவுமதிசயிக்கத்தக்க விசேஷணம். *ப்ராஹ்மாதீநாம் வாங்மநஸாகோசரே* என்று ஸ்வாமியெம்பெருமானார் அருளிச்செய்தது சிறப்பன்று; *மந்த்ராம் நூர்க்ரஹமென்றவிதுவேயாயிற்று. சிறப்பென்று திருவுள்ளம் போலும். பெரிய திருமொழியில் (6—3—4)* சாந்தேந்து மென்முலையார்* என்னும் பாசுரத்தின் வியாக்கியானத்திலே பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்வது பாரீர்;—"கிடாம்பியம்மாள், சிறியாண்டான் பெருமாள்பணித்தானைப் பலகாலும் சொல்லும்; நான் சொல்லுகிற வாச்யவாசகங்களேயன்றோ பட்டரும் வ்யவஹரிக்கிறது என்றிருக்கவொண்ணாது; அங்குத்தைக்கு ஏற்றமுண்டு; முன்னே நின்ற தானே நான் தானென்றவாறே சிராயாய்த்தோற்றும்; அவர் சொன்னவாறே தனிரும் முறியுமாய்த்தோற்றும்" என்று. இப்படிப்பட்ட திருநாவீறுபெற்றதமக்கும் வருணிக்க நிலமல்லாததென்றவிது விலக்ஷணவாக்விந்யாஸமேயாகும். ஆக, இப்படிப்பட்ட திருநாட்டை, பெரியபிராட்டியாரே! தேவரீருடைய போகத்திற்கு அமைந்ததாகச் சொல்லுகிறார்கள். மேலே (ச்லோ. 23ல்) "भगवति! युवयोराहुरास्थानरत्नम् — பகவதி! யுவயோராஹுராஸ்தாநரத்நம்" என்று திவ்யதம்பதிகளிருவர்க்கும் முரித்தாகச் சொல்லுமத்தோடு இது விரோதியாது. ... ... (21)



हेलायामखिलं चराचरमिदं भोगे विभूतिः परा
पुण्यास्ते परिचारकर्मणि सदा पश्यन्ति ये सूरयः ।
श्रीरङ्गेश्वरदेवि! केवलकृपानिर्वाह्यवर्गे वयं
शेषित्वे परमः पुमान् परिकरा ह्येते तव स्फारणे ॥२२॥

ஹேலாயாமகிலம் சராசரமிதம் போகே விபூதி: பரா
புண்யாஸ் தே பரிசாரகர்மணி ஸதா பச்யந்தி யே ஸூரய:,
ஸ்ரீரங்கேச்வரதேவி! கேவலக்ருபாநிர்வாஹ்யவர்க்கே வயம்
சேஷித்வே பரம: புமாந் பரிகரா ஹ்யேதே தவ ஸ்பாரணே. (22)

***இங்கே ஒரு ச்லோகத்தில் லீலா விபூதியையும் மற்றொரு ச்லோகத்தில் நித்ய விபூதியையுமெடுத்து இவை பெரிய பிராட்டியாருடைய உபயோகத்திற்காகவென்றருளிச் செய்தார்; இதில், உபயவிபூதியும் உபயவிபூதியிலுமுள்ள பதார்த்தவர்க்கங்களும் பகவானும் ஆக எல்லாமும் பெரியபிராட்டியாருடைய விபூதியென்கிறார்.

[ஸ்ரீரங்கேச்வரதேவி!] வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே!; [இதம் அகிலம் சராசரம் தவ ஹேலாயாம்] ஜங்கமஸ்தாவராத்மகமாய்க் காணப்படுகிற இவ்வுலகமெல்லாம் தேவரீருடைய லீலையிலே விநியுக்தமாயிருக்கின்றது. *स्वं न्यञ्चच्छक्तिरत्यञ्चक्तिः कर्मसूपपादितैः। हरे विहरसि क्रीडाकन्दुकैरिव जन्तुभिः*— ஸ்வம் ந்யஞ்சச்சக்திரத்யஞ்சக்தி: கர்மஸூபபாதிதை:, ஹரே! விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி:* என்று, இவ்விபூதி லீலைக்காக உண்டானதாகவிறே சொல்லிற்று. [பரா விபூதி: போகே] த்ரிபாத் விபூதி

யானது தேவரீருடைய மிகச்சிறந்த போகத்திலே விநியுக்தமாயிராநின்றது. அது தான் நலமந்தமில்லதோர் நாடாகையாலே நிரவதிகாநந்த ஸந்தோஹத்திற்காகக் கண்டவிடமாயிற்று. [யே ஸூரய: ஸதா பச்யந்தி, தே புண்யா: தவ பரிசாரகர்மணி] *ஸதா பஶ்யந்தி ஸூரய:—ஸதா பச்யந்தி ஸூரய:* என்று திவ்யதம்பதிகளான தேவரீர் களை ஸதா தர்சிக்குமவர்களாக ச்ருதியிலே ஓதப்பட்ட பாக்யசாலிகளான நித்யமுக்தர் தேவரீருடைய குற்றேவல் தொழிலிலே விநியுக்தர்களாயிராநின்றார்கள். *சேஷை சேஷாசநகருடப்ரமுக அநந்த பரிஜநபரிசாரிகாபரிசரிதசரணயுகளத்வம் எம்பெரு மானுக்குப்போலே பிராட்டிக்கு முண்டிறே. "...ஆதிலும் பணிசெய்வது கருதிநின்றிக் கிறே." என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியை ஸ்மரிப்பது.

[வயம் கேவலக்ருபாநிர்வாஹ்யவர்க்கே] புபுக்ஷுக்களாயும் முமுக்ஷுக்களாயு முள்ள அஸ்மதாதிகள் தேவரீருடைய நிர்ஹேதுகக்ருபைகொண்டு நிர்வாஹிக்கத்தக்க வகுப்பிலே அடங்கியுள்ளோம். நாங்களும் ஒருபடி தேவரீருக்கு அடிமைப்பட்டவர் களாயிராநின்றோமென்றபடி. [பரம: புமாந் சேஷித்வே] பரம புருஷனான எம்பெரு மான் தேவரீருக்கு சேஷியாயிருந்துகொண்டு விநியோகப்படுகிறபடி. சேஷித்வமாவது கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வம். கைங்கரியங் கொள்ளுமவனாகையென்றபடி. [ஏதே தவ ஸ்பாரணே பரிகரா ஹி] ஆக இங்குச் சொன்ன ஸகலமும் தேவரீருடைய பெரு மையிலே சொருகிநிற்குமத்தனை. உமக்கு உறுப்பல்லாததொரு வஸ்து உபயவிபூதி யிலுமில்லையென்றதாயிற்று. ... ... ... ... (22)



आज्ञानुग्रहभीमकोमलपुरीपाला फलं मेजुषां
याऽयोध्येत्यपराजितेति विदिता नाकं परेण स्थिता।
भावैरद्भुतभोगभूमगहनैः सान्द्रा सुधास्यन्दिभिः
श्रीरङ्गेश्वरगेहलक्ष्मि! युवयोस्तां राजधानीं विदुः ॥२३॥

Sri Vaikuntam Nagar ...

ஆஜ்ஞாநுக்ரஹபீமகோமலபுரீபாலா பலம் பேஜுஷாம்
யாயோத்யேத்யபராஜிதேதி விதிதா நாகம் பரேண ஸ்திதா,
பாவைரத்புதபோகபூமகஹநைஸ் ஸாந்த்ரா ஸுதாஸ்யந்திபி:
ஸ்ரீரங்கேச்வரகேஹலக்ஷ்மி! யுவயோஸ் தாம் ராஜதாநீம் விது: (23)

***கீழ் *யத் தூரே மநஸ:* என்கிறச்லோகத்திலே பரமபதம் பிராட்டிக்காகக் கண்டதென்றார்; அந்தப் பரமபதந்தன்னிலே ஸ்ரீவைகுண்ட திவ்யநகரியானது திவ்ய தம்பதிகளுக்காகக் கண்டதென்றருளிச்செய்கிறார் இதில். [ஹே ஸ்ரீரங்கேச்வரகேஹ லக்ஷ்மி!] ஸ்ரீரங்கதிவ்ய விமானத்திற்கு அலங்காரமான ஸ்ரீரங்கநாச்சியாரே!; [யா புரீ] யாதொரு திவ்யநகரியானது. [ஆஜ்ஞாநுக்ரஹபீமகோமலபுரீபாலா] ஆஜ்ஞையாலே பயங்கரர்களாயும், அநுக்ரஹத்தாலே ஸௌம்யர்களாயுமிராநின்ற நகரபாலகர்களை யுடைத்தாயிராநின்றதோ என்கை. आज्ञया भीमाः, अनुग्रहेण कोमलाः என்று யதாக்ரமம் அந்வயம் கொள்ளக்கடவது. ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கமந்திர த்வாரபாலகர்களை வணங்கும் ச்லோகத்தில் *स्मेराननाक्षिकमलैर्नमतः पुनानान् दंष्ट्रागदाभ्रुकुटिभिः द्विषतो धुनानान्—ஸ்மேராநநாக்ஷிகமலைர் நமத: புநாநாந் தம்ஷ்ட்ராகதாப்ருகுடிபிர் த்விஷதோ துநாநாந்* என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். அதன் கருத்தாவது—

Vedo Srinivasan



த்வாரபாலகர்கள் பாகவதர்களுக்கு அநுகூலர்களாகவும், பகவத்பாகவதவிரோதிகளுக்கு ப்ரதிகூலர்களாகவுமிருப்பர்களாயிற்று; புன்முறுவல் கொண்ட முகத்தையும் திருக்கண்களையும் காட்டி அன்பர்களைப் புனிதர்களாக்குவர்; கோரப்பற்களையும் தடிகளையும் புருவநெறிப்பையுங்கொண்டு ப்ரதிகூலர்க்கு பயங்கரராயிருப்பர்கள் என்பதாம். அவ்வண்ணமாகவே இங்குங் கூறுகிறது. ஆஜ்ஞையை நடத்துகைக்கு இணங்கின கோலத்தைக்காட்டி அச்சமுறுத்து கின்றவர்களாயும், அநுக்ரஹம் செய்யும்படியைக் காட்டி ஸௌம்யரூபர்களாயுமிருக்கின்றனராம் புரீபாலர்கள்.

[பலம் பேஜுஷாம்—फलं भेजुषाम्] 'பேஜுஷாம் பலம்' என்று மாற்றியந்வயித்துக் கொள்வது. பக்தர்களுக்குப் பரமபுருஷார்த்தமானது என்றபடி. भेजिवांसः என்பது ப்ரதமாபஹுவசநம்; அதற்கு ஷஷ்டீபஹுவசநம் (பேஜுஷாம்) என்பது. பக்தாநாம் என்றபடி. இது க்வஸுப்ரத்யயாந்தமான சப்தம். திவ்யதம்பதிகளையடைந்தவர்களுக்குப் பரமப்ராப்யமானவிடம் என்றபடி.

[या अयोध्येति अपराजितेति विदिता— யா அயோத்யேதி அபராஜிதேதி விதிதா] தைத்திரீயாரண்யகத்தில் * देवानां पूरयोध्या * என்றும் * विवेशापराजिता * என்றும் அயோத்யையாகவும் அபராஜிதையாகவும் ஓதப்பட்டவிடம். அயோத்யா என்றது [योद्धुमशक्या—अयोध्या] என்கிற வ்யுத்பத்தியாலே ஒருவர்க்கும் யுத்தம்பண்ணி ஆக்ரமிக்கவொண்ணாதவிடம் என்றபடி. 'அபராஜிதா' என்றது ஒருகாலும் பராஜயமடையாதவிடம் என்றபடி. [नाकं परेण स्थिता— நாகம் பரேண ஸ்திதா] परेण नाकं पुरि हेममय्यां यो ब्रह्मकोशोऽस्त्यपराजिताख्यः பரேண நாகம் புரி ஹேமமய்யாம் யோ ப்ரஹ்மகோசோஸ்தி அபராஜிதாக்ய: * என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். ப்ரக்ருதிமண்டலத்துக்கு அப்பால் பொன்னுலகென்னப்படுகிற ஹிரண்மய புரியில் அபராஜிதை யென்று திருநாமமுடைய ஸ்தாநவிசேஷம் விளங்காநின்றது. * परेण नाकं निहितं गुहायाम् * என்கிற ச்ருதிவாக்யத்தைத் தழுவியருளிச் செய்தபடி.

[सुधास्यन्दिभिः अद्भुतभोगभूमगहनैः भावैः सान्द्रा— ஸுதா ஸ்யந்திபி: அத்புத போகபூம கஹநை: பாவைஸ் ஸாந்த்ரா] அவ்விடத்திலுள்ள பதார்த்தவிசேஷங்களைச் சொல்லுகிறபடி. ஸுதாஸ்யந்திபி:—அமுதத்தைப் பெருக்குகின்றவையாய் என்கை; பரமபோக்யங்களாயிருக்கின்ற என்றபடி. இது भावैः (பாவை:) என்பதற்கு விசேஷணம். भाव்களாவன— பதார்த்தங்கள், வஸ்துக்கள். அவை இன்னமும் எப்படிப் பட்டிருக்கின்றன வென்னில்; [அத்புதபோகபூமகஹநை:] ஆச்சரியமான ஸுகாநுபவங்களின் மிகுதியாலே அடர்ந்தவை. ஆக இப்படிப்பட்ட பதார்த்தங்களாலே ஸாந்த்ரா—நெருங்கியுள்ளது. [तां युवयोः राजधानीं विदुः— தாம் யுவயோ: ராஜதாநீம் விது:] அப்படிப்பட்ட திவ்யபுரியை திவ்யதம்பதிகளானவுங்களுடைய ராஜதானியாக வேதாந்திகள் அறிகின்றார்கள். * प्रधाननगरी राज्ञां राजधानीति कथ्यते ॥ * ... (23)

तस्यां च त्वत्कृपावन्निरवधिजनताविश्रमार्हावकाशं
संकीर्णं दाम्यतृष्णाकलितपरिकरैः पुंभिरानन्दनिघ्नैः ।
स्नेहादस्थानरक्षाव्यसनिभिरभयं शार्ङ्गचक्रासिमुख्यैः
आनन्दैकार्णवं श्रीभगवति युवयोरास्थानरत्नम् ॥२४॥

தஸ்யாஞ்ச த்வத்க்ருபாவந் நிரவதி ஜநதாவிச்ரமார்ஹாவகாசம்
ஸங்கீர்ணம் தாஸ்யத்ருஷ்ணாகலிதபரிகரை: பும்பிராநந்தநிக்நை:,
ஸ்நேஹாதஸ்தாநரக்ஷாவ்யஸநிபிரபயம் சார்ங்கசக்ராஸிமுக்யை:
ஆநந்தைகார்ணவம் ஸ்ரீ:! பகவதி யுவயோராஹுராஸ்தாநரத்நம். (24)

*** கீழ்ச்லோகத்தில், விண்ணுட்டிலே அயோத்யையென்றும் அபராஜிதையென்றும் ஓதப்பட்ட ராஜதாநியின் பெருமையையருளிச்செய்தார்; இதில் அங்குள்ள ஆஸ்தானத்தின் பெருமையைவருணித்தருளுகிறுர். திருமாமணி மண்டபத்தையாயிற்று ஆஸ்தாநரத்நமென்கிறது. [ஹே பகவதி ஸ்ரீ:!] ஷாட்குண்ய ஸம்பத்தமைந்தவாரீர் ஸ்ரீரங்க நாச்சியாரே!; [तस्यां च—தஸ்யாஞ்ச] கீழ்ச்லோகத்திற்சொன்ன திவ்ய ராஜதாநியிலே யென்றபடி. आस्थानरत्नं युवयोराहुः— ஆஸ்தாநரத்நம் யுவயோராஹு:] திருமாமணிமண்டபமொன்றை திவ்யதம்பதிகளான தேவரீர்களுக்கு உரித்தாக வேதாந்திகள் ஓதுகின்றுர்கள். அத்திருமண்டபந்தான் எப்படிப்பட்டதென்னில்; [त्वत्कृपावत् निरवधिजनताविश्रमार्ह-अकाशम्— த்வத்க்ருபாவத் நிரவதிஜநதாவிச்ரமார்ஹஅவகாசம்] தேவரீருடைய திருவருள் எப்படி நிரவதிகமோ, அப்படி நிரவதிகங்களான நித்யமுக்தத்திரள்கள் விச்ரமிப்பதற்குறுப்பான அவகாச விசேஷம் பொருந்தியது. நித்யமுக்தர்களின் நிரவதிகத்வத்தைச் சொல்லுமிடத்து ஸ்ரீரங்கநாச்சியாரின் திருவருள் போல நிரவதிகமென்று அருளிச்செய்தவிது மிகவும் ரஸிக்கத்தக்கது. இன்னமும் எப்படிப்பட்டதென்னில்; [दास्यतृष्णाकलितपरिकरैः आनन्दनिघ्नैः पुम्भिः संकीर्णम्–தாஸ்யத்ருஷ்ணாகலிதபரிகரை: ஆநந்தநிக்நை: பும்பி: ஸங்கீர்ணம்] அடிமை செய்வதிலுண்டான குதூஹலத்தினுலே குடைசாமரம் முதலான கைங்கர்யோபகரணங்களைக் கையிலேந்தியிருப்பவர்களும் அதுபற்றியே ஆனந்த பரவசர்களுமான நித்யமுக்தர்களாலே நிறைந்திருப்பது. ஸ்ரீவசநபூஷணத்தில் (413) "ஸ்வரூபப்ராப்தியை சாஸ்த்ரம் புருஷார்த்தமாகச்சொல்லாநிற்க ப்ராப்திபலமாய்க்கொண்டு கைங்கர்யம் வருகிறுப்போலே" என்றருளிச் செய்தபடியே, வேதாந்தசாஸ்த்ரங்களில் * परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते * என்று, அநாதிகர்மநிபந்தநமான அசித்ஸம்பந்தத்தாலே மறைந்துகிடந்த தன்னுடையதான அஸாதாரணுகாரத்தின் ஆவிர்ப்பாவரூபமான ப்ராப்தியையே புருஷார்த்தமாகச் சொல்லியிருந்தாலும், இப்படி ஆவிர்ப்பூதமான ஸ்வரூபத்தையுடைய ஆத்மா சேஷத்வத்தையிட்டே நிரூபிக்கப்படவேண்டியவனுகையாலே சேஷிவிஷயத்தில் கிஞ்சித்காரத்தாலல்லது செல்லாதபடியாயிருக்கையாலே அந்த ஸ்வரூபப்ராப்திபலமாய்க்கொண்டு பகவதநுபவஜநிதப்ரீதிகாரிதகைங்கர்யம் வந்து சேருமென்பது எம்பெருமானுர் தர்சனத்தின்ஸித்தாந்தமாகையாலே "தாஸ்யத்ருஷ்ணாகலிதபரிகர:" என்றருளிச்செய்தாராயிற்று. அந்த கைங்கர்யந்தான் உகந்தவிஷயத்திற் செய்யுமதாகையாலே துக்கரூபமாகவன்றிக்கே ஆனந்தரூபமாயிருக்குமாகையாலே உடனே "ஆநந்தநிக்நை:" என்றுமருளிச்செய்தாராயிற்று.

அந்த ஆஸ்தாநமண்டபம் இன்னமுமெப்படிப்பட்டதென்னில்; [स्नेहात् अस्थानर-क्षाव्यसनिभिः शार्ङ्गचक्रासिमुख्यैः अभयम्— ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷாவ்யஸநிபி: சார்ங்கச்க்ர அஸிமுக்யை: அபயம்] பரிவின் மிகுதியாலே கலங்கி மங்களாசாஸநம் செய்வதிலேயே ஊக்கமுடையவர்களான திவ்யாயுதாழ்வார்களாலே அச்சங்கெட்டிருக்கு

மிடம் என்றபடி. பரமபதத்திலே பயத்திற்குப்ரஸக்திதானும் இல்லாதிருக்க, அங்கு பயமிருப்பதாக வைத்து அது கெடுவதற்கு திருவாழியாழ்வான் திருச்சங்காழ்வான் முதலான திவ்யாயுதாழ்வார்களின் மங்களாசாஸநத்தை ஹேதுவாக அருளிச்செய்கிற விது, திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் (10) "ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு" என்றருளிச் செய்ததை அடியொற்றியாம். உபநிஷத்தில் **"एतत्साम गायन्नास्ते, हावु हावु हावु........"** இத்யாதியாகக் கூறியுள்ளபடியே நித்யமுக்தர்கள் பெருமிடறுசெய்து ஸாமகாநம் பண்ணுகிற ஆரவாரம் இடையறுதிருக்கச் செய்தே, சயனமாயிருக்கின்ற திருவனந்தாழ்வானுடைய செவியில் அது பட்டவாறே இது ஸாமகோஷம் என்பதைத் மறந்து அஸுர ராக்ஷஸர்கள் தீங்கிழைக்க இவ்விபூதியிலும் வந்து கூச்சலிடுகின்றார்கள் போலுமென்று ப்ரேமமடியாகக் கலங்கி அவர்கள் எம்பெருமானருகில் அணுகவொண்ணாதபடி விஷாக்நியை வாந்திசெய்துகொண்டேயிருப்பதாகவன்றோ மேலெடுத்த பாசுரத்தில் சொல்லிற்று. அது திருவனந்தாழ்வானொருவற்கேயன்று; திவ்யாயுதாழ்வார்களுக்கு மொக்குமென்கிறது இங்கு. 'இது அந்யதாஜ்ஞாநப்ரயுக்தந்தானே; திருநாட்டிலே அந்யதாஜ்ஞானத்திற்கு ப்ரஸக்தியுண்டோ?' என்று சிலர் சோத்யம் பண்ணுவர்களாயிற்று; அதற்கு இடமறும்படி 'ஸ்நேஹாத்' என்றருளிச் செய்தாராயிற்று. ச்ருதப்ரகாசிகையிலே **"संबन्धविशेषान्वितेषु प्रीतिः स्नेहः; यस्य विपाका अस्थान भयशङ्कित्वम् दोषानवभासः दोषेऽपिगुणत्वबुद्धिः इत्यादयः"** என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். ஜ்ஞாநதசையென்றும் ப்ரேமதசையென்றும் இரண்டாகவைத்து, ஜ்ஞாநதசையில் ரக்ஷ்யரக்ஷகபாவம் தங்கப்பிலே கிடக்குமென்றும், ப்ரேமதசையில் தட்டுமாறிக்கிடக்குமென்றும் ஸ்ரீவசநபூஷணத்திலருளிச்செய்ததுங்காண்க. இயற்கையிலேயே நிர்ப்பயமான திருநாட்டை ஹேது விசேஷத்தாலே அபயம் என்றருளிச் செய்தவிது அங்குள்ளாருடைய பரிவின் கனத்தைப் பேசுகையிலே பர்யவஸிதமென்றுணர்க.

இனி **ஆநந்தைகார்ணவம்** என்பது சரமமான விசேஷணம். அபரிச்சிந்நமான ஆனந்தமொன்று தவிர வேறு எதுவும் செல்லாதவிடமென்கை. ஆக இப்படிப்பட்ட திருமாமணிமண்டபத்தை திவ்யதம்பதிகளான தேவரீர்களுடைய திவ்யபோகத்திற்கு ஏகாந்தமான விடமாகச் சொல்லுகிறார்களென்றாராயிற்று. ... ... (24)

**तत्र स्रक्स्पर्शगन्धं स्फुरदुपरिफणारत्नरोचिर्वितानं**
**विस्तीर्यानन्तभोगं तदुपरि नयता विश्वमेकातपत्रम् ।**
**तैस्तैः कान्तेन शान्तोदितगुणविभवैरर्हता त्वामसंख्यैः**
**अन्योन्याद्वैतनिष्ठाघनरसगहनान् देवि बध्नासि भोगान् ॥२५॥**

**தந்த்ர ஸ்ரக்ஸ்பர்சகந்தம் ஸ்புரதுபரிபணாரத்நரோசிர் விதாநம்**
**விஸ்தீர்யாநந்த போகம் ததுபரி நயதா விச்வமேகாதபத்ரம்,**
**தைஸ் தை: காந்தேந சாந்தோதித குணவிபவைரர்ஹதா த்வாமஸங்க்யை:**
**அந்யோந்யாத்வைதநிஷ்டாகநரஸகஹநாந் தேவி! பத்நாஸி போகாந். (25)**

******** நித்யலோகத்திலே திருநாட்டில் திருமாமணி மண்டபத்தை வருணித்தருளினர். அத்திருமண்டபத்திலே ஸர்வசேஷியான எம்பெருமானோடுகூட

பிராட்டி திவ்யபோகங்களநுபவிக்கும்படியை யருளிச்செய்கிறார் இந்தச்லோகத்திலே. ஹேதேவி!— வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே!; தத்ர— அத்திருமாமணிமண்டபத்திலே; (அநந்தபோகம் விஸ்தீர்ய) என்பதிலே இதற்கு அந்வயம். அந்தத்திருவனந்தாழ்வானுடைய திருமேனிதான் எப்படிப்பட்டதென்னவருளிச்செய்கிறார் [स्रक्स्पर्शगन्धम्— ஸ்ரக்ஸ்பர்சகந்தம்] स्रजः स्पर्शगन्धाविव स्पर्शगन्धौ यस्य என்று விக்ரஹமாகக்கடவது. புஷ்பமாலையின் ஸ்பர்சமும் பரிமளமும் போன்ற ஸ்பர்சத்தையும் பரிமளத்தையுமுடையதென்கை. இத்தால் ஸௌகுமார்யமும் ஸௌகந்த்யமும் சொல்லிற்றாயிற்று. இன்னமும் எப்படிப்பட்டதென்னில்; [स्फुरदुपरिफणारत्नरोचिर्वितानम्—ஸ்புரதுபரிபணாரத்நரோசிர்விதாநம்] மேலே படத்திலுள்ள மாணிக்கங்களினின்று பெருகிச்செல்லுகின்ற தேஜ:புஞ்ஜமே மேற்கட்டியாக நின்றதென்கை. விதானமென்று தனியே யொன்று கட்டப்பட்டிருக்கவில்லை; திருவனந்தாழ்வானுடைய பணங்களின் மணித்திரளினின்று தோன்றுகிற ஜ்யோதிர் மண்டலமே விதானம் போன்றிராநின்றதாகச் சொல்லிற்றாயிற்று. ஆக இப்படிப் பட்ட [अनन्तभोगं विस्तीर्य— அநந்தபோகம் விஸ்தீர்ய] திருவனந்தாழ்வானுடைய திருமேனியை மெத்தையாக விரித்து. "ததுபரி" அதன் மேலே. "நிவிச்ய" என்றொரு ல்யபந்தம் கூட்டிக்கொள்ளலாம்; திருவனந்தாழ்வான் மீது எழுந்தருளியிருந்து என்றபடி. [विश्वम् एकाधिपत्यं नयता— விச்வம் ஏகாதிபத்யம் நயதா] 'காந்தேந' என்பதற்கு விசேஷணமிது. ✻ பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமேயாள்கின்ற வெம்பெருமான் ✻ என்றும், ✻ அகல்விசும்பும் நிலனுமிருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் ✻ என்றும் ✻ வீற்றிருந்தேழுலகுந்தனிக்கோல் செல்ல ✻ என்றும் சொல்லுகிறபடியே உபயவிபூதியையும் ஈரரசுதவிர்த்து ரக்ஷித்தருள்கின்றவனாயிற்று எம்பெருமான். அவன் இன்னமும் எப்படிப்பட்டவனென்னில்; [असंख्यैः तैस्तैः शान्तोदितगुणविभवैः त्वामर्हता — அஸங்க்யை: தைஸ் தை: சாந்தோதிதகுண விபவை: த்வாம் அர்ஹதா.] எம்பெருமானை முன்னிலைப்படுத்திச் சொல்லும்போது ✻ உனக்கேற்குங் கோலமலர்ப்பாவைக்கு ✻ என்பர்கள்; பிராட்டியை முன்னிலைப் படுத்திப் பேசும்போது 'தேவரீருக்கு ஏற்கும் அவன்' என்பர்கள். "तुल्यशीलवयोवृत्तां तुल्याभिजनलक्षणाम्। राघवोऽर्हति वैदेहीं तं चेयमसितेक्षणा॥— துல்யசீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம், ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா. ✻ என்று திருவடிபேசினபடியே பரஸ்பரம் ஏற்றிருக்கும் விஷயமிறே. [சாந்தோதித குண விபவை:] பகவச்சாஸ்த்ரங்களிலே எம்பெருமானுக்கு நித்யோதிததசையென்றும் சாந்தோதிததசையென்றும் இரண்டு நிலைமைகள் சொல்லப்பட்டுள்ளன; இங்கு விசேஷ வக்தவ்யமுண்டு ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில் (37) ✻ யமசரீத்ரையவ..........சாந்தோதித தச: ✻ என்றவிடத்து வியாக்கியானத்தில் விரிவாகஎழுதியிருக்கிறோம். இங்குச்சுருக்கமாகச் சொல்லுகிறோம். எம்பெருமான் தன்னுடைய ஸ்வரூபத்தையநுபவிக்கிற தசையாகிய சாந்தோதிததசைக்கு உரிய குணாதிசயங்களினால், த்வாம் அர்ஹதா—தேவரீருக்கு ஏற்றிருப்பவர். அத்திருக்குணங்கள் எப்படிப்பட்டவையென்னில்; [அஸங்க்யை:] எண்ணிறந்தவை. [தைஸ் தை:] என்றது அநிர்வசநீயங்களென்றபடி. அப்படிப்பட்டவை இப்படிப்பட்டவை என்னலாமத்தனைபோக்கி இன்ன படிப்பட்டவையென்று வாய்கொண்டு வருணிக்க முடியாதவையென்கை. ஆக இப்படிப்பட்ட குணாதிசயங்களினால் உமக்கு ஏற்றி

ருக்கின்ற [காந்தேந ஸஹ] அழகிய மணவாளனோடு கூட [अन्योन्याद्वैतनिष्ठाघनरसगहनान् भोगान् बध्नासि — அந்யோந்ய அத்வைத நிஷ்டாகநரஸகஹநாந் போகாந் பத்நாஸி] இன்சுவையேவடிவெடுத்த திவ்ய போகங்களையநுபவியாநின்றீர்; அந்த போகாநுபவங்களை யநுபவிக்கும் ஸமயத்தில் பரஸ்பரம் வ்யக்திபேதமும் காணவரிதாயிருக்குமாயிற்று. இருவரும் ஒருவ்யக்தியே என்னலாம்படி ஒருநீராகக்கலந்து பரிமாறுகின்ற பரிமாற்றத்தைப் பேசினபடி. அபிப்ராயத்தில் ஈஷத்தும் பேதமில்லாமல் கலந்து பரிமாறுகிறபடியைச் சொன்னவாறு. இரண்டாவது பாதத்தில் "ஏகாதபத்ரம்" என்று பாடமுண்டு. (25)

भोग्या वामपि नान्तरीयकतया पुष्पाङ्गरागैस्समं
निर्वृत्तप्रणयातिवाहनविधौ नीताः परीवाहताम् ।
देवि! त्वामनुनीलया सह मही देव्यस्सहस्रं तथा
याभिस्त्वं स्तनबाहुदृष्टिभिरिव स्वाभिः प्रियं श्लाघसे ॥२६॥

**போக்யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்கராகைஸ் ஸமம்**
**நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ நீதா: பரீவாஹதாம்,**
**தேவி! த்வாமநு நீலயா ஸஹ மஹீ தேவ்யஸ் ஸஹஸ்ரம் ததா**
**யாபிஸ் த்வம் ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ ஸ்வாபி: ப்ரியம் ச்லாகஸே. .... .... (26)**



***உலகில் ஒருவற்கு இரண்டு பார்யைகளுண்டானால் அவர்களுக்குள் பரஸ்பரம் மாத்ஸர்யம் வளரக்காணாநின்றோம்; எம்பெருமானோவென்னில், * தக்கார்பலர் தேவிமார் சாலவுடையீர், * என்கிறபடியே * பதினாறுபல்லாயிரமெண்ணிறந்த பெருந்தேவிமார்களையுடையனாயிரா நின்றான். இவர்களுக்குள் பரிமாற்ற மெங்ஙனே யிருக்குமென்னுமது சொல்லவேண்டுவதொன்றாகையாலே அது சொல்லுகிறது இந்த ச்லோகத்தில். பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதியில் * திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்—மாலோதவண்ணர்மனம் * என்றொரு பாசுரமருளிச் செய்கிறார். இதை அனந்தாழ்வான் ஒருவகையாக நிர்வஹிப்பரென்றும் பட்டர் ஒருவகையாக நிர்வஹிப்பரென்றும் அவ்விடத்து வியாக்கியானத்தில் அருளிச்செய்யப்படுகிறது. அனந்தாழ்வான் நிர்வஹிக்கும்படி யெங்ஙனே யென்னில்; * திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்! * என்பதை உபலக்ஷணமாக்கி "திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்! மண்மகட்கே தீர்ந்தவாறென்கொல்! ஆய்மகட்கே தீர்ந்தவாறு என்கொல்!" என்றாக்கி, ஸௌபரி ஐம்பது வடிவுகொண்டு ஐம்பது தேவிமார்பக்கலிலே ஏகரீதியாகவிருந்து அநுபவித்தாப்போலே எம்பெருமானும் ஒவ்வொரு திவ்யமஹிஷிபக்கலிலும் ஒருநீராகக் கலந்து பரிமாறுகிறபடியைச் சொல்லுகிறதாக அனந்தாழ்வானுடைய நிர்வாஹப்ரக்ரியை. இனி பட்டருடைய நிர்வாஹப்ரக்ரியை இந்த ச்லோகத்திலுள்ளபடியேயாம். உலகில் அநுபோக்தாக்கள் திவ்ய பீதாம்பரம் திவ்ய பூஷணம் புஷ்பம் சந்தனம் முதலானவற்றை விநியோகங் கொள்ளுமிடத்து இவை பரஸ்பரம் மாத்ஸரியம் கொள்ளுமவையல்லவே. அநுபவத்தில் எல்லாம் உபகரணகோடியிலே நிற்குமத்தனையேயன்றோவுள்ளது. மற்று

மென்று காணலாம்; திருமுலை திருத்தோள் திருக்கண் முதலான திவ்யாவயவங்களிலே யீடுபடும்போது ஓரவயவத்தில் ஈடுபடுங்கால் மற்றோர் அவயவம் ஸ்பர்த்தை கொள்ளுவதாகக் காண்கின்றிலோம். இவையெல்லாம் அசேதநபதார்த்தங்களாகை யாலே மாத்ஸர்யமோ ஸ்பர்த்தையோ கொள்ளக்காரணமில்லையாயிற்று. * தனக்கே யாக எனைக்கொள்ளுமீதே எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே * என்று * எம்மாவீட்டில் ஆழ்வார் நிஷ்கர்ஷித்தருளினது அசித்வத்பாரதந்த்ரியமாகையாலே அப்படிப்பட்ட பாரதந்த்ர்ய ஸீமாபூமியிலே நிற்கும் பிராட்டிமார்கள் பரஸ்பரம் மாத்ஸர்யமும் ஸ்பர்த்தையும் கொள்ளாதே கலந்து பரிமாறும்படியைக் கூறுகிறது இங்கு. எம்பெருமான் ஒருத்தியோடே ஸம்ச்லேஷிக்குமளவில் மற்றைப் பிராட்டிமார்கள் உபகரணகோடியிலே நின்று உகப்பர்களாயிற்று. இத்தால் ஸபத்நீஸௌஹார்த வைபவம் சொல்லிற்றுகிறது.

[**वामपि नान्तरीयकतया भोग्याः**—வாமபி நாந்தரீயகதயா போக்யா:] நாந்தரீயக மென்றது உபகரணமென்றபடி. பெருமாளும் பெரிய பிராட்டியாருமான அநுபவத் திலே மற்றைப்பிராட்டிமார்கள் குஸுமசந்தநாதிகள்போலே உபகரணகோடியிலே நிற்பர்கள். [**निर्वृत्तप्रणयातिवाहनविधौ नीताः परीवाहताम्**— நிர்வ்ருத்த ப்ரணயாதிவாஹந விதௌ நீதா: பரீவாஹதாம்] ஏரியிலே நீர்நிரம்பினால் உடைத்துக்கொண்டுபோகாமல் ஸாத்மிக்கைக்காகக் கலுங்கலெடுத்து விடுவதென்று ஒன்றுண்டே. உள்ளே தேங்கு கிற நீரும் புறவெள்ளமிடுகிற நீரும் ஒன்றேயாயிற்று. இவை பரஸ்பரம் புத்திபேதம் கொள்ளுகிறன வில்லையே. ‘நம்மை வெளித்தள்ளிவிட்டார்களே!’ என்று பரீவாஹ ஜலம் வெறுப்பாக நினைப்பதில்லை. ‘நாம் ஸ்தானத்திலேயே நிற்கிறோம்’ என்று உள்ளுள்ள தண்ணீர் உகப்பதுமில்லை. அதுபோலவாயிற்று இங்கும். ஏரியில் தங்கி நிற்கும் தீர்த்தத்தின் ஸ்தானத்திலே பெரிய பிராட்டியாரைக் கொள்வது. பரீவாஹ மாகப்புறம்புபட்ட தீர்த்தத்தின் ஸ்தானத்திலே மற்றைப்பிராட்டிமார்களைக்கொள்வது. ***पूरोत्पीडे तटाकस्य परीवाहः प्रतिक्रिया**—பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா * என்ற உத்தர ராமசரிதச்லோகம் இங்கே நினைக்கத்தக்கது. இத்தால், அபரிமித ஜலபூர்த்தியில் பரீவாஹக்ரியை இன்றியமையாதாப்போலே திவ்யதம்பதிகளின் உத் கூலமான போகத்தில் மற்றைப்பிராட்டிமார்களும் இன்றியமையாதவர்கள் என்ற தாயிற்று.

அப்படிப்பட்ட பிராட்டிமார்கள் யாவரென்ன; மூன்றும் பாதத்தில் சொல்லு கிறது [**देवि! त्वामनु नीलया सह मही देव्यस्सहस्रं तथा**—தேவி! த்வாமநு நீலயா ஸஹ மஹீ தேவ்யஸ் ஸஹஸ்ரம் ததா] என்று. ஸ்ரீதேவியானவள் ப்ரதாநபோக்யகோடியிலே நிற்பள். பூதேவியும் நீளாதேவியும் மற்றுமெண்ணிறந்த தேவிமார்களும் அவளை யநுஸரித்து நிற்பர்களாயிற்று. * பல்லாயிரம் பெருந்தேவிமாரோடு பௌவமெறி துவரை எல்லாருஞ்சூழச் சிங்காசனத்தேயிருந்தானை * என்றும், * பதினாறுமாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரையென்னுமதில் நாயகராகிவீற்றிருந்த மணவாளர் * என்றும், * தக்கார்புலர் தேவிமார்சாலவுடையீர் * என்றுமுள்ள பாசுரங்களை இங்கே அநுஸந்திப்பது.

இப்பிராட்டிமார்களைப் பெரிய பிராட்டியார் எங்ஙனே நினைத்திருக்கும்படி யென்ன, அது சொல்லுகிறது நான்காவது பாதத்தில் [**यामिस्त्वं स्तनबाहुदृष्टिभिरिव**

**स्वाभिः प्रियं श्लाघसे**—யாபிஸ் த்வம் ஸ்தநபாஹூத்ருஷ்டிபிரிவ ஸ்வாபி: ப்ரியம் ச்லாகஸே] என்று. பெரிய பிராட்டியார் தம்முடைய ஸ்தநபுஜாதிகளான அவயவங்களாக வாயிற்று மற்றைப்பிராட்டிமார்களை நினைத்திருப்பது. ✳ **प्राणितूर्यसेनाङ्गानामेकवद्भावः** ✳ என்கிற அநுசாஸநத்தின்படியே ஏகவசநமாக முடியாமல் **"ஸ்தநபாஹூத்ருஷ்டிபி:"** என்று பஹுவசநமாகநிற்பதன் உபபத்தியை மஹான்கள்வாயிலே கேட்டுணர்க. இந்த ப்ரயோகத்தையடியொற்றியே தேசிகனும் பாதுகாஸஹஸ்ரத்தில் **"मुखबाहूरुपादेभ्यः"** என்று பஹுவசநாந்தமாகவே ப்ரயோகித்தாரென்பதும் இங்கு உணரத்தக்கது. **श्लाघसे** என்றது **रमयसे** என்றபடி. ... ... ... ... ... (26)

**ते साध्यास्सन्ति देवा जननि ! गुणवपुर्वेषवृत्तस्वरूपैः**
**भोगैर्वा निर्विशेषास्सवयस इव ये नित्यनिर्दोषगन्धाः ।**
**हे श्रीः! श्रीरङ्गभर्तुस्तवच पदपरीचारवृत्त्यै सदाऽपि**
**प्रेमप्रद्राणभावाविलहृदयहठात्कारकैङ्कर्यभोगाः ॥२७॥**

**தே ஸாத்யாஸ் ஸந்தி தேவா ஜநநி! குணவபுர்வேஷவ்ருத்தஸ்வரூபை:**
**போகைர் வா நிர்விசேஷாஸ் ஸவயஸ இவ யே நித்யநிர்தோஷகந்தா:,**
**ஹே ஸ்ரீ: ஸ்ரீரங்கபர்த்துஸ் தவச பதபரீசார வ்ருத்த்யை ஸதாபி**

**ப்ரேமப்ரத்ராணபாவாவிலஹ்ருதயஹடாத்காரகைங்கர்யபோகா:** ... .... (27)

✳✳✳ இந்த ச்லோகத்தினால் பரிசாரகப்ரபாவத்தையருளிச் செய்கிறார். **[ஹே ஜநநி!]** தாயாரான ஸ்ரீரங்கநாச்சியாரே!. **[ते साध्यास्सन्ति देवाः—தே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:]** ✳ **यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः** ✳ என்கிற ச்ருதிவாக்யத்தைப் பின்பற்றி இது அருளிச் செய்கிறபடி. அபரிமிதர்களான நித்யமுக்தர்கள் பரிசாரகர்களாக விளங்காநின்றார்கள். அவர்கள் தாம் எப்படிப்பட்டவர்களென்னில்; "குணவபுர்வேஷவ்ருத்தஸ்வரூபை:" இத்யாதியாலே அவர்களுடைய சிறப்புச் சொல்லுகிறது. **[நித்யநிர்தோஷகந்தா:]**. மாயவன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே அழுந்துகையாகிற தோஷஸ்பர்ச மற்றவர்கள். **[குணவபுர் வேஷவ்ருத்தஸ்வரூபை: போகைர் வா நிர்விசேஷா:]** அபஹதபாப்மத்வாதி குணங்கள், திவ்யமங்களவிக்ரஹம், சங்கசக்ராதிகளைத் தரித்திருக்கையாகிற வேஷம், ஆஜ்ஞாநுக்ரஹாதிவ்யாபாரம், ஜ்ஞாநாநந்தாமலத்வாதி ஆத்மஸ்வரூபம், பகவதநுபவ விபூத்யநுபவங்கள் ஆகிய இவற்றிலே சிறிதும் வாசியின்றிக்கேயிருப்பவர்கள். ✳ **तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति** ✳ என்று உபநிஷத்து ஓதின கட்டளையிலே பரமஸாம்யாபந்நராயிருக்குமவர்களென்றபடி. **நிர்விசேஷா:** என்றது சிறிதும் பேதமில்லாதவர்கள் என்றபடி; திவ்யதம்பதிகளான தேவரீர்களோடும் தம்மோடும் (பரஸ்பரம்) பேதமில்லாதவர்களென்கை. அதாவது, **[ஸவயஸ இவ]** நண்பர்களைப் போன்றிருப்பவர்கள்.

இவர்கள் தாம் எதற்காக இருக்கிறார்களென்ன, **[ஸதாபி ஸ்ரீரங்கபர்த்துஸ் தவச பதபரீசாரவ்ருத்த்யை]** தேவரீருக்கும் தேவரீருடைய வல்லபருக்கும் நித்யகைங்கரியத்தின் பொருட்டேயாயிற்று அவர்களுடைய ஸத்தை. ✳ தேவிமாராவார் திருமகள் பூமி, ஏவமற்றமரராட் செய்வார் ✳ என்ற திருவாய்மொழிப் பாசுரம் இங்கே யநுஸந்திப்பது.

பிறர்க்குப் பணிவிடை செய்வதென்பது நாட்டில் துக்கரூபமாகக் காண்கையாலே அவர்களுக்கும் இது துக்க ரூபமாக இருக்குமோ வென்ன, * உற்றேனுகந்து பணி செய்து * என்கிறபடியே, உள்கனிந்தெழுந்ததோர் அன்பினால் நெஞ்சுருகி நிற்குமளவிலே கைங்கரியம் செய்தல்லது நிற்க முடியாத நிலையை வாய்ந்து ப்ரேம பலாத்காரத்தாலே அடிமை செய்யுமவர்களாகையாலே அது தன்னையே போகமாகக் கொண்டவர்களென்றபடி. ஆக இப்படிப்பட்ட ஸாத்யா தேவாஸ் ஸந்தி. (27)

**ப்ரேம ப்ரத்ராண பாவ—** ப்ரேமத்தினால் கசிந்த நிலைமை கொண்டும், **ஆவிலஹ்ருதய—** ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞானத்தாலே நிலை கலங்கின நெஞ்சு கொண்டுமிருப்பவர்களென்கை. * ஸ்நேஹாத் அஸ்தாந ரக்ஷாவ்யஸநிகளிறே.

**स्वरूपं स्वातन्त्र्यम् भगवत इदं चन्द्रवदने!**
**त्वदाश्लेषोत्कर्षाद्भवति खलु निष्कर्षसमये ।**
**त्वमासीर्मातः! श्रीः! कमितुरिदमित्थंत्वविभवः**
**तदन्तर्भावात्त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि ॥२८॥**

**ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத இதம் சந்த்ரவதநே!**
**த்வதாச்லேஷோத்கர்ஷாத் பவதி கலு நிஷ்கர்ஷஸமயே,**
**த்வமாஸீர் மாத: ஸ்ரீ: கமிதுரிதமித்தந்த்வவிபவ:**
**ததந்தர்பாவாத் த்வாம் ந ப்ருதகபிதத்தே ச்ருதிரபி.** .... ... ... (28)

***பெரிய பிராட்டியார் எம்பெருமானுக்கு ஸ்வரூப நிரூபக தர்மமாயிருக்கும்படியை யருளிச் செய்கிறார் இந்தச் ச்லோகத்தினால். **[ஹே சந்த்ரவதநே! மாத:! ஸ்ரீ:!]** அடியார்களை யுகப்பிக்கவல்ல திருமுகமண்டல முடைய தாயாரே!. **[நிஷ்கர்ஷஸமயே]** சாஸ்த்ரார்த்தத்தை நிஷ்கர்ஷித்துச் சொல்லுமளவில் என்றபடி. சாஸ்த்ரார்த்தத்தைத் தெளிந்து சொல்லில் இங்ஙனேயாயிற்றுச் சொல்லலாவது. எங்ஙனே யென்னில்; **[भगवत इदं स्वरूपं स्वातन्त्र्यं त्वदाश्लेषोत्कर्षात् खलु भवति —** பகவத: இதம் ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் த்வதாச்லேஷோத்கர்ஷாத் கலு பவதி.**]** தேவரீரோட்டைச் சேர்த்தியினால் தான் எம்பெருமானுக்கு ஸ்வாதந்த்ர்யமாகிற ஸ்வரூபம் ஸித்திக்கிறது. இதுதான் சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ மென்கிறார். எம்பெருமானுக்கு அநந்யாதீந ஸத்தாகமான ஸ்வரூபம் இவளதீனமென்கை பொருந்துமோ வென்ன, அதற்கு உபபத்தி சொல்லுகிறது மூன்றும் பாதம் **[कमितुः इदमित्थंत्व विभवः त्वमासीः—** கமிது: இதமித்தந்த்வ விபவ: த்வம் ஆஸீ:] எம்பெருமானுக்கு தேவரீரே **इदंत्व** விபவமாகவும் **इत्थंत्व** விபவமாகவும் இராநின்றீர்; (அதாவது) * திருவில்லாத் தேவரைத் தேறேன்மின்தேவு * என்று திருமழிசைப் பிரானருளிச் செய்கையாலே 'அயம் ஈச்வர:' என்று விசேஷ்யநிர்த்தேசம் பண்ணும்போது பிராட்டியையிட்டே பண்ணவேண்டியதாயிருக்கிறது. ச்ரிய: பதியென்றும் திருமால்என்றும் சொல்லவேண்டியிருக்கிறது. எம்பெருமான் பக்கலிலே பிராட்டியைப் பார்த்தாலன்றி 'இவன் ஈச்வரன்' என்று சொல்லுவதில்லை. அப்படியே எம்பெருமானுக்கு லக்ஷணம் சொல்லவேணுமானால் ச்ரிய: பதித்வமே லக்ஷணமாகச்

சொல்லப்படுகிறது. ஆக இப்படிப்பட்ட தன்மையைக்கொண்டு *कमितुरिष्टमिरर्थत्व-विषय: स्वामासी: * என்றருளிச்செய்தது மிகப்பொருந்தும்.

இம்மூன்றுபாதங்களால் அருளிச்செய்த பொருளை நான்காவதுபாதம் ஸ்திரீகரிக்கிறது [तदन्तर्भावात्त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि— ததந்தர்ப்பாவாத் த்வாம் ந ப்ருதகபிதத்தே ச்ருதிரபி] என்று. பிராட்டியைப்பற்றிப் பேசுவதற்கு ஸ்ரீஸூக்தமென்றொரு சிறப்புக்குதியிருந்தாலும் கரைகட்டாக்காவேரிபோன்ற வேதத்தில் பிராட்டியைப் பற்றித்தனித்துச் சொல்லாததேன்? என்று சங்கிப்பார்க்கு ஸமாதானமாம்படி இது அருளிச்செய்தது. எம்பெருமானுடைய ஸ்வரூபநிரூபக தர்மமாக அவனில் அந்தர்ப்பவித்திருக்கையாலே அவனைச் சொன்னவிடமெங்கும் பிராட்டியையும் சொல்லிற்றுமென்று கொண்டு தனிப்பட ஓதிற்றில்லையென்றதாயிற்று. (28)

तव स्पर्शादीशं स्पृशति कमले! मङ्गलपदम्
तवेदं नोपाधेरुपनिपतितं श्रीरसि यतः ।
प्रसूनं पुष्यन्तीमपि परिमलर्द्धिं जिगदिषुः
न चैवंत्वादेवं स्वदत इति कश्चित्कवयते ॥२९॥

தவ ஸ்பர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே! மங்கலபதம்
தவேதம் நோபாதேருபநிபதிதம் ஸ்ரீரஸி யத:
ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமளர்த்திம் ஜிகதிஷு:
நசைவந்த்வாதேவம் ஸ்வதத இதி கச்சித் கவயதே. ... ... ... (29)

***ஆங்காங்கு ப்ரமாண வசனங்கள் எம்பெருமானை மங்களசப்தத்தினால் நிர்தேசித்திருப்பதுண்டு; * மங்களம் பகவான்விஷ்ணுர் மங்களம் மதுஸூதந:, மங்களம் புண்டரீகாக்ஷ மங்களம் கருடத்வஜ: * என்றும், * பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களானாஞ்ச மங்களம் * என்று மித்யாதிகளிலே அது காண்பதுண்டே; அப்படி எம்பெருமான திறத்திலே மங்கள பதப்ரயோகம் காண்பதெல்லாம் பிராட்டியின் ஸம்பந்தத்தினாலென்றும், பிராட்டிக்கு அது நிருபாதிகமென்றும் மருளிச செய்கிறாரிதில்.

[कमले! ईशं तव स्पर्शात् मङ्गलपदं स्पृशति – கமலே! ஈசம் தவ ஸ்பர்சாத் மங்களபதம் ஸ்ப்ருசதி] வாரீர் பெரிய பிராட்டியாரே! ஸர்வேச்வரனை எம்பெருமானைக்குறித்து மங்களபதப்ரயோகம் நேர்ந்திருப்பதானது உம்முடைய ஸம்பந்த நிபந்தநமேயாகுமென்றபடி. * ஐச்வர்யம் யதசேஷபும்ஸி யதிதம் ஸௌந்தர்ய லாவண்யயோ: ரூபம் யச்ச ஹி மங்களம் கிமபி யல்லோகே ஸதித்யுச்யதே, தத் ஸர்வம் த்வததீநமேவ * என்று ஸ்ரீஸ்தவத்திலருளிச்செய்தபடியே பிராட்டி மங்களஸ்வரூபையாகையாலே இவளோட்டைச் சேர்த்தியால்தான் எம்பெருமானுக்கும் மங்கள பதவாச்யத்வ முண்டாகிறதென்றது பொருத்தமேயாகும்.

இதற்குமேல் ஒருசங்கையுண்டாகும்—எம்பெருமானுக்குண்டான மங்கள பதவாச்யத்வம் இவளுடைய ஸம்பந்த நிபந்தநமானதுபோலே இவளுக்குண்டான மங்களபதவாச்யத்வமும் இதர ஸம்பந்த நிபந்தநமாயிருக்குமோவென்று; அந்த சங்கைக்கு இடமில்லையென்கிறது இரண்டாம் பாதம் [इदं तव उपाधेरुपनिपतितं न— இதம்

தவ உபாதேருபநிபதிதம் ந] தேவரீருக்கு இந்த மங்கள பதம் ஔபாதிகமன்று—இதர ஸம்பந்த நிபந்தநமன்று என்கை. இங்ஙனே சொன்னதை உபபாதிக்கிறது [ஸ்ரீரஸி யத:] என்று. 'யத: த்வம் ஸ்ரீரஸி, தததேவ இதம் தவ உபாதேர் நோபநிபதிதம்' என்று அந்வயிப்பது. இயற்கையாகவே நீர் மங்களமென்று பெயர் பெற்றிருக்கிறீராதலால் ஸ்வாபாவிகமான விதனை ஔபாதிகமென்று சொல்லுகைக்கு ப்ரஸக்தியில்லையென்றபடி. இதுதன்னை உத்தரார்த்தத்தில் ஒரு த்ருஷ்டாந்தமுகத்தாலே மூதலிக்கிறார்.— **ப்ரஸூநம் புஷ்யந்தீமபி** இத்யாதி. இதன் கருத்தாவது— உலகில் புஷ்பத்திற்குச் சிறப்புச் சொல்லும்போது 'பரிமளத்தினாலுண்டான சிறப்பு இது' என்கிறார்கள்; மல்லிகைப்பூ செண்பகப்பூ மகிழம்பூ முதலியவற்றைச் சிறந்ததென்னும்போது மிகுந்த பரிமளமிருப்பதையே அதற்கு உறுப்பாகச்சொல்லுகிறோம். அதன் மேல், பரிமளம் எதனாலுயர்ந்தது? என்கிற கேள்வியுமுண்டாவதில்லை, அதற்கொரு காரணமும் சொல்லுகிறோமில்லை. 'பரிமளம் சிறந்தது' என்னுமிடம் இயற்கையாகவே உலகமிசைந்த விஷயம். அதற்கு வேறெதனாலும் ஏற்றமுண்டாவதில்லை. புஷ்பத்திற்கு ஏற்றம் சொலலும் போது பரிமளத்தையிட்டுச் சொல்லவேணும்; பரிமளத்திற்கு ஏற்றம் ஸ்வதஸ்ஸித்தம் என்பது எப்படியோ அப்படியே, எம்பெருமானுக்கு ஏற்றம் பிராட்டியினால்; பிராட்டிக்கு ஏற்றம் ஸ்வதஸ்ஸித்தம்—என்றாராயிற்று.



**[प्रसूनं पुष्यन्तीमपि परिमलर्द्धिम्**—ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமளர்த்திம்] புஷ்பத்திற்கு அதிசயத்தையுண்டாக்குவது பரிமளஸம்பத்தேயானாலுமென்றபடி. **[तां जिगदिषुः एवंत्वात् एवं स्वदत इति नहि कवयते**—தாம் ஜிகதிஷு: ஏவம்த்வாத் ஏவம் ஸ்வததே இதி ந ஹி கவயதே] அந்த பரிமள ஸம்பத்தின் சிறப்பைப் பேச நினைப்பவன் அதற்கொரு காரணம் சொல்லுகிறானில்லையிறே என்றபடி. ... ... ... (29)

**अपाङ्गा भूयांसो यदुपरि परं ब्रह्म तदभूत्**
**अमी यत्र द्वित्रास्स च शतमखादिस्तदधरात् ।**
**अतः श्रीराम्नायस्तदुभयमुशंस्त्वां प्रणिजगौ**
**प्रशस्तिस्सा राज्ञो यदपि च पुरीकोशकथनम् ॥३०॥**

**அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம் ப்ரஹ்ம ததபூத்**
**அமீ யத்ர த்வித்ராஸ் ஸச சதமகாதிஸ் தததராத்**
**அதச்ஸ்ரீராம்நாயஸ் ததுபயமுசந் த்வாம் ப்ரணிஜகௌ**
**ப்ரசஸ்திஸ் ஸா ராஜ்ஞோ யதபிச புரீகோசகதநம். ... ... ... (30)**

*** கீழ் இருபத்தெட்டாம் ச்லோகத்தில் "**त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि**— த்வாம் ந ப்ருதகபிதத்தே ச்ருதிரபி" என்று பெரிய பிராட்டியாரை வேதம் தனித்து ஓதவில்லையென்று அருளிச் செய்தாரிறே; இதில், வேதம் ஒருபடி பிராட்டியை ஓதிற்றேயாகிற தென்னுமிடத்தை மூதலிக்கிறார். பரப்ரஹ்மமோ லோகபாலகர்களோ யாவரும் பிராட்டியினுடைய கடாக்ஷவிசேஷத்தினால் ஸத்தை பெற்றவர்களாதலால் அப்படிப்பட்ட அவர்களைப் பேசுகின்ற வேதம் பிராட்டியையும் பேசிற்றேயாகக் குறையில்லையென்கிறார்.

[हे श्रीः! (तव) भूयांसः अपाङ्गा यदुपरि (पतिताः) तत् परं ब्रह्म अभूत्— ஹே ஸ்ரீ:! (தவ) பூயாம்ஸ: அபாங்கா: யதுபரி (பதிதா:) தத் பரம்ப்ரஹ்ம அபூத்] வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே! தேவரீருடைய மிகவிஞ்சிய கடாக்ஷவீக்ஷணங்கள் எந்த வ்யக்தியின் மீது விழுந்தனவோ அந்த வ்யக்திதான் பரப்ரஹ்மமென்று பேர்பெற்றதாயிற்று என்கிறார். இங்ஙனே சொல்லுவது எதுகொண்டென்னில்; * श्रद्धया देवो देवत्वमश्नुते * என்று ச்ருதியும், * திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு * என்று அருளிச்செயலும் ஓதிவைக்கையாலே லக்ஷ்மீஸம்பந்தமே தேவாதிதேவத்வ நியாமகமாகத் தேறுகையாலே இங்ஙனே சொல்லக் குறையில்லை யென்க.

[अमी यत्र द्वित्राः स च शतमखादिस्तदधरात्— அமீ யத்ர த்வித்ராஸ் ஸ ச சதமகாதிஸ் தததராத்] அமீ என்கிறது முன்னே சொன்ன அபாங்கங்களை; தேவரீருடைய கடாக்ஷ வீக்ஷணங்கள் விசேஷமாகப்ரஸரியாமல் சில இவ்வளவாக ப்ரஸரித்தவிடம் எதுவோ அதுதான் கீழ்ப்பட்ட இந்த்ராதி திக்பாலகரூபேண பரிணமித்ததாகின்றதென்கை. ஆதிசப்தத்தாலே ப்ரஹ்மருத்ராதிகளைக் கொள்க. ஆக, பிராட்டியின் அதிக கடாக்ஷங்கள் ப்ரஸரித்த விடம் பரப்ரஹ்மமென்று பேர்பெறுகிறது, அவளுடைய சில கடாக்ஷங்கள் ப்ரஸரித்தவிடம் ப்ரஹ்மருத்ர இந்த்ராதி தேவதாவர்க்கமாகப் பேர் பெறுகிறது என்றவிதனால் — சிறப்பித்துக் கூறப்படுகின்ற ஸகலவ்யக்திகளுக்கும் உண்டாகிற சிறப்பு லக்ஷ்மீகடாக்ஷ வீக்ஷணாதீன மென்கிறவுண்மை தெரிவிக்கப் பட்டதாகிறது. இப்போது இது எதற்காகச் சொல்லிற்றென்ன, அது சொல்லுகிறது மூன்றாம் பாதம் [अतः तदुभय मुशन्नाम्नायः त्वां प्रणिजगौ— அத: ததுபயம் உசந் ஆம்நாய: த்வாம் ப்ரணிஜகௌ] கீழ்ச் சொன்ன பரப்ரஹ்மம், இந்த்ராதி தேவதாவர்க்கம் ஆகிற இரண்டையும் பேசாநின்ற வேதமானது தேவரீரையும் பேசிற்றாகிறது என்கை. பரப்ரஹ்ம தேவேந்த்ராதிகளைப் பேசினவளவால் பிராட்டியைப் பேசினதாக எங்ஙனே யாகுமென்று சங்கிப்பார்க்கு ஸமாதானம் பண்ணுகிறது நான்காவது பாதம் [प्रशस्तिस्सा राज्ञो यदपि च पुरीकोशकथनम् — ப்ரசஸ்திஸ்ஸா ராஜ்ஞோ யதபிச புரீகோசகதநம்] நகரத்தினுடையவும் நகரத்திலுள்ள தனநிதியினுடையவும் சிறப்பை வருணித்தால் அது நகரத்தையாள்கின்ற மஹாப்ரபுவின் பெருமையைத்தானே சொல்லிற்றாகத் தலைக்கட்டுகின்றது. பரப்ரஹ்மாதிகள் புரீகோசஸ்தானத்திலும் பிராட்டி ராஜஸ்தானத்திலும் வைத்துப் பேசப்பட்டதாயிற்று. पुरी च कोशश्च पुरीकोशौ तयोः कथनम् ॥ அயோத்யா நகரத்தின் செல்வச் சிறப்புகளை வருணிப்பதானது அயோத்யாதிபதியான தசரத சக்ரவர்த்தியின் பெருமையைப் பேசினதாக ஆகுமென்பதில் விவாதமில்லையே; அதுபோலவே ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கடாக்ஷாதீநஸத்தாசாலிகளானவர்களை வருணிப்பது ஸ்ரீமஹாலக்ஷ்மீஸமுத்கர்ஷ கீர்த்தனத்தில் தலைக்கட்டுகிறது மென்னத்தட்டில்லையாயிற்று. இப்படிப்பட்ட உத்கிசாதுர்யம் பட்டருக்கன்றி மற்றையோர்க்கு நிலமன்றென்பதும் இங்கு அவசியவக்தவ்யம். ... ... (30)

त्वतः श्रीरस्य विष्णोः स्वमसि तत एवैष भगवान्
त्वदायत्तर्द्धिर्वे ऽप्यभवदपराधीनविभवः ।
स्वया दीप्तया रत्नं भवदपि महार्घं न विगुणं
न कुण्ठस्वातन्त्र्यं भवति च न चान्याहितगुणम् ॥३१॥

**ஸ்வத: ஸ்ரீஸ் த்வம் விஷ்ணோஸ் ஸ்வமஸி தத ஏவைஷ பகவாந்**
**த்வதாயத்தர்த்தித்வேபி அபவதபராதீநவிபவ:,**
**ஸ்வயா தீப்த்யா ரத்நம் பவதபி மஹார்க்கம் ந விகுணம்**
**ந குண்டஸ்வாதந்த்ர்யம் பவதிச ந சாந்யாஹிதகுணம். .... .... .... (31)**

***கீழ் * ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் * என்று தொடங்கி மூன்றுச்லோகங்களாலே எம்பெருமானுக்குண்டான அதிசயமெல்லாம் பிராட்டியினால் தான் என்று பேசப்பட்டதிறே; இதுவே உண்மையுரையாகில், எம்பெருமானுக்குள்ள பெருமையெல்லாம் நிருபாதிகமானது, ஒன்றுகூட ஔபாதிகமன்று—என்று சொல்லுகிற ஸகலசாஸ்த்ரங்களும் பழுதாம்; கீழேசொல்லிற்றெல்லாம் அதிவாதமத்தனை என்று க்ஷேபிக்கவேண்டிவருமென்று நினைத்து அப்படிப்பட்ட க்ஷேபத்திற்கு அவகாசலேசமுமில்லாமையை மூதலிக்கிறார் இந்த ச்லோகத்தினால். தகுந்த த்ருஷ்டாந்தவிசேஷமொன்றைக் காட்டி ஸமர்த்தநம் செய்தருளுகிறாராயிற்று. இதில் சமத்க்ரவிசேஷம் பொலிய அருளிச்செய்யுமது கேளீர்; ரத்னத்திற்கு ஒளியினாலே ஏற்றமென்று சொல்லுகிறோம்; இதனால் ரத்னத்திற்கு ஏதேனும் தாழ்வு சொன்னதாக ஆகுமோ? ‘ரத்னத்திற்கு ஸ்வாபாவிகமான ஏற்றமில்லை, அந்யாதீநமான ஏற்றந்தானுள்ளது’ என்று சொன்னதாக ஆகுமோ? ஆகாது. ஏன் ஆகாதென்னில், ஒளியென்பது ரத்னத்திற்கு ஸ்வமமான குணமேயல்லது வந்தேறியானதொன்றன்று. வந்தேறியானதொன்றினால் ஏற்றமுண்டானதாகச் சொன்னால்தான் இயற்கையான ஏற்றமில்லை என்றதாகும். வித்வானுக்கு வைதுஷ்யத்தினால் ஏற்றம், தனிகனுக்கு தனத்தினாலேற்றம், குலீநனுக்குக் குலத்தினாலேற்றம், ஸுந்தரனுக்கு ரூபத்தினாலேற்றம் என்று சொன்னவளவால் இந்த ஏற்றங்கள் பராதீநமான [ஔபாதிகமான] ஏற்றமென்றதாகத் தேருதே. அதுபோலவே இங்குங் கொள்க.

**ஹே ஸ்ரீ:**—வாரீர் பெரிய பிராட்டியாரே!; **த்வம் ஸ்வத: விஷ்ணோ: ஸ்வம் அஸி**—தேவரீர் இயற்கையாகவே எம்பெருமானுக்கு ஸ்வம்மாக இராநின்றீர்; ***स्वत्वमात्मनि संजातं स्वामित्वं ब्रह्मणि स्थितम्** — ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம் * என்றும், * **दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः**— தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: * என்று முள்ள ப்ரமாணங்கள் பிராட்டிக்கும் பொதுவாகையாலே இங்ஙனே சொல்லிற்று. இயற்கையாகவே எம்பெருமானுக்கு நீர் அடிமைப்பட்டவராயிரா நின்றீரென்றதாயிற்று. பிராட்டிதான் எம்பெருமான் தவிர மற்றையோர்க்கு ஸ்வாமிநியாய் எம்பெருமானுக்கு ஸ்வம்மாயிருப்பவளிறே. **[தத ஏவ]** ஆகையினாலேயே. எம்பெருமானுக்கு நீர் அத்யந்தம் சேஷப்பட்டிருப்பதனாலேயென்றபடி. **[एष भगवान् त्वदायत्तर्द्धित्वेऽपि अपराधीनविभवः अभवत्**— ஏஷ பகவாந் த்வதாயத்தருத்தித்வே அபி அபராதீநவிபவ: அபவத்.] இப்பெருமான் உம்மதீநமான ஏற்றமுடையனென்னச் செய்தேயும் ஸ்வதந்த்ரவைபவசாலியேயாவன்.

**त्वदायत्ता ऋद्धिः यस्य सः त्वदायत्तर्द्धिः—,तस्य भावः—त्वदायत्तर्द्धित्वम्। तस्मिन् सत्यपि॥ पराधीनो न भवतीत्यपराधीनः; तथाविधो विभवो यस्य सः—अपराधीनविभवः॥** **"த்வதாயத்தர்த்தித்வேபி"** என்பதனால் பராதீநவைபவசாலித்வத்தைச் சொல்லிவைத்து, உடனே **‘அபராதீநவிபவ:’** என்னுமது பொருந்துமோவென்ன; மேல் **உத்தரார்த்தத்தில்** ஒரு **த்ருஷ்டாந்தம்** காட்டிப் பொருந்தவிடுகிறார்.

**रत्नं स्वया दीप्त्या महार्घं भवदपि**—ரத்நம் ஸ்வயா தீப்த்யா மஹார்க்கம் பவத் அபி] ரத்னமொன்று பெருவிலையனாகிறது தன்னதான ஒளியினால்தான்; ஆனாலும்; [**न विगुणं भवति, न कुण्ठस्वातन्त्र्यं भवति, न च अन्याहितगुणं भवति**— ந விகுணம் பவதி, ந குண்டஸ்வாதந்த்ர்யம் பவதி, ந ச அந்யாஹிதகுணம் பவதி] அந்த ரத்னமானது குணஹீநமாகிறதுமில்லை, ஸ்வாதந்த்ரியத்தில் கொத்தை பெற்றதாகிறதுமில்லை; அந்யாதீநமான அதிசயத்தையுடையதாகிறதுமில்லை. அதுபோலவே இங்கும் கொள்ளவேணுமென்கை. ஸ்வரூபநிரூபகமான வஸ்துவினால் விளையும் ஏற்றமானது ஸ்வகீயமே யொழிய பரகீயமன்று என்றதாயிற்று. இதனால், பிராட்டி எம்பெருமானுக்கு ஸ்வரூபநிரூபகபூதையென்னுமிடம் ஸ்திரீக்ருதமாயிற்று. மணத்தைக் கொண்டு புஷ்பத்தை விரும்புமாபோலேயும், ப்ரபையைக்கொண்டு ரத்னத்தை விரும்புமாபோலேயும் பிராட்டியைக்கொண்டிறே எம்பெருமானை விரும்புகிறோம்.... (31)

**प्रशकनवलज्योतिर्ज्ञानैश्वरीविजयप्रथा**
**प्रणतवरणप्रेमक्षेमङ्करत्वपुरस्सराः ।**
**अपि परिमलः कान्तिर्लावण्यमर्चिरितीन्दिरे!**
**तव भगवतश्चैते साधारणा गुणराशयः ॥३२॥**

Read 100 lines

**ப்ரசகநபலஜ்யோதிர்ஜ்ஞாநைச்வரீவிஜயப்ரதா**
**ப்ரணதவரணப்ரேமக்ஷேமங்கரத்வபுரஸ்ஸரா:,**
**அபி பரிமள: காந்திர் லாவண்யமர்ச்சிரிதீந்திரே!**
**தவ பகவதச் சைதே ஸாதாரணா குணராசய:** ... ... ... ... (32)



***பெரிய பிராட்டியாருடைய ஸ்வரூபத்தை யநுஸந்தித்தாராய் நின்றார் கீழ்; இனி மேல், அந்த ஸ்வரூபத்தைப்பற்றினவைகளும் திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பற்றினவைகளுமான திருக்கல்யாண குணங்களை யநுஸந்திக்கக்கோலி, முந்துற முன்னம் எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் பொதுவான திருக்குணங்களைப் பேசுகிறார் இந்த ச்லோகத்தில்.

***प्रशकनवलज्योतिरित्यादि** முதல் பாதத்தில் ஷாட்குண்யம் சொல்லப்படுகிறது. ஜ்ஞாந சக்தி பலைச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களிறே ஷாட்குண்யமெனப்படுகிறது. இவற்றுள், சக்தியை ப்ரசகநபதத்தாலும், தேஜஸ்ஸை ஜ்யோதிச்சப்தத்தாலும், வீர்யத்தை விஜயப்ரதா சப்தத்தாலும் அருளிச்செய்தபடி. ஜ்ஞானம் பலம் ஐச்வர்யம் ஆகியவிவை அந்த சப்தங்களாலேயே சொல்லப்பட்டன. இவற்றுள் சக்தியாவது—இது செய்ய வெளிது, இது செய்யவரிது என்கிற வாசியின்றிக்கே எதையும் எளிதாகச் செய்து தலைக்கட்டவல்லமை. பலமாவது—அநாயாஸமாக எல்லாவற்றையும் தரிக்கவல்லமை. தேஜஸ்ஸாவது—ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக எதையும் செய்து தலைக் கட்டவல்லமை. ஜ்ஞானமாவது—ப்ரத்யக்ஷவிஷயங்களைப்போலவே பரோக்ஷவிஷயங்களையும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காணவல்லமை. ஐச்வர்யமாவது—உபய விபூதியையும் ஆளவல்லமை. வீர்யமாவது ஒன்றிலும் விகாரப்படாமலிருக்கை. இவ்வாறு குணங்களைப்பற்றின விவரணம் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில்

*யுகபதநிசமஸௌ:* என்கிற ச்லோகந் தொடங்கி ஏழு ச்லோகங்களில் காட்டியருளப் பட்டது; அவ்விடத்து நம்முடைய வியாக்கியானத்திலும், வரதராஜஸ்தவத்தில் *ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம்* என்கிறச்லோகத்தின் எமது வியாக்கியானத்திலும் விரியக்காண்க. ஆக *ப்ரசகநே த்யாதி ப்ரதமபாதத்தாலே ஷாட்குண்ய ஸம்பத்தி சொல்லிற்றாயிற்று.

இங்கு இங்ஙனே யருளிச்செய்தவர் தாமே மேல் (34) *யுவத்வாதௌ துல்யேபி* என்னும் ச்லோகத்தில் ஔசித்யாநுகுணமான விபாகம் செய்தருளுகிறாராகையாலே இங்குச்சொன்னது ஸ்வரூபயோக்யதாமாத்ரப்ரகதநமென்று கொள்ளக்கடவது.

மேல் இரண்டாவது பாதத்தில், ப்ரணத வரணம், ப்ரணதப்ரேமம், ப்ரணத க்ஷேமங்கரத்வமென்று மூன்று திருக்குணங்கள் சொல்லப்படுகின்றன. ப்ரணத வரணமாவது—ஆச்ரித ஜநவசீகரணம். ப்ரணதப்ரேமமாவது—ஆச்ரிதர் பக்கலிலே அன்பு விஞ்சியிருக்கை. ப்ரணத க்ஷேமங்கரத்வமாவது—ஆச்ரிதர்களுக்கு வேண்டிய இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரங்களைச்செய்து போருகை. முடிவில் புரஸ்ஸர சப்தம் ப்ரதாநவாசகம். இவை மூன்றும் முக்கியமான திருக்குணங்களென்கை. ஆக இரண்டு பாதங்களால் சொல்லப்பட்டவை திவ்யாத்மஸ்வரூபாச்ரிதங்களான திருக்குணங்கள். இனி மூன்றும் பாதத்தினல் திவ்யமங்கள விக்ரஹ நிஷ்டங்களான குணங்கள் சொல்லப்படுகின்றன.

[பரிமல: காந்தி: லாவண்யம் அர்ச்சி:] பரிமளமாவது ஸௌகந்த்யம். பஞ்சோபநிஷந்மயமான திருமேனியாகையாலே எப்போதும் கமகம வென்று நறுமணம் வீசப்பெற்றிருக்கை. காந்தியாவது ஸௌந்தர்யம்; * தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற்கமலமன்ன தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாரும:அதே* (கம்பர்) என்னும்படி ஒவ்வோரவயவமும் அழகு பொலிந்திருக்கை. லாவண்யமாவது ஸமுதாய சோபை. அர்ச்சிஸ்ஸாவது உஜ்ஜ்வலத்வம்; பரப்ரகாசகத்வமென்றபடி. ஆக இப்படிப்பட்ட உபயவிதகுணகணங்களும்.

[இந்திரே! தவ பகவதச்ச ஸாதாரணா:] ஸ்ரீரங்கநாச்சியாரே! உமக்கும் நம்பெருமாளுக்கும் பொதுவான திருக்குணங்களாம். க்ஷேமங்கரத்வமாவது இஷ்டப்ராபணமும் அநிஷ்ட நிவாரணமுமாகையாலே இவையிரண்டையும் எம்பெருமான் ஸாக்ஷாத்தாகவே செய்யவல்லவன்; பிராட்டி சில இஷ்டப்ராபணங்களை ஸாக்ஷாத்தாகவும் சிலவற்றை எம்பெருமானைக்கொண்டும் செய்யவல்லவள். அநிஷ்டநிவாரணத்தை நியமேந எம்பெருமானைக்கொண்டே செய்விக்கவல்லவள்; * सहधर्मचरीं शौरेः संमन्त्रितजगद्धिताम्। अनुग्रहमयीं वन्दे नित्यमज्ञातनिग्रहाम्—ஸஹதர்மசரீம் சௌரே: ஸம்மந்த்ரித ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாத நிக்ரஹாம். * [யதிராஜஸப்ததி—2] என்று வேதாந்த வாசிரியன் அருளிச்செய்கையாலே.

ஸ்ரீவசநபூஷணத்தில் (82) "பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள்" என்ற ஸ்ரீஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். இலங்கையில் சென்று ஸ்வவிக்ரமம் காட்டின திருவடி

வாலிலே நெருப்பிடப்பெற்றுனென்றுணர்ந்த பிராட்டி ✻ சீதோ பவ ஹநூமத: ✻ என்று சொல்லி நெருப்பை நீராக்கினவள் "**दग्धोभव दशानन!**—தக்தோ பவ தசாநந!" என்று சொல்லி விரோதிவர்க்கத்தை நிரூக்கித் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவல்ல சக்தி தனக்கு உண்டாயிருக்கச் செய்தேயும் ✻ **असंदेशात्तु रामस्य तपसश्चानुपालनात्। न त्वा कुर्मि दशग्रीव! भस्म भस्मार्हतेजसा**— அஸந்தேசாத் து ராமஸ்ய தபஸச் சாநுபாலநாத், ந த்வா குர்மி தசக்ரீவ! பஸ்ம பஸ்மார்ஹ தேஜஸா ✻ என்று சொல்லி, நாயகரான பெருமாளுடைய வில்வலியாலாக வேண்டிய விரோதி நிரஸநத்தைத் தன்னுடைய ஆற்றலால் செய்து கொள்ளாதொழிந்தாளிறே. ... ... ... ... (32)

**अन्येऽपि यौवनमुखा युवयो स्समानाः**
**श्रीरङ्गमङ्गलविजृम्भणवैजयन्ति!।**
**तस्मिंस्तव त्वयि च तस्य परस्परेण**
**संस्तीर्य दर्पण इव प्रचुरं स्वदन्ते ॥३३॥**

**அந்யேபி யௌவநமுகா யுவயோஸ் ஸமாநா:**
**ஸ்ரீரங்கமங்களவிஜ்ரும்பணவைஜயந்தி!**
**தஸ்மிம்ஸ்தவ த்வயி ச தஸ்ய பரஸ்பரேண**
**ஸம்ஸ்தீர்ய தர்ப்பண இவ ப்ரசுரம் ஸ்வதந்தே.** .... ... .... (33)



✻✻✻ இன்னமும் திவ்ய தம்பதிகளுக்கு ஸாதாரணமான [—பொதுவான] திருக்குணங்களை யருளிச்செய்து இவை பரஸ்பரம் போக்யமாகிறபடியை சமத்காரம் பொலியப் பேசுகிறார். **ஸ்ரீரங்கமங்கள விஜ்ரும்பண வைஜயந்தி!** என்று ஸ்ரீரங்கநாச்சியாருக்கு விலக்ஷணமான ஸம்போதந மிருக்கிறபடி. ஸ்ரீரங்கநிலயத்திற்கு விளையும் மங்களாபிவ்ருத்திக்கெல்லாம் த்வஜமாயிருக்கும் பெரிய பிராட்டியாரே! என்றபடி. **हे श्रीरङ्गोत्सववृद्धिहेतुभूते!** என்றதாயிற்று. [**यौवनमुखाः अन्येऽपि (गुणाः) युवयोस्समानाः**— யௌவநமுகா: அந்யேபி (குணா:) யுவயோஸ் ஸமாநா:] கீழ்ச்லோகத்தில் கூறப்பட்ட திருக்குணங்கள் தவிர மற்றும் யௌவனம் முதலிய குணங்களும் உங்களிருவர்க்கும் பொதுவாகவுள்ளன. 'யௌவநமுகா:' என்றது—யௌவநாதய: என்றபடி; ஆதிசப்தத்தாலே ஸௌகுமார்யாதிகளைக்கொள்வது. இக்குணங்களானவை, ஸமாநாஸ் ஸந்த:—உபயஸாதாரணங்களாயிருந்து கொண்டு;

**तव गुणाः तस्मिन्, तस्य गुणाः त्वयि च संस्तीर्य**— உம்முடைய குணங்கள் அவரிடத்திலும், அவருடைய குணங்கள் உம்மிடத்திலுமாகக் கலசி என்றபடி. [**दर्पणे इव**— தர்ப்பணே இவ] கண்ணாடியில் பார்த்துக்கொண்டாற் போல வென்கை. லக்ஷ்மிக்கு லக்ஷ்மீபதி கண்ணாடியாகவும், லக்ஷ்மீபதிக்கு லக்ஷ்மி கண்ணாடியாகவும் ஆகிறபடி. நம்மைக் கண்ணாடிப்புறத்திலே காணும்போது நம்மிடத்திலுள்ளதுதான் கண்ணாடியிலே தெரிகிறதென்று நாம் நினைக்கிறோமன்றோ. இப்படியே திவ்யதம்பதிகளும் பரஸ்பரம் நினைக்கிறபடி. பிராட்டி எம்பெருமானைக் காணும்போது நம்மிடத்துள்ள குணங்கள் இங்கே ப்ரதிபலிக்கின்றனவென்று நினைக்கிறாள்; எம்பெருமான் பிராட்டியைக் காணும்போதும் நம்மிடத்துள்ள குணங்களே இங்கு ப்ரதிபிம்பிக்கின்றன வென்று நினைக்கிறானாயிற்று.

இதனால் திவ்ய தம்பதிகளுக்குண்டான ஒற்றுமையும் வெளியிடப்பட்டதாயிற்று. ஆக இப்படியாகி.

[परस्परेण प्रचुरं स्वदन्ते— பரஸ்பரேண ப்ரசுரம் ஸ்வதந்தே] உபயகுணங்களும் உபயர்க்கும் பரமபோக்யமாகின்றன. இங்ஙனே பேசுகிறவிதனால் பிராட்டிக்கும் பெருமாளுக்கும் தர்மிபேதமேயிடையாதென்று காட்டுவது போல் தோன்றும். உண்மை அங்ஙனமன்று. தாவத்பர்யந்தம் நினைக்கவேண்டும்படியான ஒற்றுமை காட்டப்பட்டதாகின்றதத்தனை. ... ... ... (33)

युवत्वादौ तुल्येऽप्यपरवशताशत्रुशमन-
स्थिरत्वादीन्कृत्वा भगवति गुणान् पुंस्त्वसुलभान् ।
त्वयि स्त्रीत्वैकान्तान् म्रदिमपतिपारार्थ्यकरुणा-
क्षमादीन्वा भोक्तुं भवति युवयोरात्मनि भिदा ॥३४॥

யுவத்வாதௌ துல்யேபி அபரவசதா சத்ருசமந
ஸ்திரத்வாதீந் க்ருத்வா பகவதி குணாந் பும்ஸ்த்வ ஸுலபாந்,
த்வயி ஸ்த்ரீத்வைகாந்தாந் ம்ரதிம பதிபாரார்த்த்யகருணா
க்ஷமாதீந் வா போக்தும் பவதி யுவயோராத்மநி பிதா. ... .... ... (34)



*** கீழ்ச்சொன்னபடி திவ்யாத்ம ஸ்வரூப குணங்களும் திவ்யமங்கள விக்ரஹ குணங்களும் திவ்யதம்பதிகளிருவர்க்கும் அவிசிஷ்டமாய் (பொதுவாய்) இருக்குமாகில் வ்யக்திபேதந தனித்து அநுபவிக்கிற அநுபோக்தாக்களுக்கு பேதப்ரதிபத்தி எங்ஙனே வாய்க்குமென்ன; அதற்கு ஸமாதானமாகவருளிச் செய்வது இந்தச்லோகம். யௌவநமிறுதியாகச் சொல்லப்பட்ட திருக்குணங்களெல்லாம் உபயஸாதாரணங்களாயிருக்கச்செய்தேயும் அநுபோக்தாக்களுக்கு பேதப்ரதிபத்தி ஸௌகர்யார்த்தமாக ஆண்மைக்கு உரியகுணங்களை எம்பெருமானுக்கு ஆக்கியும், பெண்மைக்கு உரிய குணங்களைத் தனக்காக்கியும் போருவதாக வருளிச்செய்கிறார்.

[ஹே ஸ்ரீ:! (யுவயோ:) யுவத்வாதௌ துல்யே ஸத்யபி]=வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே! யௌவநாதிகளான திருக்குணங்கள் உங்களிருவர்க்கும் பொதுவாயிருக்கச் செய்தேயும். [पुंस्त्वसुलभान् अपरवशताशत्रुशमनस्थिरत्वादीन् गुणान् भगवति कृत्वा— பும்ஸ்த்வ ஸுலபாந் அபரவசதாசத்ருசமநஸ்திரத் வாதீந் குணாந் பகவதி க்ருத்வா] அபரவசத்வமாவது பாரதந்த்ரியமின்மையாகிற ஸ்வாதந்த்ர்யம், மேல் "சத்ருசமநஸ்திரத்வாதீந்" என்றவிடத்தில், சத்ருசமநமென்ன, ஸ்திரத்வமென்ன என்று இரண்டாகச் சிலர் சொல்லுவர்கள்; அதிற்காட்டிலும், சத்ருசமநே ஸ்திரத்வம்—அநிஷ்டநிவாரணத்தில் பிடித்தபிடி விடாமலிருக்கையென்று ஒன்றேயாகக்கொள்ளத்தகும். * अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते! सलक्ष्मणाम् । नहि प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः— அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம், நஹி ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:* இத்யாதி ப்ரமாணங்களினால் சத்ருசமநே ஸ்திரத்வம் காணலாகும். ஸ்திரத்வமாவது ஸ்திரப்ரதிஜ்ஞத்வம். ஆக, ஸ்வாதந்த்ர்யம் அநிஷ்டநிவாரணத்தில் உறுதிகொண்டிருக்கை முதலான குணங்கள் ஸ்த்ரீகளுக்கு உரியவையல்லவாய் ஆண்

களுக்கே உரியவையாயிருத்தலால் இவற்றை எம்பெருமானுக்கே உரியவையாக்கினமை சொல்லிற்று.

மேல், பிராட்டி தன்னிடத்தே உரித்தாகக்கொண்ட குணங்களைச்சொல்லுகிறது *த்வயி ஸ்த்ரீத்வைகாந்தாந் இத்யாதியால். [म्रदिमपतिपारार्थ्यकरुणाक्षमादीन् गुणान् स्त्रीत्वैकान्तान् त्वयि कृत्वा—ஸ்த்ரீத்வைகாந்தாந் ம்ரதிமபதிபாரார்த்ய கருணாக்ஷமாதீந் குணாந் த்வயி க்ருத்வா] ம்ரதிமா என்பது ம்ருதுத்வம்—ஸௌகுமார்யமென்றபடி; இது தேஹநிஷ்டமாயும் ஆத்மநிஷ்டமாயும் இருவகைப்படும். திருமேனி ஸுகுமாரமாயிருத்தல் இங்குச் சொல்லப்படுவதன்று; ஸுகுமாரஹ்ருதயத்வமே சொல்லப்படுகிறது. உலகில் புமான்கள் கடிநஹ்ருதயர்களாகவுமிருப்பர்கள்; ஸ்த்ரீகளுக்கு அது அஸம்பாவிதம். பதிபாரார்த்த்யமாவது பர்த்தாவுக்கே பரதந்த்ரப்பட்டிருக்கை. கருணையாவது பரது:க்க அஸஹிஷ்ணுத்வம்; க்ஷமையாவது பொறுமை. கருணையும் க்ஷமையும் எம்பெருமானுக்கு முண்டென்று அநுஸந்தித்தாலும், அவன்தான் * க்ஷிபாமியென்றும், * நக்ஷமாமியென்றும் இடையிடையே சொல்லுகிறவனாகையாலே இக்குணங்கள் அவனுக்கு ஐகாந்திக மென்னப் போகாது. ஆகையிறே * ஸ்த்ரீத்வைகாந்தாந் * என்று இங்கருளிச்செய்தது. 'க்ஷமாதீந் வா' என்றவிடத்து வா என்றது चकारार्थकम्; ஸமுச்சயப்பொருளது; விகல்பார்த்தகமன்று.



நான்காவது பாதத்தில் போக்தும் என்று பாடம் நிகழ்கின்றது; போக்து: என்றிருந்த ஷஷ்ட்யந்தமான பாடம் பிறழ்ந்து விட்டதாகச் சில பெரியார்கள் கருதுகின்றனர். இது யுக்தமே. போக்து: என்று ஏகவசநாந்தமாயிருந்தாலும் ஜாத்யேகவசநமிது; ஸமஷ்டிவாசகம். அநுபோக்தாக்களுக்கு என்றபடி. ஸம்ஸ்க்ருதவ்யாக்யாதா "अनुभवितॄणामिति शेषः— அநுபவித்ரூணமிதி சேஷ:" என்றெழுதிவைத்தார்; அத்யாஹார பரிச்ரமமின்றிக்கே ஸங்கதமாகிறது. भिदा—भेदः ॥ ... ... ... ... .... ... .... (34)

घनकनकद्युती युवदशामपि मुग्धदशां
युवतरुणत्वयोरुचितमाभरणादिपरम् ।
भुवमसमानदेशविनिवेशि विभज्य हरौ
त्वयि च कुशेशयोदरविहारिणि! निर्विशसि ॥३५॥

கநகநகத்யுதீ யுவதசாமபி முக்ததசாம்
யுவதருணத்வயோருசிதமாபரணாதி பரம்,
த்ருவமஸமாநதேசவிநிவேசி விபஜ்ய ஹரௌ
த்வயி ச குசேசயோதரவிஹாரிணி நிர்விசஸி. ... ... ... ... (35)

*** திவ்ய தம்பதிகளுக்கு ஸ்வரூப வ்யாவர்த்தகங்களான திருக்குணங்கள் கீழ்ச்லோகத்தில் அநுஸந்திக்கப்பட்டன; திவ்யமங்கள விக்ரஹவ்யாவர்த்தகங்களான குணங்களை யநுஸந்திக்கிறது இந்த ச்லோகம். எம்பெருமான் கார்கலந்த மேனியானாகையாலே அவனுடைய திருவுருவம் நீலமேக நிபம். பிராட்டி * ஹிரண்யவர்ணாம் ஹரிணீம் * என்று ஓதப்பட்டவளாகையாலே இவளுடைய திருவுருவம் கநகநிபம்.

எம்பெருமானுடைய பருவம் யௌவநம்; பிராட்டியினுடைய பருவம் முக்த்தசை யென்னும்படியான இளமை. திவ்யபூஷணங்களும் 'இவை புமான்களுக்குரியவை, இவை பெண்டிர்க்குரியவை' என்று வாசிபெற்றிருக்கும். பூஷணங்களில் மாத்திரமே யன்று வாசி; அவையிடும் ஸ்தானங்களிலும் வாசியுண்டு; முகுந்த்திருகென்றும் செவிப்பூவென்றும் மேகலை யென்றும் உச்சிப்பூவென்றும் பொற்பூவென்றும் அஸாதாரணமாக ஸ்த்ரீகள் ஸ்தான விசேஷங்களிலே அணிந்து கொள்வர்களாயிற்று. ஆக விப்படி வ்யாவர்த்தகாகாரங்களைப்பெற்று உங்களுக்குப் பரஸ்பராநுபவம் செல்லா நின்றது என்கிறார்.

**[ஹே குசேசயோதரவிஹாரிணி!]** குசேசயமாவது தாமரைப்பூ. அதனுடைய உதரத்திலே விஹரிப்பவளே! என்றது, பத்மவநாலயே! என்றபடி. 'அலர்மேல் மங்கையே! என்கை. [**घनकनकद्युती**—கந கநகத்யுதீ.] **घनस्य द्युतिश्च कनकस्य द्युतिश्च—घनकनकद्युती ।** கந மென்று மேகத்திற்குப் பெயர்; கனகமென்று ஸ்வர்ணத்திற்குப் பெயர். எம்பெருமானுடையது மேகத்யுதி; பிராட்டியினுடையது கநகத்யுதி. (இது த்விதீயாத்விவசநாந்த பதம்.)



[**युवदशामपि मुग्धदशाम्**—யுவதசாமபி முக்ததசாம்] எம்பெருமானுடைய பருவம் யௌவனம்; பிராட்டியினுடைய பருவம் கௌமாரம்; அதுதான் முக்த தசை யென்பது; தாருண்ய மென்பதுமிதுவே. மேலே "ஸூதே சைசவயௌவநவ்யதிகரோ காத்ரேஷு தே ஸௌரபம்" என்கையாலே கௌமாரத்திற்கும் யௌவனத்திற்கும் ஸந்தியானபருவம் பிராட்டியினுடையதென்று கொள்க. இப்பருவங்கள் ஸம்ஸாரிகளுக்குப் போலே மாறுகையன்றிக்கே நித்யமாய்ச்செல்லுமாயிற்று திவ்யதம்பதிகளுக்கு. [**युवतरुणत्वयोरुचितम् परम् आभरणादि**— யுவதருணத்வயோருசிதம் பரம் ஆபரணதி] எம்பெருமான் தனது பருவமான யௌவனத்திற்குரிய பூஷணங்களைக் கொண்டிருப்பன்; பிராட்டி தன்னுடைய பருவமான இளமைக்குரிய பூஷணங்களாலே பூஷிதையாயிருப்பள். உலகில் யுவத்வம் தருணத்வம் என்பவற்றைப் பர்யாயம் போல் வழங்குவர்களாயினும் அவற்றில் வாசியுண்டு; யௌவனத்திற்கு முற்பட்ட பருவமாயிற்று தாருண்யம். இப்பருவங்களில் வாசிக்குத்தகுதியாகவாயிற்று திவ்யபூஷணங்களிலும் வாசியிருப்பது. மேலே (46) * கநகரசநா முக்தாதடங்க ஹாரலலாடிகே த்யாதி ச்லோகத்தில் பேசும் திருவாபரணங்களை யநுஸந்திப்பது.

[**असमानदेशविनिवेशि**—அஸமாநதேச விநிவேசி] என்பதும் ஆபரண விசேஷணம். ஸ்த்ரீபுமான்களுக்கு ஆபரணங்களில் பேதம் போலே அவையிடும் ஸ்தானங்களிலும் பேதமுண்டே, அது சொல்லுகிறது. ஆக விப்படி [**हरौ त्वयि च विभज्य**—ஹரௌ த்வயிச விபஜ்ய] எம்பெருமானிடத்திலும் உம்மிடத்திலும் வ்யாவ்ருத்தியைக் காட்டிக்கொண்டு என்றபடி. [**நிர்விசஸி**] இதை அந்தர்ப்பாவிதணிஜர்த்தகமாகக் கொள்ளலாம்; பக்தர்களை யநுபவிக்கச் செய்யாநின்றீர் என்றபடி. மூன்றும் பாதத்தின் முதப்பில் த்ருவம் என்றது உத்ப்ரேக்ஷாலிங்கம்; * **मन्ये शङ्के ध्रुवं प्रायो नूनमित्येवमादिभिः । उत्प्रेक्षा व्यज्यते शब्दैः इवशब्दोऽपि तादृशः ॥** * என்னக் கடவதிறே. ... (35)

अङ्कं ते मृदुशीतमुग्धमधुरोदारैर्गुणैर्गुम्भतः
क्षीराब्धेः किमृजीषतामुपगता मन्ये महार्घास्ततः ।
इन्दुः कल्पलतासुधामधुमुखा इत्याविलं वर्णनां
श्रीरङ्गेश्वरि! शान्तकृत्रिमकथं दिव्यं वपुर्नार्हति ॥३६॥

**அங்கம் தே ம்ருதுசீதமுக்தமதுரோதாரைர் குணைர் கும்பத:**
**க்ஷீராப்தே: கிம் ருஜீஷதாமுபகதா: மந்யே மஹார்க்காஸ் தத:,**
**இந்து: கல்பலதா ஸுதா மதுமுகா இத்யாவிலாம் வர்ணநாம்**
**ஸ்ரீரங்கேச்வரி! சாந்தக்ருத்ரிமகதம் திவ்யம் வபுர் நார்ஹதி. ... ... (36)**

****ஸ்ரீரங்கநாச்சியாருடைய திவ்ய மங்கள விக்ரஹச் சிறப்பை வருணிக்கப்புகுகிறார். ஒரு விலக்ஷணப்ரக்ரியையிலே வருணித்து அந்த வர்ணனைதானும் யோக்யமன்று, என்று கைவொழிகிறார். க்ஷீரஸாகரகந்யகா என்னப்படுகிற பிராட்டி எம்பெருமான் பாற்கடல் கடைந்த காலத்திலே அக்கடலினின்றும் தோன்றினவளாகையாலே அப்போது கூடப்பிறந்த சந்திரன் கற்பகம் அம்ருதம் ஸுரைமுதலான வஸ்துக்களிடமிருந்து அவற்றின் குணங்களாகிய மென்மை குளிர்ச்சி மோஹநத்வம் மாதுர்யம் ஔதார்யம் ஆகியவற்றை ஸாரமாகவெடுத்து இத்திருமேனியைப் பாற்கடலரசன் படைத்தான் கொல்? என்னலாம்; ஆனால் அக்ருத்ரிமமான [—அப்ராக்ருதமான] இத்திருமேனியை மேற்சொன்ன ப்ராக்ருதவஸ்துக்களின் ஸாரமாகச்சொல்லுகைதானும் தகுதியன்று; அப்ராக்ருதமென்ன வேணுமேயொழிய வேறொருவகையான வர்ணனையும் உரியதன்று என்று நிகமிக்கிறார்.*

[**ஹே ஸ்ரீரங்கேச்வரி!.**] *வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே!.* [**मृदुशीतमुग्ध मधुरोदारैर्गुणैः ते अङ्कं गुम्भतः क्षीराब्धेः**— *ம்ருதுசீதமுக்த மதுரோதாரை: குணை: தே அங்கம் கும்பத: க்ஷீராப்தே:*] *இங்கு ம்ருது சீதேத்யாதிகள்* **भावप्रधाननिर्देश** *மிருந்தபடி. ம்ருதுத்வம் சீதத்வம் முக்தத்வம் மதுரத்வம் உதாரத்வம் என்று விவக்ஷிதமாகக்கடவது. மூன்றும் பாதத்தில்* **இந்து:** *என்று தொடங்கிச் சொல்லப்பட்ட சந்திரன் முதலான பொருள்களில் இக்குணங்கள் உள்ளன. சந்திரனிடத்தில் மார்தவசைத்யங்களுண்டு; கல்பலதையில் ஔதார்யமுண்டு; ஸுதாமதுக்களில் மாதுர்யமுண்டு; மோஹநத்வமுமுண்டு. இக்குணங்களெல்லாம் ஒன்று சேர்ந்து வர்த்திப்பது பெரிய பிராட்டியாரிடத்தேயாதலாலும், அவை யோரொன்றில் ஓரோகுணமேயிருப்பதாலும் க்ஷீராப்தியானது அவையெல்லாவற்றையும் பிழிந்து ஸாராம்சங்களை யெடுத்துத் திரட்டி ஸ்ரீமஹாலக்ஷ்மியாக வெளிப்படுத்தியதோவென்று சொல்லலாமென்று பட்டர் திருவுள்ளத்தில் இங்ஙனே தோன்றினது பரமவிலக்ஷணமானதொரு தோற்றம். இதற்கு மேல் இன்னொரு விசேஷமும் கேண்மின்; சந்திரன் கல்பலதை முதலான பொருள்களிலிருந்து ஸாரத்தை யெடுத்து விட்டால் பின்னை அவற்றில் என்ன இருக்கிறது; நிஸ்ஸாரமேயுள்ளது. நிஸ்ஸாரமான அவைதாமே உலகில் சிறப்பித்துக் கூறப்படுகின்றனவென்னும் ஸாரஸர்வஸ்வமான பிராட்டியின் திருமேனியின் சிறப்பு வாசாமகோசரமன்றோ. ஆக இவ்வகையானவொரு வர்ணனை பண்ணலாமென்று ஆலோசித்தார் ஆசிரியர்;* *** आक्षेपः स्वयमुक्तस्य प्रतिषेधो विचारणात् *** *என்ற ஆக்ஷேபாலங்காரப்ர*

ஞ்ஞளியிலே இந்த வர்ணனை தானும் தகாதென்று மறுத்துப் பேசுகிறார் ஈற்றடியால். "ஆவிலாம் வர்ணநாம்" என்கையாலே இந்த வர்ணனையும் அநுசிதமென்று காட்டப் பட்டது. எதனால் அநௌசித்யமென்ன; [ञान्तकृत्रिमकथं दिव्यं वपुः– சாந்தக்ருத்ரிமகதாம் திவ்யம் வபு:] என்கிறார். சந்திரன் முதலான பொருள்களின் ஸாரகுணங்களைக்கொண்டு பிராட்டியின் திருமேனி நிருமிக்கப்பட்டதென்றால் இத்திருமேனி க்ருத்ரிமமானது என்றன்றோ தேறும்; க்ருத்ரிமகதாகந்தமுமற்ற இத்திருமேனிக்கு இந்த வர்ணனை சிறிதுமுரியதன்றே. திருவின் திருமேனிக்கு திவ்யம் என்ற விசேஷணம் உயிரானது; அப்ராக்ருதமான விதனை ப்ராக்ருத வஸ்துக்களின் ஸாரமாக எங்ஙனே சொல்லலா மென்கை.

முதல் பாதத்தின் முடிவிலுள்ள "गुम्भतः— கும்பத:" என்கிற பதம் ஷஷ்ட்யேக வசநாந்தம்; க்ஷீராப்திக்கு விசேஷணமானது. கும்பந் என்பது ப்ரதமைகவசநரூபம்; சத்ர்ப்ரத்யயாந்தம். 'திரட்டுகின்றவனை' என்று பொருள். ருஜீஷதாம்—இப்பி யாகுந் தன்மையை என்றபடி. கீழ்ச்லோகத்தில் த்ருவம் என்றது போலே இங்கும் மந்யே என்றது உத்ப்ரேக்ஷாலிங்கம். எந்த அம்சத்தில் உத்ப்ரேக்ஷையென்னில்; பூர்வார்த்தத்தில் இரண்டு விஷயங்கள் சொல்லப்பட்டன; (1) திருப்பாற்கடலரசன் சந்த்ர கல்பவ்ருக்ஷாதிகளின் ஸாரபூதகுணங்களைக்கொண்டு பிராட்டியின் திரு மேனியைப் படைத்ததாகச் சொன்னது ஒன்று. (2) அதிலிருந்து இப்பியாய் அஸார மானபடியினால்தான் அந்த சந்த்ராதிகளுக்கும் ஏற்றமுண்டாயிற்றென்று சொன்னது மற்றொன்று; இவ்விரண்டும் உத்ப்ரேக்ஷையென்க. ... ... ... ... (36)

प्रणमदनुविधित्सावासनानम्रमग्रे
प्रणयिपरिचिचीषाकुञ्चितं पार्श्वकेन।
कनकनिकषचञ्चच्चम्पकस्रक्समान
प्रवरमिदमुदारं वर्ष्म वाचामभूमिः ॥३७॥

ப்ரணமதநுவிதித்ஸாவாஸநாநம்ரமக்ரே
ப்ரணயிபரிசிசீஷாகுஞ்சிதம் பார்ச்வகேந,
கநகநிகஷசஞ்சச்சம்பகஸ்ரக்ஸமாந
ப்ரவரமிதமுதாரம் வர்ஷ்ம வாசாமபூமி: ... .... ... .... .... (37)

***ஸ்ரீரங்கநாச்சியாருடைய திருமேனி ஸந்நிவேசமிருக்கும்படியைச் சிறிது பேசி, அந்தோ! இது வாக்குக்கு நிலமன்றேயென்கிறார். திருமுடிபாகமிருக்கும் படியை முதல் பாதத்தாலும், பார்ச்வபாகமிருக்கும்படியை இரண்டாம் பாதத்தாலு மருளிச்செய்கிறார். இந்த ச்லோகத்தில் ஹே ஸ்ரீ:! என்றொரு ஸம்போதநமும் தே என்றொரு ஷஷ்ட்யந்தபதமும் கீழ்ச்லோகத்திலிருந்து வருவித்துக்கொள்ளவேணும். ஸ்ரீரங்கநாச்சியாரே! [இதம் வர்ஷ்ம] இந்தத்திருமேனி எங்ஙனே யிராநின்றதென்னில்; [प्रणमदनुविधित्सावासनानम्रम् अग्रे—ப்ரணமத் அநுவிதித்ஸாவாஸநாநம்ரம் அக்ரே] திருவடி வாரத்திலே வந்து வணங்கும் பக்தர்களையநுக்ரஹிக்கும் பொருட்டுத் திருமுடிதாழ்ந் திருக்குமிருப்பு. திருமுகமண்டலம் தழைந்திருக்கும் நிலைமையை நோக்கினால், பக்தர்

களின் வரவை எதிர்பார்த்தும் வந்து சேர்ந்தபக்தர்களுக்கு அநுக்ரஹம் செய்யப் பாரித்தும் இருக்கு மிருப்பு கொல்! என்று உல்லேகிக்கலாம்படியிரா நின்றது.

[प्रणयिपरिचिषीषाकुञ्चितं पार्श्वकेन— ப்ரணயிபரிசிசீஷா குஞ்சிதம் பார்ச்வகேந] "பார்ச்வகே ச" என்று சிலருடைய பாடம்; அதுவுமொக்கும். ஸ்ரீரங்கநாச்சியாருடைய பார்ச்வப்ரதேசம் பரமவிநயம் தோற்ற ஒடுங்கித் துவண்டிருக்கிறபடி கண்டால், ஆச்ரிதர்கள் பக்கலிலே மணவாளனை அநுக்ரஹோந்முகனாக்குவதற்காக இங்ஙனேயிருக்கிறபடியோவென்று உல்லேகிக்கலாம்படியிராநின்றது.

இங்ஙனே அவயவைகதேசங்களின் நிலைமையை உல்லேகித்து, மேல் திருமேனி முழுதுமிருக்கும்படியைப் பேசுகிறார் * கநகநிகஷேத் யாதியால். கநகநிகஷமாவது ஸுவர்ணரேகை; அது போலே உஜ்ஜ்வலமாயிராநின்றது திருமேனி. [சஞ்சச்சம்பகஸ்ரக்ஸமாநப்ரவரம்] விகஸியாநின்ற செண்பகமாலை போல் கமழாநின்றது. ஸமாநப்ரவரமென்றது—ஸாம்யாபந்நமென்றபடி. ஆக இப்படிப்பட்ட திருமேனி வாசாமகோசரமென்னத்தகுமேயொழிய வாய்கொண்டு வருணிக்கப்போகாது என்றாராயிற்று. ... ... ... ... ... ... ... ... ... (37)



एकं न्यञ्च्य नतिक्षमं मम परं चाकुञ्च्य पादाम्बुजं
मध्येविष्टरपुण्डरीकमभयं विन्यस्य हस्ताम्बुजम् ।
त्वां पश्येम निषेदुषीं प्रतिकलं कारुण्यकूलङ्कष
स्फारापाङ्गतरङ्गमम्ब! मधुरं मुग्धं मुखं बिभ्रतीम् ॥३८॥

ஏகம் ந்யஞ்ச்ய நதிக்ஷமம் மம பரஞ்சாகுஞ்ச்ய பாதாம்புஜம்
மத்யேவிஷ்டரபுண்டரீகமபயம் விந்யஸ்ய ஹஸ்தாம்புஜம்,
த்வாம் பச்யேம நிஷேதுஷீம் ப்ரதிகலம் காருண்ய கூலங்கஷ
ஸ்புராபாங்கதரங்கமம்ப! மதுரம் முக்தம் முகம் பிப்ரதீம். .... ... (38)

***ஸ்ரீரங்கநாச்சியார் ஆஸனபுண்டரீகத்தின் மீது வீற்றிருக்கும்படியை நெஞ்சு குளிர வநுஸந்தித்து, இந்நிலைமைதானே என்றும் தம்முடைய கண் முன்னே தோற்றிநிற்கவேணுமென்கிறாரிதில். ஹே அம்ப— வாரீர் திருத்தாயாரே! [एकं पादाम्बुजं मम नतिक्षमं न्यञ्च्य—ஏகம் பாதாம்புஜம் மம நதிக்ஷமம் ந்யஞ்ச்ய] ஒருதிருவடித்தாமரையை அடியேன் வணங்குமாறு நீட்டியருளியும். வலத்திருவடியை ஆஸன பத்மத்தின் கீழே தொங்கவிட்டிருக்கும்படியைப் பேசினவாறு. அப்படி ஒரு திருவடியை நீட்டியருளினதற்கு ஹேது சொல்லிற்று 'மம நதிக்ஷமம்' என்று. [परं पादाम्बुजम् आकुञ्च्य—பரம் பாதாம்புஜம் ஆகுஞ்ச்ய] மற்றொரு இடத்திருவடியை மடக்கிக் கொண்டிருக்கும் படியைச் சொல்லிற்று. இது ஆஸ்தான்யஸௌகுமார்ய இருப்பு. [अभयं हस्ताम्बुजं विन्यस्य— அபயம் ஹஸ்தாம்புஜம் விந்யஸ்ய] திருக்கையை அபய முத்ராஞ்சிதமாகக் காட்டிக்கொண்டு என்றபடி. ஆக இவ்வண்ணமாய் [मध्येविष्टर-पुण्डरीकं निषेदुषीम्— மத்யேவிஷ்டர புண்டரீகம் நிஷேதுஷீம்] விஷ்டர மென்று ஆஸனத்திற்குப்பெயர். விஷ்டரபுண்டரீகமென்றது ஆஸனபத்மமென்றபடி. 'மத்யேவிஷ்டரபுண்டரீகம்' என்று ஸமஸ்தபதம்; அவ்யயீபாவஸமாஸம். 'நிஷேது

ஷீம்' என்பது லிட்ரூபத்தின்மேல் வந்த க்வஸு-ப்ரத்யயாந்தமான ரூபம். இது சந்தஸ்ஸில் மாத்திரம் நிகழ்வதாயினும் மஹாகவிகளும் ப்ரயோகிப்பதுண்டு.

பெரிய பிராட்டியாரை மற்றொரு விசேஷணத்தாலும் விசேஷிக்கிறார் [**कारुण्यकूलंकषस्फारापाङ्गतरङ्गं मुखं बिभ्रतीम्** —காருண்ய கூலங்கஷஸ்பாராபாங்கதரங்கம் முகம் பிப்ரதீம்] கருணையினாலே அலைமோதுகின்ற மிகப்பெரிய கடாக்ஷவீக்ஷா தாரைகளை யுடைத்தான திருமுகமண்டலத்தையுடையவள். இப்படிப்பட்ட, த்வாம்—தேவரீரை; ப்ரதி கலம் பச்யேம—க்ஷணந்தோறும் இடைவிடாது கண்டுகொண்டிருக்கக்கடவோம். மதுரம் என்றது பரமபோக்ய மென்றபடி. முக்தம் என்றது—ஸுந்தரம் அல்லது மோஹஜநகம் என்றபடி. ... ... ... ... ... ... ... (38)

सुरभितनिगमान्तं वन्दिषीयेन्दिरायाः
तव कमलपलाशप्रक्रियं पादयुग्मम् ।
वहति यदुपमर्दैर्वैजयन्ती हिमाम्भः-
प्लुतिभिरिव नवत्वं कान्तबाहान्तराले ॥३९॥

ஸுரபிதநிகமாந்தம் வந்திஷீயேந்திராயா:
தவ கமலபலாசப்ரக்ரியம் பாதயுக்மம்,
வஹதி யதுபமர்தைர் வைஜயந்தீ ஹிமாம்ப:
ப்லுதிபிரிவ நவத்வம் காந்த பாஹாந்தராலே. .... .... ... .... (39)



✻✻✻பெரிய பிராட்டியாருடைய திருவடிகளிலே சரணம் புகுகிறார்: ✻அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா! ✻ என்றும், ✻பூவார்திருமாமகள்புல்கியமார்பா! ✻ என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுடைய திருமார்பிலே அமர்ந்துறையும் படியையும் சேரவநுஸந்திக்கிறார். [**இந்திராயாஸ் தவ பாதயுக்மம் வந்திஷீய**] ஸ்ரீரங்கநாச்சியாரே! ஐச்வர்யப்ரதையான உம்முடைய திருவடியிணையை இறைஞ்சியேத்தக்கடவேன். அது எப்படிப்பட்டதென்னில், [**ஸுரபிதநிகமாந்தம்**] வேதாந்தங்களையெல்லாம் பரிமளிக்கச்செய்தது. வேதாந்த வேத்யமென்றபடி. பின்னையும் எப்படிப்பட்டதென்னில்; [**கமலபலாசப்ரக்ரியம்**] தாமரையிதழ்போன்று செவ்விவாய்ந்தது. பின்னையும் எப்படிப்பட்டதென்னில்; எம்பெருமானுடைய திருமார்பிலே வைஜயந்தியோடு கூட விளங்கும் படியானதென்று சொல்லக்கருதி அதையொரு சமத்காரமாகவருளிச் செய்கிறார். உத்தரார்த்தத்தாலே. கணவனுடைய திருமார்பிலே வைஜயந்தியென்கிற வனமாலையானது இந்தத்திருவடியிணையின் ஸங்கர்ஷம் பெற்றும் வாடாது வதங்காதிருப்பதோடு கூட, பனிநீர் தெளித்தாற்போலே அப்போதலர்ந்த பூப்போலே விளங்கா நின்றதாம். இதனால் அவன்மார்பை விட்டுப்பிரியாமையும் பரமஸௌகுமார்யமும் சொல்லிற்றாயிற்று. ... ... ... ... (39)

त्वत्स्वीकारकलावलेपकलुषा राज्ञां दृशो दुर्वचाः
नित्यं त्वन्मधुपानमत्तमधुपश्रीनिर्भराभ्यां पतिम् ।
दृग्भ्यामेव हि पुण्डरीकनयनं वेदो विदामास ते
साक्षाल्लक्ष्मि ! तवावलोकविभवः काका कया वर्ण्यते ॥४०॥

**த்வத்விகாரகலாவலேபகலுஷா: ராஜ்ஞாம் த்ருசோ துர்வசா:**
**நித்யம் த்வந்மதுபாநமத்தமதுபஸ்ரீநிர்ப்பரப்யாம் பதிம்**
**த்ருக்ப்யாமேவ ஹி புண்டரீகநயநம் வேதோ விதாமாஸ தே**
**ஸாக்ஷால்லக்ஷ்மி தவாவலோகவிபவ: காக்வா கயா வர்ண்யதே. .... ... (40)**

***இந்த ச்லோகத்திலுல், ஸ்ரீரங்கநாச்சியாரின் கடைக்கண்ணோக்கத்தினுடைய சிறப்பானது நாம் பாசுரமிட்டுப் பேசும்படியான நிலைமையில் இல்லையென்று மூதலிக்கப்படுகிறது.

பெரியபிராட்டியாருடைய விஷயீகாரலேசம் பெற்றவர்களான ராஜாக்களின் கண்களைப் பற்றிப் பேசுவதே நம்மால் முடியாத காரியமாக இருக்கும்போது அப்பெரிய பிராட்டியார் தம்முடைய திருக்கண்களைப் பற்றி ஸாக்ஷாத்தாகப் பேசுவது நம்மாலாகுமோ? என்பது முதல் பாதத்தின் கருத்து. (ராஜ்ஞாம்) என்றது லோகபாலர்கள் முதலாக இன்று வரையிலுள்ள அரசர்களைக் குறிக்கின்றது. கீழே * அபாங்கா பூயாம்ஸ: * என்கிற ச்லோகத்தில் "அமீ யத்ர த்வித்ரா: ஸச ஸதமகாதிஸ் ததஸராத்" என்று, பிராட்டியின் ஸ்வல்ப கடாக்ஷவீக்ஷணத்திற்கு இலக்கானவர்களே பிரமன் முதலானவர்களாக ஆகின்றார்கள் என்று அருளிச் செய்திருப்பதும், * ஆகுக்ராம கியாமகாத் * என்ற ச்லோகத்தின் ப்ரமேயமும் இங்கு அநுஸந்தேயம். பிராட்டியின் கடாக்ஷலேசம் பெற்று மேன்மை பெற்றவர்களின் கண்ணோக்கமே நம்மால் பேச முடியாத நிலைமையிலிருக்கும்போது அப்பிராட்டியின் கண்ணோக்கத்தையே பற்றி ஸாக்ஷாத்தாகப் பேசுவது எப்படி ஸாத்யமாகும் என்றதாயிற்று முதலடியால்.

இனி, இரண்டாவது பாதமும் மூன்றாவது பாதமும் சேர்ந்து ஒரு வாக்யார்த்தம். க்ஷுத்ர ராஜாக்களைப் பற்றின பேச்சு அப்படியிருக்கட்டும்; மஹா ப்ரபுவான ஸ்ரீமந்நாராயணனையே எடுத்துக் கொள்ளுவோம்; அவன் பிராட்டியாகிற மதுவைப் பருகும் விஷயத்தில் வண்டு போன்றுள்ளவைகளான தனது திருக்கண்களுக்கு அந்த மதுபானமே காரணமாக ஓர் சிறந்த அதிசயம் உண்டாகப்பெற்று, அந்தக் கண்ணழகும் போல்வாருடைய வாக்குக்கு விஷயமன்றிக்கே வேதமே பேசவேண்டும்படியாகி, அந்த வேதந் தானும் பரக்கப் பேசமாட்டாமல் **"तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी"** என்று புண்டரீகாக்ஷனென்று மாத்திரம் பேசிப்போந்தது. எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு விளைந்ததான இவ்வதிசயமானது பிராட்டியை இடை விடாது அநுபவித்ததனாலேயாம் இத்தனை.

ஆக, பிராட்டியாலே நோக்கப்பட்டவர்களான அரசர்களின் வீக்ஷண விபவமே நம்மால் பேச முடியாததாகவேயிருக்கின்றது. பிராட்டியை இடை விடாது நோக்குகின்ற பெருமானுடைய வீக்ஷண விபவமோ வேதத்திற்குப் பரக்கப் பேச முடியாததாய் ஒரு படி பேசலாயிருந்தது. இப்படியிருக்க, இவ்வளவுக்கும் மூலகந்தமான அப்பிராட்டி தன்னுடைய நோக்கத்தையே ஸாக்ஷாத்தாகச் சிறிது பேசுவோமென்றால் இது எங்ஙனே ஸாத்யம் என்றதாயிற்று. ஒரு தாரு தனிகனிடத்தில் ஒரு நாள் க்ஷணகாலம் சிறிது தானம் வாங்கினவனுடைய

செல்வச் சிறப்பே பாசுரமிட்டுச் சொல்லமுடியவில்லை யென்றால் அந்த நகாரனுடைய ஐச்வர்யத்தை ஸாக்ஷாத்தாக எடுத்துரைக்கப்புகுவது எங்ஙனே? என்றாற் போலே இது கூறினபடி.

[த்வந்மதுபாநமத்தமதுபஸ்ரீநிர்பராப்யாம் த்ருக்ப்யாம்] இதன் கருத்தாவது—எம்பெருமானுடைய திருக்கண்களானவை "கரியவாகிப் புடை பரந்து" என்கிற திருப்பாணாழ்வாருடைய திவ்ய ஸூக்தியின்படியே கறுத்திருக்கின்றன. இந்தக் கருமையானது எதை யிட்டுச் சொல்லுகிறதென்னில், திருக்கண்களிலுள்ள கருவிழியைப் பற்றச் சொல்லுகிறது. அந்தக் கருவிழிகளானவை மதித்த வண்டுகள் போலே யிராநின்றன. வண்டு மதுவ்ரதமாகையாலே இந்த வண்டுகட்கு எந்த மதுவென்றால் (த்வந்மது) பெரிய பிராட்டியாருடைய திருமேனியே மது. அந்த மதுவை நிச்சலும் பருகிப் பொறிவண்டுகள் போன்றுள்ளன எம்பெருமானது திருக்கண்கள் என்றதாயிற்று. त्वमेव मधु-त्वन्मधु என்று ஸமாநாதிகரணஸமாஸம் விவக்ஷிதம். ... (40)

आनन्दात्मभिरीशमज्जनमदक्षीबालसै रागल-
प्रेमार्द्रैरपि कूलमुद्वह कृपासंप्लाविताास्मादृशैः ।
पद्मे! ते प्रतिबिन्दुबद्धकलिकब्रह्मादिविष्कम्भकै:
ऐश्वर्योद्गमगद्गदैरशरणं मां पालयालोकितैः ॥४१॥

ஆநந்தாத்மபிரீசமஜ்ஜநமதக்ஷீபாலஸை ராகல-
ப்ரேமார்த்ரைரபி கூலமுத்வஹக்ருபாஸம்ப்லாவிதஸ்மாத்ருசை:,
பத்மே! தே ப்ரதிபிந்துபத்தகலிகப்ரஹ்மாதிவிஷ்கம்பகை:
ஐச்வர்யோத்கமகத்கதை ரசரணம் மாம் பாலயாலோகிதை: ... ... (41)

***ஸ்ரீரங்கநாச்சியாருடைய கடாக்ஷவீக்ஷாவைபவந் தன்னையே மீண்டும் வருணித்து, அக்கடாக்ஷவீக்ஷணம் தம்மேல் ப்ரஸரிக்கவேணுமென்று வேண்டுகிறாரிதில். [ஹே பத்மே! தே! ஆலோகிதை: மாம் பாலய] வாரீர் பெரிய பிராட்டியாரே! தேவரீருடைய திருக்கண்ணோக்கத்தாலே அடியேனைக் காத்தருளவேணும். அந்த கடாக்ஷ வீக்ஷணங்கள் தாமிருக்கும்படியென்னென்னில்; ஆறுவிசேஷணங்களாலே அவற்றை விசேஷிக்கிறார் [ஆநந்தாத்மபி:] பேரின்பமே வடிவெடுத்திருப்பவையென்றபடி. ஆநந்த ஸந்தோஹகந்தங்களாயிருக்குமவையென்று கருத்து. [ஈசமஜ்ஜநமதக்ஷீபாலஸை:] உபயவிபூதிநாதனை எம்பெருமானுங்கூட, மேலே (55) * कचन हि विभ्रमभ्रमिमुखे विनिमज्जति ते * என்று சொல்லுகிறபடியே தன்னில் அமிழ்ந்து போகிறானென்னுங் காரணத்தினலுண்டான செருக்கையுடையனவாயிருக்கும். க்ஷீபத்வமாவது மத்தத்வம். பிராட்டியின் கடைக்கண்ணோக்கின் ஒருமூலையிலே உபயவிபூதிநாயகன் அமிழ்ந்து போகிறானென்றால் இது மதஹேதுவிறே. அதற்கு மேல் அலஸை: என்றது மதம் கொண்டவர்களுக்குரிய தன்மை சொன்னபடி. क्षीबानि च तानि अलसानि चेति विशेषणोभयपदकर्मधारयसमास: ॥

[आगलप्रेमार्द्रैः—ஆகலப்ரேமார்த்ரை:] கழுத்தேகட்டளையான ப்ரேமம் கசிந்தவை; பரிபூர்ண ப்ரேமகர்ப்பங்களென்றபடி. [कूलमुद्वहकृपासंप्लावितास्मादृशैः— கூலமுத்வஹ

க்ருபாஸம்ப்லாவித அஸ்மாத்ருசை:] இருகரையுமழியப்பெருகும் க்ருபாப்ரவாஹத்தை நம்போன்ற மேட்டு நிலத்திலும் ஏறிப்பாயவிடுமவை. நம்போல்வாரிடத்திலும் கருணை பொங்கியிருப்பவையென்றபடி. [प्रतिबिन्दुबद्धकलिकब्रह्मादि विष्कम्भकैः —ப்ரதிபிந்து பத்த கலிக ப்ரஹ்மாதிவிஷ்கம்பகை:] கடாக்ஷலேசம் படுமிடந்தோறும் பிரமன் சிவனிந்திரன் முதலான நிர்வாஹகர்கள் தோன்றும்படியிருக்குமவை. கீழே "அமீ யத்ர த்வித்ராஸ் ஸச சதமகாதிஸ் ததராத்" என்றருளிச் செய்ததை இங்கே நினைப்பது. விஷ்கம்பகசப்தம் நிர்வாஹகதாத்பர்யகம். [ऐश्वर्योद्गमगद्गदैः—ஐச்வர்யோத்கமகத்கதை:] செல்வச் சிறப்பையுண்டாக்க வல்லவையென்று கருத்து. ஆக இப்படிப்பட்ட கடாக்ஷ வீக்ஷணங்களாலே, புகலொன்றில்லாவடியேனை நோக்கியருள வேணுமென்றாராயிற்று.

பட்டர்தாம் ஆதியிலே "பரிசிதமிவ அதாபி கஹநம் த்வமேவ ஸ்ரீர் மஹ்யம் பஹுமுகய வாணீவிலஸிதம்" என்று விலக்ஷணவாக்வைகரியை ப்ரார்த்தித்தவராகையாலே அப்படிப்பட்ட வாக்விலஸிதம் இந்தச்லோகத்திலே விசேஷித்துக் காணலாயிருக்கும். அதிகம்பீர ப்ரயோகங்கள் காண்க.

இதில் மூன்றும் பாதத்தின் முகப்பில் *பத்மே! தே* என்றதை இரண்டு பதமாகக்கொள்ளாமல் ஒரேபதமாகக்கொள்ளும் பரிச்ரமத்தைச் சிலர் படுவதுண்டு; அது அநவஸர மென்று விடுக்க. ... ... ... ... ... (41)



पादारुन्तुदमेव पङ्कजरजश्चेटीभ्रूशालोकितैः
अङ्गम्लानिरथाम्ब साहसविधौ लीलारविन्दग्रहः ।
डोला ते वनमालया हरिभुजे हा कष्टशब्दास्पदं
केन श्रीरतिकोमला तनुरियं वाचां विमर्दक्षमा ॥४२॥

பாதாருந்துதமேவ பங்கஜரஜச் சேடீ ப்ருசாலோகிதை:
அங்கம்லாநிரதாம்ப ஸாஹஸவிதௌ லீலாரவிந்தக்ரஹ:
டோலா தே வநமாலயா ஹரிபுஜே ஹா கஷ்டசப்தாஸ்பதம்
கேந ஸ்ரீரதிகோமலா தநுரியம் வாசாம் விமர்தக்ஷமா. ... ... ... (42)

***ஸ்ரீரங்கநாச்சியாருடைய ஸௌகுமார்யாதிசயம் ஒருவராலும் வாய்கொண்டு வருணிக்க வொண்ணாதென்கிறுரிதில். [பங்கஜரஜ: தே பாதாருந்துதமேவ] தாமரைப்பூவினுள்ளே அதிஸுகுமாரமாக விருக்கும் துகளுங்கூட தேவரீருடைய திருவடி கொதிக்க ஹேதுவாயிற்று. அது அடிக்கொதித்தன்றோ எம்பெருமானுடைய திருமார்பிலே சென்றணைந்தது. [चेटीभ्रूशालोकितैः अङ्गम्लानिः— சேடீப்ருசாலோகிதை: அங்கம்லாநி:] தோழிமார்கள் சிறிது உற்றுப் பார்த்தாலும் திவ்யாவயவங்கள் வாட்டமடையாநின்றபடி. [अथ लीलारविन्दग्रहः साहसविधौ—அத லீலாரவிந்தக்ரஹ: ஸாஹஸவிதௌ] திருக்கையிலே லீலார்த்தமாகத் தாமரைப் பூவை ஏந்தியிருப்பதும் மஹத்தான ஸாஹஸமென்னலாயிருந்தது. [हरिभुजे वनमालया सह डोला हाकष्टशब्दास्पदम्—ஹரிபுஜே வநமாலயா ஸஹ டோலா ஹாகஷ்டசப்தாஸ்பதம்] எம்பெருமானுடைய திருத்தோளருகிலே (திருமார்பிலே) வநமாலையோடு கூட ஊசலாடுவதைப்பார்த்தாலோ ஹாகஷ்டம்! ஹாகஷ்டம்! என்று ஹாஹாகாரம் பண்ணவேண்டுமத்தனை.

இத்தனையும் அபரிமித ஸௌகுமார்ய நிபந்தநமாயிற்று. தாமரைமலரில் வஸிப்பது நெரிஞ்சிக்காட்டிலே வஸிப்பதுபோலாகின்றது; நிலமகள் ஆய்மகள் முதலான ஸபத்நிகள் உற்றுப்பார்ப்பதும் மேனிவாடிப்போவதற்கு ஹேதுவாகின்றது; லீலாரவிந்தத்தைக் கையிலேந்தி நிற்பதும் ஸாஹஸ கோடியிலே எழுதலாயிருந்தது; திருமால் திருமார்பிலே ஊசலாடுவதும் அஸஹ்யசங்காவஹமாயிராநின்றது என்றவிதனால் ஸௌகுமார்யத்தின் எல்லை சொல்லிற்றாயிற்று. இத்தகைய ஸௌகுமார்யம் கவிகளின் பருஷமான வாக்குக்களாலே பேசப்பட்டாலும் மாந்திப்போமாகையாலே இதனை யார் தாம் பேச வல்லாரென்று தலைக்கட்டினாராயிற்று. ... (42)

**आमर्यादमकण्टकं स्तनयुगं नाद्यापि नालोकित**
**भ्रूभेदस्मितविभ्रमा जहति वा नैसर्गिकत्वायशः ।**
**सूते शैशवयौवनव्यतिकरो गात्रेषु ते सौरभं**
**भोगस्रोतसि कान्तदेशिककरग्राहेण गाहक्षमः ॥४३॥**

**ஆமர்யாதமகண்டகம் ஸ்தநயுகம் நாத்யாபி, நாலோகித**
**ப்ருபேதஸ்மிதவிப்ரமா ஜஹதி வா நைஸர்கிகத்வாயச:,**
**ஸூதே சைசவயௌவநவ்யதிகரோ காத்ரேஷு தே ஸௌரபம்**
**போகஸ்ரோதஸி காந்ததேசிககரக்ராஹேண காஹக்ஷம:** ... ... ... (43)



✻✻✻ஸ்ரீரங்கநாச்சியாருடைய பருவத்தின் இளமையை வருணிக்கிறாரிதில். **ஹே ஸ்ரீ:!** என்று ஸம்போதநம் வருவித்துக்கொள்வது. [**ते स्तनयुगम् अद्यापि आमर्यादम् अकण्टकं न** — தே ஸ்தநயுகம் அத்யாபி ஆமர்யாதம் அகண்டகம் ந] முலையோ முழுமுற்றும் போந்தில ✻ என்று நம்மாழ்வாரும் ✻ கொங்கை யின்னுங் குவிந்தெழுந்தில ✻ என்று பெரியாழ்வாருமருளிச் செய்தவை இங்கே நினைக்க. ஸ்தநோத்பேதத்திற்கு ஒரு ஸ்தலாவகாசாவதியுண்டே; அந்த அவகாசத்திற்கு 'மர்யாதா' என்று பெயர்; 'ஆமர்யாதம்' என்றது அந்த மர்யாதையளவும் என்றபடி. 'அகண்டகம் ந' என்றது ப்ரதிரோதமின்றிக்கே உண்டாகவில்லையென்றபடி. பரிபூர்ணஸ்தநோத்பேதம் வயஸா ப்ரதிருத்தமாயிரா நின்றதென்றபடி.

[**आलोकित भ्रूभेदस्मितविभ्रमा वा नैसर्गिकत्वायशः न जहति**—ஆலோகிதப்ருபேதஸ்மித விப்ரமா வா நைஸர்கிகத்வ அயச: ந ஜஹதி] விலாஸார்த்தகமான விப்ரமசப்தம் ஆலோகிதத்திலும் ப்ருபேதத்திலும் ஸ்மிதத்திலும் அந்வயிக்கக்கடவது. ஆலோகித விப்ரமம், ப்ருபேதவிப்ரமம், ஸ்மிதவிப்ரமம் என்றாகக்கடவது. நோக்கும் நோக்கில் ஒருவிலாஸமுண்டு; புருவநெறிப்பிலும் ஒருவிலாஸமுண்டு; புன்சிரிப்பிலும ஒரு விலாஸமுண்டு; இவை இயற்கையான ரீதியில் உள்ளனவேயன்றி யௌவன பருவத்திற்கு ஏற்றரீதியில் அமையவில்லை. இதுவும் யௌவந பூர்த்தியில்லாமையைத் தெரிவிப்பதாம். வா என்னுமவ்யயம் ஏவகாரஸ்தானே வந்ததாகையால் ஸமுச்சயார்த்தகம். "ஆலோகித....... விப்ரமா: நைஸர்கிகா ஏவ ஸந்தி" என்றதே நைஸர்கிகத்வ அயச: ந ஜஹதி' என்றது பட்டருக்கு அஸாதாரணமான உக்திசமத்காரத்திற் சேர்ந்தது. நைஸர்கிகத்வமாவது ஸ்வாபாவிகத்வம்; அதை ஒரு அபயசஸ்ஸாக வைத்து அது இன்னமும் கழியவில்லையென்று சொன்னவிது விலக்ஷண ப்ரக்ரியையே.

இனி உத்தரார்த்தத்தின் கருத்தாவது—[शैशवयौवनव्यतिकरः ते गात्रेषु सौरभं सूते— சைசவயௌவநவ்யதிகர: தே காத்ரேஷு ஸௌரபம் ஸூதே] அதிககௌமாரமும் அதிக யௌவநமுமாக விருந்தால் விரஸமேயாகும்; கௌமார யௌவனங்களின் ஸந்தியான பருவமாக இருக்குமிது தேவரீருடைய திவ்யாவயவங்களில் விலக்ஷணமான பரிமளத்தை விளைவிக்கின்றதென்கை. சைசவமென்கிற சொல் சிசுபிராயத்தையே சொல்லுமதன்று; கௌமாரத்தையும் சொல்லக்கடவது; ✻ शैशवेऽभ्यस्तविद्यानाम्— —சைசவே அப்யஸ்தவித்யாநாம் ✻ என்ற ரகுவம்சப்ரயோகமும் காண்க. கௌமார யௌவ்னங்களின் ஸந்தியான அப்பருவம் எத்தகைத்தென்ன, அதை நான்காவது பாதத்திலருளிச்செய்கிறார் [भोगस्रोतसि कान्तदेशिक करग्राहेण गाहक्षमः —போகஸ்ரோதஸி காந்த தேசிக கரக்ராஹேண காஹக்ஷம:] போக (भोग) ப்ரவாஹத்தில்வந்தால் வல்லபருடைய கராவலம்பம் கொண்டே இழியவேண்டும்படியாயிருக்கும். தேசிகசப்தம் 'அந்நிலத்திற்கு உரியவர்' என்னும் பொருள்கொண்டது. மஹாநதீ ப்ரவாஹத்தில் இறங்கவேண்டுமானால் அந்நிலத்திற்கு உரியவர்களாய் அவ்விடத்து மேடுபள்ளமான நிலைமைகளையறிந்திருப்பவர்களான நிலவருடைய கராவலம்பங்கொண்டு இறங்குமா போலே பிராட்டியும் பகவத் போகவெள்ளத்திலே ஸ்வதந்த்ரமாக இழியமாட்டாமை சொன்னபடி. இதனால் பருவத்தின் இளமையை ஸ்திரீகரித்தபடி. கீழே ✻ भोगोपाद्धातकेलीचुलकितभगवद्वैश्वरूप्यानुभावा ✻ என்றருளிச்செய்ததோடும், மேலே யருளிச் செய்யப்போகிற ✻ दशशतपाणिपादेत्यादि ச்லோகத்தோடும் இது எங்ஙனே பொருந்தும்? என்று சங்கிக்கலாகாது. ... ... ... ... ... ... (43)

आमोदाद्भुतशालि यौवनदशाव्याकोचमम्लानिमत्
सौन्दर्यामृतसेकशीतलमिदं लावण्यसूत्रार्पितम् ।
श्रीरङ्गेश्वरि! कोमलाङ्गसुमनस्सन्दर्भणं देवि! ते
कान्तोरःप्रतियत्नमर्हति कविं धिङ्मामकाण्डाकुलम् ॥४४॥

ஆமோதாத்புதசாலி யௌவநதசாவ்யாகோசமம்லாநிமத்
ஸௌந்தர்யாம்ருதஸேகசீதலமிதம் லாவண்யஸூத்ரார்ப்பிதம்
ஸ்ரீரங்கேச்வரி! கோமலாங்கஸுமநஸ் ஸந்தர்ப்பணம் தேவி! தே
காந்தோர:ப்ரதியத்நமர்ஹதி கவிம் திங் மாமகாண்டாகுலம். ... ... (44)

✻✻✻ ஸ்ரீரங்கநாச்சியாருடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை ஒரு புஷ்ப மாலையாக ரூபித்து, இந்த மாலை எம்பெருமானுடைய திருமார்புக்கு அலங்காரமாகின்றதென்று பேசி, இங்ஙனே பேசுகைதானும் உசிதமன்றேயென்று அநுதாபத்தோடே தலைக்கட்டுகிறார் இந்த ச்லோகத்தை. [ஹே ஸ்ரீரங்கேச்வரி! தேவி!] தேவதேவ திவ்ய மஹிஷியான ஸ்ரீரங்கநாச்சியாரே!, [தே! கோமலாங்கஸுமநஸ்ஸந்தர்புணம்] தேவரீருடைய பரமஸுகுமாரமான திருமேனியாகிற பூந்தொடையலானது; காந்த உர:ப்ரதியத்நம் அர்ஹதி] அழகிய மணவாளனுடைய திருமார்புக்குப் பரிஷ்காரமாக இருக்கத் தகுதியுடையது; எம்பெருமானுடைய திருமார்பை அலங்கரிக்கத்தக்கது என்றபடி. பிராட்டியின் திருமேனியைப் பூந்தொடையலாக ரூபித்ததற்குப் பொருத்தமான உப

பத்திகளை விசதமாகச் சொல்லுகிறது பூர்வார்த்தம். எம்பெருமானுடைய திருமார்புக்கு அலங்காரமாகக்கடவதான பூந்தொடையலானது பரிமள ப்ரசுரமாயும் விகாஸ சாலியாயும் வாடாததாயும் நீர்தெளிக்கப்பெற்றுக் குளிர்ந்ததாயும் ஸூத்ரத்திலே தொடுக்கப்பட்டதாயுமிருக்கும்; பிராட்டியின் திருமேனியும் அங்ஙனேயிரா நின்றதென்கிருர்.

**आमोदाद्भुतशालि** — ஆமோதாத்புதசாலி] அத்புதமான பரிமளமுடைத்தாயிருக்கிறதென்பது புநருக்தம். "ஸூதே சைசவயௌவநவ்யதிகரோ காத்ரேஷு தே ஸௌரபம்" என்று கீழ்ச்லோகத்தில் சொல்லிற்றிறே. [**यौवनदशाव्याकोचम्**—யௌவந தசா வ்யாகோசம்] இங்கு யௌவந சப்தம் கீழ்ச்லோகத்தில் நிர்ணயித்த கௌமார யௌவந ஸந்தியான பருவத்தைச் சொல்லக்கடவது. அப்பருவத்திற்குரிய விகாஸத்தையுடையதென்கை. [**अम्लानिमत्**— அம்லாநிமத்] மேன்மேலும் விகாஸோந்முகமாயிருக்கையாலே வாடுவதற்கு ப்ரஸக்தியற்றதாயிற்று. [**सौन्दर्यामृतसेकशीतलम्**— ஸௌந்தர்யாம்ருத ஸேகசீதலம்] அழகாகிற அமுதத்தைத் தெளித்து அதனாலே குளிர்ந்திரா நின்றது. [**லாவண்ய ஸூத்ர அர்ப்பிதம்**] லாவண்யமாகிற நூலிலே கோக்கப்பட்டிரா நின்றது. லாவண்யமென்பது நீரோட்டம்; அது ஸர்வாவயவங்களிலும் அநுஸ்யூதமாயிருப்பதொன்ருகையாலே அதை ஸூத்ரமாக ரூபிக்க ஔசித்யமுண்டு. ஆக ஐவகைத்தன்மைகளினாலே பூந்தொடையலாகச் சொல்லுதற்குரிய திருவின் திருமேனியானது எம்பெருமானுடைய திருமார்புக்கு அலங்காரமாகத்தகும் என்று சொன்னவாறே, கீழே (42) "**डोला ते वनमालया हरिभुजे हाकष्टशब्दास्पदम्**—டோலா தே வநமாலயா ஹரிபுஜே ஹாகஷ்ட சப்தா ஸ்பதம்" என்றருளிச் செய்திருந்ததை நினைத்தருளி, இப்படி சொல்லுகை உசிதமன்றேயென்று அநுதபித்து [**कविं धिङ्मामकाण्डाकुलम्**— கவிம் திங்மாம் அகாண்டாகுலம்] என்று முடிமேல் மோதிக்கொள்ளுமா போலே யருளிச்செய்கிருர். எம்பெருமானுடைய திருமார்புக்குப் பூந்தொடையல் அலங்காரமாகலாம்; அது எங்கே! இந்தத்திருமேனி யெங்கே!; வாசாமகோசரமான ஸௌகுமார்யமுடையவிது தனக்கு, தாமரைப்பூ அடிக்கொதித்தாற்போலே திருமார்பும் அடிக்கொதிக்குமே; என் சொன்னேன்! என் சொன்னேன்!! அஸ்தானத்திலே ஸம்ப்ரமித்துப்பேசின நானும் ஒரு கவியோ! என்கிருர். இதனால், திருவின் திருமேனியினுடைய ஸௌகுமார்யாதிசயமே ஸூசிதமாகும். கர்க்கசமான திருமார்பிலே பிராட்டி அகலகில்லேனிறையுமென்று உறைந்திருப்பது அவளுடைய ஸௌகுமார்யத்திற்குத் தகுதியன்ருகிலும் ஆச்ரிதவாத்ஸல்யாதிசயத்தினாலே இது வாய்த்ததென்கை உள்ளுறை. ... ... ... (44)

**मर्मस्पृशो रससिरा व्यतिविध्य वृत्तैः**
**कान्तोपभोगललितैर्लुलिताङ्गयष्टिः।**
**पुष्पावलीव रसिकभ्रमरोपभुक्ता**
**त्वं देवि! नित्यमभिनन्दयसे मुकुन्दम् ॥४५॥**

**மர்மஸ்ப்ருசோ ரஸஸிரா வ்யதிவித்ய வ்ருத்தை:**
**காந்தோபபோகலலிதைர் லுலிதாங்கயஷ்டி:,**

புஷ்பாவலீவ ரஸிகப்ரமரோபபுக்தா,
த்வம் தேவி! நித்யமபிநந்தயஸே முகுந்தம். .... .... .... ... (45)

*பிராட்டி அழகிய மணவாளனோடே ரமிக்கும்படியைத் தம்முடைய திருநாவீறு தோற்றவருளிச் செய்கிறாரிதில். லௌகிகர்களான நாயக நாயகிகளின் உபயோக மானது க்ராம்யமாகையாலே நாடகாதிகளில் அது சொல்லப்படவேண்டிய ப்ரஸக்தி நேர்ந்தாலும் சொல்லாது மறைத்துப்போவதுண்டு; சாகுந்தலநாடகாதிகளிலே அது காணலாம். பெருமாளுக்கும் பிராட்டிக்குமுண்டான போகம் அபராதபூயிஷ்டர்களான சேதநர்களை எம்பெருமான் ஸ்வீகரிக்கைக்காக நேருகிறவொரு பரிமாற்றமாகையாலே *அல்லி மலர்மகள் போக மயக்குக்களாகியும் நிற்குமம்மான்* என்று நம்மாழ்வாரும் பேசும்படியாயிராநின்றது. மேலே *பிதேவ த்வத்ப்ரேயாந்* என்கிற ச்லோகத்திலே "உசிதைருபாயைர் விஸ்மார்ய ஸ்வஜநயஸி" என்று மறைத்து அருளிச்செய்யும் பரிமாற்றத்தை இங்கு ஒருவாறு அருளிச் செய்கிறாராயிற்று. [ஹே தேவி! த்வம் முகுந்தம் நித்யம் அபிநந்தயஸே] வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே! தேவரீர் இடைவிடாது எம்பெருமானை உகப்பித்தருளாநின்றீர். (முமுக்ஷுப்படியிலே 2-17) "ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தையும் சேதநனுடைய அபராதத்தையுங்கண்டு அகலமாட்டாள்" என்றருளிச்செயதார் பிள்ளைலோகாசார்யர். அபராதங்களுக்குத் தக்கபடி தண்டனைகளைப் பண்ணியல்லது விடேனென்றிருக்குமெம்பெருமானுடைய ஸ்வாதந்த்ரியத்தையும், அநவரதம்பண்ணிப்போரும் இச்சேதநனுடைய அக்ருத்யகரணாதிகளான அபராதத்தையும்கண்டு பிராட்டியானவள் என்னாகுமோவென்னும் பயத்தாலே ஈச்வரனைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் பிரியாதேயிருந்து அவனைத் தன் சொல்வழிவருமவனாகப் பண்ணவேண்டுகைக்காக அவ்னை உகப்பித்துக்கொண்டேயிருப்பள்; அதுதான் ஒரு தலைக்காமமாகாமே அவனும் "சுவையன் திருவின்மணாளன்" என்கிறபடியே பரம ரஸிகஸார்வபௌமனாகையாலே எதிர்விழி கொடுப்பன். இப்படி திவ்யதம்பதிகள் பரிமாறும் பரிமாற்றம் லோகாநுக்ரஹார்த்தமாகையாலே சொல்லவேண்டியதேயாயிற்று. 'நித்யம் அபிநந்தயஸே' என்பதனாலே த்வயத்தில் மதுபர்த்தமான நித்யயோகம் அநுஸந்திக்கப்பட்டதாயிற்று.

[रसिकभ्रमरोपभुक्ता पुष्पावलीव अभिनन्दयसे—ரஸிக ப்ரமரோபபுக்தா புஷ்பாவலீவ அபிநந்தயஸே] *தூவியம்புள்ளுடைத் தெய்வவண்டுதுதைந்தவெம்பெண்மை அம்பூவிதாலோ* (திருவாய்மொழி 9-9-4) என்கிற பாசுரத்திற்கு ப்ரதிச்சந்தமாகவே இது அருளிச்செய்கிறபடி. ரஸிகமானதொருவண்டு அநுபவித்த பூமாலைபோலே துவண்டிருக்குமிருப்பைச் சொல்லுகிறது. துவட்சி எதனாலென்னில்; [कान्तोपभोगललितैर्लुलिताङ्गयष्टिः— காந்தோபபோகலலிதை: லுலிதாங்கயஷ்டி:] அழகிய மணவாளனுடைய ஸம்போக கேளிகளாலேயாயிற்று. முதல் பாதத்தாலே அவற்றை விசேஷிக்கிறது [मर्मस्पृशः रससिराः व्यतिविध्य वृत्तैः— மர்மஸ்ப்ருச: ரஸஸிரா: வ்யதிவித்த்ய வ்ருத்தை:] 'ஸிரா' என்று நாடிக்குப்பெயர்; ரஸஸிரையாவது ரஸநாடி; [ரஸஸிரா: என்று த்விதீயாபஹுவசநாந்தம்.] மர்மஸ்பர்சிகளான ரஸநாடிகளை அபிகாதம் செய்து கொண்டு ப்ரவ்ருத்தங்களான ஸம்போக விலாஸங்களாலே துவண்ட திருமேனியையுடையவளென்கை. गाढरूढसंश्लेषविशेषः प्रोक्तो भवति । யதி

ராஜஸப்ததியில் * रसधमनिवेधाय सुधियाम् * என்றது இங்கே ஒருபுடை நினைக்கத்தக்கது.

இந்தச்லோகத்தின் பரமதாத்பர்யமிவ்வளவே; ஸாபராத ரேதநாங்கீகாரார்த்தமாகப் பிராட்டி எம்பெருமானை வசீகரிக்கச்சில ச்ருங்கார லீலாவிலாஸ சேஷ்டிதங்களை செய்ய, அவனும் திருவுள்ளமுகந்து கலந்து பரிமாற, இங்ஙனே திவ்யதம்பதிகளிருவரும் ஆனந்த வெள்ளத்திலே அமிழ்ந்திருக்கும்படி சொல்லிற்றாயிற்று. (45)

कनकरशनामुक्ताताटङ्कहारललाटिका-
मणिसरतुलाकोटिप्रायैर्जनार्दनजीविके! ।
प्रकृतिमधुरं गात्रं जागर्ति मुग्धविभूषणै
र्वलयशकलैर्दुग्धं पुष्पैश्च कल्पलता यथा ॥४६॥

Divya Abharanam

கநகரசநாமுக்தாதாடங்கஹாரலலாடிகா-
மணிஸரதுலாகோடிப்ராயைர் ஜநார்தநஜீவிகே!,
ப்ரக்ருதிமதுரம் காத்ரம் ஜாகர்த்தி முக்தவிபூஷணை:
வலயசகலைர் துக்தம் புஷ்பைச்ச கல்பலதா யதா. .... .... ... (46)



***ஸ்ரீரங்கநாச்சியாருடைய திவ்யாபரண யோகஜநித சோபாவிசேஷத்தையநுஸந்தித்து ஈடுபடுகிறாரிதில். இயற்கையாகவே மதுரமான பாலிலே கண்ட சர்க்கரையும் சேர்ந்தாற்போலவும், இயற்கையாகவே மநோஹாரியான கல்பலதையிலே புஷ்பஸம்பத்தும் சேர்ந்தாற்போலவும் இயற்கையாகவே பரமபோக்யமான தேவரீருடைய திருமேனியிலே கநகரசநாதி திவ்ய பூஷணங்களும் சேர்ந்திருப்பது பரம சோபாவஹமாயிராநின்றதென்கிறார்.

[ஜநார்தநஜீவிகே!] இவள் *ஊர்த்வம் மாஸாத் ந ஜீவிஷ்யே* என்றால் அவன் *ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்* என்று சொல்லுகிறவனாகையாலே அப்பெருமானுக்கு ஜீவநாதாரமாயிருப்பவளாயிற்று பிராட்டி. ஆக எம்பெருமானுக்கு ஜீவநௌஷதியாயிருக்கும் ஸ்ரீரங்கநாச்சியாரே! என்றபடி. [ते प्रकृतिमधुरं गात्रं मुग्धविभूषणैर्जागर्ति— ப்ரக்ருதிமதுரம் தே காத்ரம் முக்தவிபூஷணை: ஜாகர்த்தி] இயற்கையாகவே பரம போக்யமான தேவரீருடைய திருமேனியானது பரமஸுந்தரமான திவ்யாபரணங்களாலும் மிகவிளங்காநின்றது. இதற்கு இரண்டு த்ருஷ்டாந்தங்கள் கூறுகிறது நான்காவது பாதம் [दुग्धं वलयशकलैर्यथा, कल्पलता पुष्पैर्यथा — துக்தம் வலயசகலைர் யதா, கல்பலதா புஷ்பைர் யதா] வலயசகலமாவது கற்கண்டு பொடி. 'ப்ரக்ருதிமதுரம்' என்பது திருமேனிக்குமாத்திரம் விசேஷணமாயிருந்தாலும் பாலிலும் கல்பலதையிலுங்கூட விசேஷணமாக அநுஸந்தேயம். இயல்வாகவே மதுரமான பாலிலே கற்கண்டு பொடியும் சேர்த்தால் எப்படி பரமபோக்யமாகிறதோ, இயல்வாகவே தர்சநீயமான கல்பலதையிலே புஷ்பஸம்பத்துமுண்டானால் எப்படி விசேஷ தர்சநீயமாகிறதோ, அப்படியே ப்ரக்ருத்யா பரமபோக்யமான தேவரீருடைய திருமேனியும் திவ்யபூஷணங்களாலே விசேஷ சோபாதிசயம் பெற்று விளங்காநின்றது என்றாராயிற்று.

பூர்வார்த்தத்தாலே அந்த திவ்யாபரணங்கள் ஸங்க்ரஹிக்கப்படுகின்றன; கநகரசநா—ஸ்வர்ணமயமான மேகலை; முக்தாதாடங்கம்—முத்துக்களினாலமைந்த கர்ணபூஷணம். ஹாரம்—முக்தாஹாரம்; லலாடிகா—உச்சிப்பூ அல்லது திலகபூஷணம். மணிஸரம்—ரத்நமாலிகைகள். துலாகோடி—ரத்நநூபுரம். ப்ராயை: என்றது ஆதி சப்தஸ்தாநீயம். ... ... ... ... ... ... ... ... (46)

सामान्यभोग्यमपि कौस्तुभवैजयन्ती-
पञ्चायुधादि रमणः स्वयमेव बिभ्रत् ।
तद्भारखेदमिव ते परिहर्तुकामः
श्रीरङ्गधाममणिमञ्जरि! गाहते त्वाम् ॥४७॥

**ஸாமாந்யபோக்யமபி கௌஸ்துபவைஜயந்தீ பஞ்சாயுதாதி ரமண: ஸ்வயமேவ பிப்ரத்,**
**தத்பாரகேதமிவ தே பரிஹர்த்துகாம: ஸ்ரீரங்கதாமமணிமஞ்ஜரி! காஹதே த்வாம்.** (47)

*** கீழ்ச்லோகத்தில் திருவாபரணங்களைப்பற்றிப் பேசுகையில், கௌஸ்துபம் வநமாலை பஞ்சாயுதம் முதலானவையும் எம்பெருமானுக்குத் திருவாபரணங்களாக விளங்குகையாலே அவையும் நினைவுக்குவர, அவற்றைப்பற்றிச் சொல்லவேண்டிய தொருவார்த்தையை இந்தச்லோகந்தன்னிலே சொல்லுகிறார். [**ஹே ஸ்ரீரங்கதாமமணி மஞ்ஜரி!**] திருவரங்கம் பெரிய கோயிலுக்கு ரத்னமஞ்ஜரிபோலே விளங்காநின்ற ஸ்ரீரங்கநாச்சியாரே!. [**कौस्तुभवैजयन्तीपञ्चायुधादि सामान्यभोग्यमपि**— கௌஸ்துப வைஜயந்தீபஞ்சாயுதாதி ஸாமாந்ய போக்யமபி] *குருமாமணிப்பூண்குலாவித்திகழும் திருமார்பு* என்கிறபடியே எம்பெருமானுடைய திருமார்பிலே திகழும் கௌஸ்துப மணியென்ன, வநமாலை யென்கிற வைஜயந்தியென்ன, *மங்கலவைம்படையும்* என்றும் *அழகிய ஐம்படையும்* என்றும் சொல்லப்படுகிற பஞ்சாயுதங்களென்ன இவை முதலான திவ்யாபரணங்கள், திவ்ய தம்பதிகளிருவரும் பொதுவாக அணிந்து கொள்ளவேண்டியவையாயிருந்தும். [**तद्भारखेदं ते परिहर्तुकाम इव रमणः स्वयमेव बिभ्रत्**— தத்பாரகேதம் தே பரிஹர்த்துகாம இவ ரமண: ஸ்வயமேவ பிப்ரத்] அந்த திவ்யாபரணங்களை தேவரீர் அணிந்துகொண்டால் பரமஸுகுமாரமான திருமேனிக்கு அவை மிகுந்த பாரமாகி வருந்தவேண்டிவருமென்றும் அந்த க்லேசம் தேவரீருக்கு உண்டாகக்கூடாதென்றும் கருதிய மணவாளர் அவற்றைத் தாமே அணிந்துகொண்டவராகி. [**த்வாம் காஹதே**] தேவரீரை யநுபவியாநின்றார்.

ஸந்நிதிகளிலே ஜய விஜயாதி த்வாரபாலகர்களையும் ஸ்ரீஸேநாபதியாழ்வாரையும் சங்கசக்ராதி விபூஷிதர்களாகக்காணாநின்றோம்; இவை பிராட்டிக்குமிருக்கத் தட்டில்லையே. அப்படியிருக்க அவை ஏன் இல்லையென்று சங்கை தோன்றுமைக்குச் சொன்னபடி. கீழே *अथाम्ब! साहसविधौ लीलारविन्दग्रहः— அதாம்ப! ஸாஹஸவிதௌ லீலாரவிந்தக்ரஹ:* என்று; திருக்கையிலே கமலப்பூவேந்தியிருப்பதும் ஸாஹஸமென்றருளிச் செய்தாரிறே. அங்ஙனேயான திருமேனியிலே பஞ்சாயுதாதிதாரணம் பரமஸாஹஸமாகுமிறே. ... ... ... ... (47)

**यदि मनुजतिरश्चां लीलया तुल्यवृत्तेः**
**अनुजनुरनुरूपा देवि! नावातरिष्यः ।**
**असरसमभविष्यन्नर्म नाथस्य मातः!**
**दरदलदरविन्दोदन्तकान्तायताक्षि! ॥४८॥**

**யதி மநுஜதிரச்சாம் லீலயா துல்யவ்ருத்தே:**
**அநுஜநுரநுரூபா தேவி! நாவாதரிஷ்ய:,**
**அஸரஸமபவிஷ்யந்நர்ம நாதஸ்ய மாத:!**
**தரதலதரவிந்தோதந்தகாந்தாயதாக்ஷி!** .... ... .... ... (48)

****ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (9-142.)* ***एवं यदा जगत्स्वामी देवदेवो जनार्दनः । अवतारं करोत्येषा तदा श्रीस्तत्सहायिनी**—*எவம் யதா ஜகத்ஸ்வாமீ தேவதேவோ ஜநார்தந:, அவதாரம் கரோத்யேஷா ததா ஸ்ரீஸ் தத்ஸஹாயிநீ** *என்று, எம்பெருமான் அவதரிக்கும் போதுகளில் அவனுக்குத்துணேவியாகப் பிராட்டியும் வந்து அவதரிக்கிருளென்று சொல்லி,* * **राघवत्वेऽभवत्सीता रुक्मिणी कृष्णजन्मनि । अन्येषु चावतारेषु विष्णोरेषाऽनपायिनी ॥ देवत्वे देवदेहेयं मनुष्यत्वे च मानुषी । विष्णोर्देहानुरूपां वै करोत्येषाऽऽत्मनस्तनूम्**—*ராகவத்வே அபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாநபாயிநீ; தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ் தநூம்** *என்று, எம்பெருமான் சக்ரவர்த்தி திருமகனுகத் திருவவதரித்தபோது பிராட்டிதான் ஜநககுல ஸுந்தரியாகவும், அவன் ஸ்ரீக்ருஷ்ணனுகத் த்ருவவதரித்தபோது இவள் ருக்மிணிப்பிராட்டியாகவும் அவதரிக்கிருளென்றும், அவன் தேவ சரீரமெடுத்தால் இவளும் தேவசரீரமெடுக்கிருளென்றும், அவன் மநுஷ்யசரீர பரிக்ரஹம்பண்ணிஞல் இவளும் மநுஷ்ய சரீர பரிக்ரஹம் பண்ணுகிருளென்றும இப்படி எம்பெருமானுக்குத் தகுந்த திருமேனியைக் கொள்ளுகிருள் பிராட்டியென்று சொல்லிகின்றது. இங்ஙனே எம்பெருமானுடைய திருமேனிக்கும் திருவிளேயாடல்களுக்கும் தகுதியான ரூப சேஷ்டிதங்களேயுடையளாய்க்கொண்டு பிராட்டி திருவவதாரம்பண்ணவேதான் எம்பெருமானுடைய அவதாரங்கள் இனிமைபெறுகின்றன; அவளுங்கூட அவதரியாவிடில் ப்ரஹ்மசாரி நாராயணனுடைய க்ருத்யங்கள் வீறுபெறமாட்டாது. பிராட்டியின் புருஷகாரமடியாகவே எம்பெருமானுடைய ரக்ஷகத்வம் பரிமளிக்கின்றபடியாலே அப்படிப்பட்ட இவளுடைய சேர்த்தி இல்லேயாகில் அவதாரங்கள் பழுதேயாகியொழியும்— என்னுமிவ்வர்த்தத்தை ஏற்கெனவே ஸ்ரீரங்கராஜஸ்தவ — உத்தரசதகத்தில் (49.)* ***அநுஜநுரநுரூப சேஷ்டா*** *என்கிறச்லோகத்தாலே யருளிச்செய்தார்; அங்கு ஸ்ரீரங்கநாதனே ஸம்போதித்து அருளிச்செய்த அவ்வர்த்தந்தன்னேயே இங்கு ஸ்ரீரங்கநாச்சியாரை ஸம்போதித்து அருளிச்செய்கிருராயிற்று.*

**தரதளத் அரவிந்த உதந்த காந்த ஆயதாக்ஷி!**— '*இது ஸ்ரீரங்கநாச்சியாரை ஸம்போதிக்கிறபடி. சிறிதலர்ந்த தாமரைப்பூவின் செய்திபோலே அழகிய நீண்ட திருக்கண்களேயுடையவளே! என்றபடி.* **மாத:!** *அகில ஜகந்மாதாவானவளே!.* [**லீலயா மநுஜதிரச்சாம் துல்யவ்ருத்தே: நாதஸ்ய அநுஜநு: அநுரூபா நாவாதரிஷ்யோ யதி**]

கருமத்தாலன்றிக்கே ஸ்வேச்சையினாலே மனிதர்களுக்கும் திர்யக்குக்களுக்கும் ஒத்திருக்கின்ற வ்ருத்தியையுடைய நாதனுக்கு அவதாரங்கள் தோறும் அநுரூபையாய்க் கொண்டு அவதாரம் செய்திலீராகில். [தஸ்ய நாதஸ்ய நர்ம அஸாரணம் அபவிஷ்யத்] அப்பெருமானுடைய லீலையெல்லாம் விரஸமாகியொழியுமத்தனை. இது விபவாவதாரத்தை மாத்திரமுத்தேசித்துச் சொல்லுகிறதன்று; அர்ச்சையிலும் ஸ்ரீரங்கநாதனுக்கேற்ப ஸ்ரீரங்கநாயகியாகக் கோயில்கொண்டெழுந்தருளியிராவிடில் ரஸமின்றிக்கேயொழியுமென்று இதைச் சொல்லுவதிலே பர்யவஸாநமாகக்கடவது. ... ... (48)

स्खलितकटकमाल्यैर्दोर्भिरब्धिं मुरारेः
भगवति! दधिमाथं मथ्नतः श्रान्तिशान्त्यै ।
भ्रमदमृततरङ्गावर्ततः प्रादुरासीः
स्मितनयनसुधाभिस्सिञ्चती चन्द्रिकेव ॥४९॥

ஸ்கலிதகடகமால்யைர் தோர்ப்பிரப்திம் முராரே:
பகவதி! ததிமாதம் மத்நத: ச்ராந்திசாந்த்யை,
ப்ரமதம்ருததரங்காவர்த்தத: ப்ராதுராஸீ:
ஸ்மிதநயநஸுதாபிஸ் ஸிஞ்சதீ சந்த்ரிகேவ. ... ... ... .... (49)



✻✻✻"விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே!" என்று திருமங்கையாழ்வாரால் பேசப்பட்டபெருமான் அமரர்களுக்கு அமுதமளிக்கக் கடல்கடைந்தகாலத்து அந்த ச்ரமத்தைக்கண்டு ஸஹிக்கமாட்டாத பிராட்டி, இந்த மஹத்தான பரிச்ரமம் ஒருவாறு ஸபலமாகட்டுமென்று திருவுள்ளம்பற்றி அக்கடலில் நின்று தானே தோன்றித் திருமார்பிலேயணைந்தபடியையருளிச் செய்கிறாரிதில். ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் ✻உந்மூல்யாஹர மந்தராத்ரிமஹிநா ..... பலேக்ரஹிர் ஹி கமலாலாபேந ஸர்வச் ச்ரம: ✻ என்கிறச்லோகத்தினால் ஸ்ரீரங்கநாதனை நோக்கிப் பணித்த விஷயத்தை இந்தச்லோகத்தினால் ஸ்ரீரங்கநாச்சியார்தம்மையே நோக்கிப் பணிக்கிறாராயிற்று.

[ஹே பகவதி!] ஷாட்குண்யபரிபூர்ணையான ஸ்ரீரங்கநாயகியே!. [स्खलितकटकमाल्यैर्दोर्भिः अब्धिं दधिमाथं मथ्नतः मुरारेः श्रान्तिशान्त्यै— ஸ்கலித கடகமால்யைர் தோர்ப்பி: அப்திம் ததிமாதம் மத்நத: முராரே: ச்ராந்திசாந்த்யை] கடல் கடைந்தருளுகிறபோது தோள்வளைகளும் தோளில்மாலைகளும் நழுவிப்போனதாகவருளிச் செய்கிறார்—அவ்வளவு ஆயாஸம்கண்டபடி. ஸமுத்ரமதநமென்பது எம்பெருமானுக்கு அநாயாஸஸாத்யமாகவேயிருந்ததாகிலும் மங்களாசாஸநபரத்வத்துக்கு அடியான பரிவின்மிகுதியாலே இங்ஙனே பணித்தபடி. [ததிமாதம் மத்நத:] என்று தயிர்கடைந்தாற்போலே கடைந்ததாகச் சொன்னவிதனால் அநாயாஸக்ருதமென்பதும் காட்டப்பட்டதாயிற்று. ஆகவிப்படி கடையாநின்ற எம்பெருமானுடைய விடாய்தீருகைக்காக.

[भ्रमदमृततरङ्गावर्ततः प्रादुरासीः—ப்ரமத்அம்ருததரங்க ஆவர்த்தத: ப்ராதுராஸீ:] சுழலாநின்ற அமுத அலைகளின் சுழியில் நின்றும் தோன்றினீர். தோன்றினபடி தானெங்ஙனே யென்னில்; [स्मितनयनसुधाभिः सिञ्चती चन्द्रिकेव— ஸ்மிதநயநஸுதாபி:

ஸிஞ்சதி சந்த்ரிகா இவ] ஸ்மிதமானது புன்சிரிப்பு; ஸமாபதம் அவலோகபர்யந்த வாசகம். புன்சிரிப்போடு கடாக்ஷிப்பதாகிற அம்ருதவெள்ளத்தைப் பொழிந்துகொண்டு நிலாத்தோன்றுமாபோலே தோன்றினீரென்கை. கீழ் "ஸாமாந்யபோக்யம்" என்கிற ச்லோகத்திலே இவளுடைய பரிச்ரமத்தை அவர் போக்கினபடி சொல்லிற்று; இதிலே அவருடைய பரிச்ரமத்தை இவள் போக்கினபடி சொல்லிற்று. இவற்றால் திவ்ய தம்பதிகள் பரஸ்பரம் பரிவு கொண்டிருக்கும் பரிசு சொல்லிற்றாயிற்று. (49)

**मातर्मैथिलि! राक्षसीस्त्वयि तदैवार्द्रापराधास्त्वया**
**रक्षन्त्या पवनात्मजाल्लघुतरा रामस्य गोष्ठी कृता ।**
**काकं तं च विभीषणं शरणमित्युक्तिक्षमौ रक्षतः**
**सा नस्सान्द्रमहागसस्सुखयतु क्षान्तिस्तवाकस्मिकी ॥५०॥**

**மாதர் மைதிலி! ராக்ஷஸீஸ் த்வயி ததைவார்த்ராபராதாஸ் த்வயா**
**ரக்ஷந்த்யா பவநாத்மஜாத் லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா,**
**காகம் தஞ்ச விபீஷணம் சரணமித்யுக்திக்ஷமௌ ரக்ஷத:**
**ஸா நஸ் ஸாந்த்ரமஹாகஸஸ் ஸுகயது க்ஷாந்திஸ் தவாகஸ்மிகீ.** ... ... (50)

***பிராட்டியினுடைய க்ஷமாகுணத்திற்கும் பெருமாளுடைய க்ஷமாகுணத்திற்கும் பர்வதபரமாணுவோட்டைவாசிபோருமென்றருளிச்செய்து, அப்படிப்பட்ட க்ஷமாகுணம் தம்மேலும் ஏறிப்பாய வேணுமென்கிறாரிதில். [**शरणमित्युक्तिक्षमौ काकं विभीषणं च रक्षतो रामस्य गोष्ठी मातर्मैथिलि! त्वया लघुतरा कृता**— சரணமிதி உக்திக்ஷமௌ காகம் விபீஷணஞ்ச ரக்ஷத: ராமஸ்ய கோஷ்டீ, மாத: மைதிலி! த்வயா லகுதரா க்ருதா] பண்டு ஸீதாவதாரம் செய்தருளின தாயாரே! ஸ்ரீரங்கநாச்சியாரே! காகனையும் விபீஷணனையும சரணாகதர்களென்கிற காரணத்தையிட்டுக் காத்தருளின பெருமாளுடைய திருவோலக்கமானது நிர்வ்யாஜ ரக்ஷண தக்ஷிணையான தேவரீரால் மிகவும் லகுவாகச் செய்யப்பட்டது. "ராம: லகுதர: க்ருத:" என்னாதே "ராமஸ்ய கோஷ்டீ லகுதரா க்ருதா" என்றருளிச் செய்தது உக்திசமத்காரம். கருத்து அதுதான். ஆஸுரப்ரக்ருதியான ஜயந்தன் காகரூபத்தைக்கொண்டு வந்து பிராட்டி பக்கலிலே அக்ருத்ய ப்ரவ்ருத்தனாக, பெருமாள் அவன் மேலே சிறித் தலையையறுப்பதாக ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்க, *த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:* என்கிறபடியே எங்கும்புக்குச் சுற்றித் திரிந்தவிடத்திலும் ஒரு புகலிடமுமில்லாமையாலே போக்கற்று, புறப்பட்ட அவ்விடத்திற்கே வந்து சேர்ந்து சரணாகதனாக அவனை ரக்ஷித்தது ஒரு சரிதை; விபீஷணாழ்வான் ராவணனுக்குப் பலவாறு ஹிதோபதேசங்கள் பண்ணியும் அது பலியாததோடு *த்வாம் து திக் குலபாம்ஸநம்* என்று அத்தலையில் கர்ஹிக்கவும் பெற்று அங்குத் தரிப்பில்லாமையாலே சடக்கெனப் புறப்பட்டு வந்து *த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத:* என்று சரணாகதி செய்ய அபயமளித்து அவனை ரக்ஷித்தது மற்றொரு சரிதை. இங்ஙனேயாகப் பெருமாள் செய்த ரக்ஷணங்களில் ஒரு வியப்புமில்லையே. இனி, பிராட்டி செய்த ரக்ஷணத்தைப் பாரீர்; தேவமாதர்களின் சிறையை விடுவிக்கைக்காக இவள்தான் சிறையிருக்கிற விருப்பிலே தன்னை அல்லும் பகலும் தர்ஜநபர்த்ஸநம்பண்ணி அருவித்

இன்ற க்ரூரராக்ஷஸிகள், ராவணன் பராஜிதனுகவும் பெருமாள் விஜயியாகவும் த்ரிஜடை கனுக்கண்டதனாலே மிகவும் அஞ்சி நடுங்குகிற தசையிலே *பவேயம் சரணம் ஹி வ:* என்று, நீங்கள் நோவுபடும் ஸமயத்துக்கு நானிருந்தேனே, நீங்கள் அஞ்சவேண்டா வென்று அபயப்ரதானம் பண்ணி அது உக்திமாத்ரமாய்ப் போகாமே, ராவணவதாநந்தரம் தனக்கு சோபநம் சொல்லவந்த திருவடி 'இவர்களை சித்ரவதம்பண்ணும்படி காட்டித்தரவேணும்' என்ன, அவனோடே மன்றாடி *ராஜஸம்ச்ரயவச்யாநாம்* இத்யாதியாலே அவர்களது குற்றங்களை நற்றமாகவுபபாதித்தும், *மர்ஷயாமீஹ துர்பலா* என்று பிறர்நோவுகண்டு பொறுத்திருக்கத்தக்க நெஞ்சுரம் தனக்கு இல்லாமையை முன்னிட்டும் * கார்யம் கருணமார்யேண ந கச்சிந் நாபராத்யதி * என்று, அவனுக்கும் இரங்கியல்லது நிற்கவொண்ணாதபடி உபதேசித்தும் இப்படி ஒருநிலை நின்று ஆர்த்ராபராதைகளானவவர்களையுமன்றோ ரக்ஷித்தது. இப்படிப்பட்ட ரக்ஷணம் பெருமாள் பக்கலிலே தேடிப்பிடிக்கவுமொண்ணாதிறே. ஆகையாலே [त्वयि तदैव आर्द्रापराधाः राक्षसीः पवनात्मजात् रक्षन्त्या त्वया......रामस्य गोष्ठी लघुतरा कृता— த்வயி ததைவ ஆர்த்ராபராதா: ராக்ஷஸீ: பவநாத்மஜாத் ரக்ஷந்த்யா த்வயா......ராமஸ்ய கோஷ்டீ லகுதரா க்ருதா] என்றருளிச்செய்ததிது ஸம்ப்ரதிபந்நமே. ஆர்த்ராபராதா: என்றது பிராட்டி திருவடியோடு மன்றாடுகிற ஸமயத்திலுங்கூட ராக்ஷஸிகள் ராவணன் பட்டுப்போனமையறியாமே ஹிம்ஸித்துக்கொண்டிருந்தமையைக் காட்டும்.

ஆக இவ்வளவாலும் பிராட்டியின் ப்ரக்ருதிஸித்தமான அவ்யாஜக்ஷமாவைபவத்தைப்பேசி, இப்படி அபராதிகளைத் தேடித்திரிகிற அந்த க்ஷமாகுணத்திற்கு அந்த ராக்ஷஸிகளிற்காட்டிலும் விஞ்சின மஹாபராதிகளான தம்போல்வாரிடத்திலே ப்ரவேசமுண்டாகவேணுமென்று பிரார்த்தித்துத் தலைக்கட்டினாராயிற்று. ... ... (50)

मातर्लक्ष्मि! यथैव मैथिलजनस्तेनाध्वना ते वयं
त्वद्दास्यैकरसाभिमानसुभगैर्भावैरिहामुत्र च ।
जामाता दयितस्तवेति भवतीसम्बन्धदृष्ट्या हरिं
पश्येम प्रतियाम याम च परीचारान् प्रहृष्येम च ॥५१॥

மாதர் லக்ஷ்மி! யதைவ மைதிலஜநஸ் தேநாத்வநா தே வயம்
த்வத்தாஸ்யைகரஸாபிமாநஸுபகைர் பாவைரிஹாமுத்ர ச,
ஜாமாதா தயிதஸ் தவேதி பவதீஸம்பந்த த்ருஷ்ட்யா ஹரிம்
பச்யேம ப்ரதியாம யாம ச பரிசாராந் ப்ரஹ்ருஷ்யேம ச. ... ... ... (51)

***பெருமாளைக்காட்டிலும் பிராட்டியே கருணையில் மிகச்சிறந்தவளென்று மூதலித்தார் கீழ்ச்லோகத்தில். இந்த ப்ரஸங்கத்திலே ஒன்று அவச்ய வக்தவ்யமாயிற்று; அதாவதென்னென்னில், இப்படி கருணையிற்சிறந்தவளான பிராட்டியிருக்க வணங்குவது துதிப்பது வழிபாடு செய்வது முதலான கிஞ்சித்காரங்களெல்லாம் இவள் திறத்திலேயே செய்யத்தக்கதாயிருக்க, பெரும்பாலும் எம்பெருமான் திறத்தில் அவை செய்யப்படுகின்றனவே, அது பொருந்துமோவென்று ஒரு சங்கையுண்டாகுமே; அதற்குப் பரிஹாரம் செய்யவேண்டுவதொன்றுண்டே; அது செய்கிறது இதில். எம்பெருமானை உத்தேச்யமாகக்கொள்வது பிராட்டியின் ஸம்பந்தத்தையிட்டேயல்லது

ஸ்வதந்த்ரனாகவன்று; ஆகவே பெருமாளை ஸேவிப்பதும், பலவழிபாடுகள் செய்து மகிழ்வதுமாகிய செயல்கள் பொருந்தத் தட்டில்லையென்றனர்.

[மாதர் லக்ஷ்மி!] தாயே! பெரியபிராட்டியாரே!. [मैथिलजनः यथा (रामं) जामातेति तव दयित इति च भवतीसंबन्धदृष्ट्या अपश्यन्, तेनाध्वना वयं हरिं भवतीसंबन्धदृष्ट्या पश्येम— மைதிலஜந: யதா (ராமம்) ஜாமாதேதி தவ தயித இதி ச பவதீஸம்பந்தத்ருஷ்ட்யா அபச்யந், தேந அத்வநா வயம் ஹரிம் பவதீஸம்பந்தத்ருஷ்ட்யா பச்யேம] ஸீதா பிராட்டியையே உகந்திருந்த மிதிலாவாஸி ஜனங்கள் ஸீதாவிவாஹஸமநந்தரம் இராம பிரானையும் உகக்கத் தொடங்கினார்கள்; ஆனால், தசரதாத்மஜனென்றோ கௌஸல்யாநந்தநனென்றோ உகந்தார்களல்லர்; பின்னையோவென்னில், நம்ஸீதையின் கணவன் என்றும், ஸீதாபித்ரவான ஜநகச்க்ரவர்த்தியின் மருமகனென்றும் இங்ஙனே ஸீதா ஸம்பந்தத்தையிட்டே உகந்தார்கள்; அதுபோல நாங்களும் ஸ்ரீரங்கநாதனை ச்ரிய: பதியென்றும் அழகிய மணவாளனென்றும் உம்முடைய ஸம்பந்தத்தையிட்டே உகப்புதோம். உகப்பதுமாத்திரமன்றிக்கே, அவரையே ஸதா தர்சநம் பண்ணுவதும், அவர் திருவடிகளிலே சரணம்புகுவதும், அவர்க்கு அடிமைத்தொழில்கள் செய்வதுமாயிருப்போம். இது விருத்தமாகாது. ஏனென்னில் [त्वद्दास्यैकरसाभिमानसुभगैर्भावैः— த்வத்தாஸ்யைகரஸாபிமாநஸுபகை: பாவை:] உமக்கொருத்திக்கே கைங்கர்யம் செய்யவேணுமென்கிற விருப்பந்தான் எமக்குள்ளது; அந்த பாவபந்தத்தில் ஒரு குறையில்லை. உம்முடைய ஸம்பந்தமுள்ளவிடத்திலே கிஞ்சித்கரித்தாலும் அது உமக்கே கிஞ்சித்கரித்ததாகக் குறையில்லையிறே. இதுதான் இங்கிலத்தில் மாத்திரமேயன்று, [இஹ அமுத்ர ச] லீலாவிபூதியோடு நித்யவிபூதியோடு வாசியற உபயவிபூதியிலும் இங்ஙனேயாயிற்று.

மிதிலாவாஸி ஜனங்களுக்குப் பெருமாள் பக்கலில் 'ஸீதாபதி:, ஜநகஜாமாதா' என்று இரண்டு வழியாலே உத்தேச்யதை யுண்டானாப்போலே. பெரியபெருமாள் பக்கலிலும் ப்ரபந்நர்களான நமக்கு 'ச்ரிய: பதி:, விஷ்ணுசித்த ஜாமாதா' என்று இரண்டுவழியாலே உத்தேச்யதையுண்டாகக் குறையில்லையென்று உணர்க.

ப்ரதியாம என்றது சரணமடைவோம் என்றபடி. [யாம ச பரிசாராந்] 'பரிசாராந் யாம ச' என்று யோஜிப்பது; கிங்கரவ்ருத்திகளை பஜிக்கக்கடவோமென்கை. ப்ரஹ்ருஷ்யேம—இவற்றாலே ஆனந்த சாலிகளாகக்கடவோமென்றபடி. ... (51)

पितेव त्वत्प्रेयान् जननि! परिपूर्णागसि जने
हितः स्रोतोवृत्त्या भवति च कदाचित् कलुषधीः।
किमेतन्निर्दोषः क इह जगतीति त्वमुचितैः
उपायैर्विस्मार्य स्वजनयसि माता तदसि नः ॥५२॥

பிதேவ த்வத்ப்ரேயாந் ஜநநி! பரிபூர்ணாகஸி ஜநே
ஹித: ஸ்ரோதோவ்ருத்த்யா பவதி ச கதாசித் கலுஷதீ:
கிமேதந் நிர்தோஷ: க இஹ ஜகதீதி த்வமுசிதை:
உபாயைர் விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா ததஸி ந: ... .... .... (52)

seek intervention of you

***எம்பெருமானுடைய நாராயணத்வப்ரயுக்தமான ஸ்வாபாவிகஸம்பந்தாதிகளையறிந்து அவனையடிபணியக் கடமைப்பட்டிருக்கும் சேதநனுக்கு பிராட்டியைப்புருஷகாரமாக முன்னிடவேண்டுவது அவச்யமோவென்று சிலர் கலங்கிப் பேசுவதுண்டு; அதற்குச் சொல்லவேண்டுமது சொல்லுகிறது இந்த ச்லோகத்தில். உலகுக்கு எம்பெருமான பிதாவென்றும் இவள் மாதாவென்றுமிறே பேர்பெற்றிருப்பது. உலகில் பிதா ஹிதபரனாகையாலே தண்டிப்பதில் ப்ரவர்த்திப்பதுமுண்டு; மாதாவானவள் * தந்தம் மக்களழுது சென்றால் தாய்மாராவார் தரிக்கில்லார் * (பெரியாழ்வார் 2-2-3) என்கிறபடியே 'பெற்றமனம் பித்து' என்னும்படியான அந்த ஸம்பந்தமடியாக ப்ரஜைகளின் க்லேசங்கண்டால் ஸஹிக்கமாட்டாள். எம்பெருமான் ஸர்வபூத ஸுஹ்ருத்தென்று பேர் பெற்றவனாகையாலே அவனுடைய திருவுள்ளம் ப்ரஸந்நமாய்க் குளிர்ந்திருந்ததேயாகிலும் சேதநன் தீரக்கழியப்பண்ணின அபராதமடியாக *க்ஷிபாமி * ந க்ஷமாமி * என்னும்படியான சீற்றம் அந்தத் திருவுள்ளத்திலே பிறப்பதுண்டு; அதுதான் ஹிதபரத்வமடியாக வுண்டாகிறதாகையாலே கொத்தையாகாது. அப்படி சீற்றம்பிறந்தால் அதனையாற்றுவதற்குப் பிராட்டியின் புருஷகாரம் அவச்யாபேக்ஷிதமாகும். அச்சீற்றந்தன்னை இவள் ஆற்றுவது எங்ஙனே யென்னில்;

எம்பெருமான் சீறியிருக்குமளவிலே 'இச் சீற்றத்துக்கு அடி என்?' என்று கேட்பள். 'இது என்னைக் கேட்டறியவேணுமோ? இவன் அளவுகடந்துபண்ணின அபராதமறியாயோ?' என்பனெம்பெருமான். அதற்குப் பிராட்டி 'மணல் சோற்றிலே கல்லாராய்வதுமுண்டோ? இந்த ஜகத்திலே அபராத மற்றிருப்பாரார்? இவனுடைய அபராதங்களைக் கணக்கிட்டு நீர் சீறித் தள்ளினீராகில் இவனுக்கு வேறொரு புகலுண்டோ? உமக்கும் இவனுக்குமுண்டான ஸம்பந்த விசேஷத்தைப்பார்த்தால் * உறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது * என்கிறபடியே குடநீர்வழித்தாலும் போகாத தொன்றன்றோ? ஸ்வம்மான விவனைலபிக்கை ஸ்வாமியானவும்முடைய பேறன்றோவிருப்பது. * எதிர் சூழல்புக்குத் திரிகிறவுமக்கு நான் சொல்லவேணுமோ? ரக்ஷணஸாபேக்ஷனாய் வந்தவிவனை ரக்ஷியாதபோது உம்முடைய ஸர்வரக்ஷகத்வம் ஜீவிக்குமோ?' என்பள். அதற்குமேல் எம்பெருமான் 'அநாதிகாலம் நம்முடைய ஆஜ்ஞாதிலங்கனம் பண்ணி நம்முடைய சீற்றத்துக்கு இலக்காய்நின்றவிவனை அபராதங்களுக்குத் தக்கபடி தண்டியாதே பொறுத்து அங்கீகரித்தோமாகில் சாஸ்த்ரமர்யாதை குலையாதோ?' என்பன். அதற்குப் பிராட்டி 'இவனை ரக்ஷியாதே அபராதங்களுக்குத் தக்கபடி தண்டித்தால் உம்முடை கருணை முதலான குணங்கள் ஜீவிக்கும்படியென்? இவனை ரக்ஷித்தாலன்றோ அவை ஜீவிக்கும்' என்பள். இது கேட்ட எம்பெருமான் 'இவனை தண்டியா விடில் சாஸ்த்ரமர்யாதை ஜீவியாது; ரக்ஷியாவிடில் கருணாதிகுணங்கள் ஜீவியாது; என் செய்வோம்!' என்று தடுமாறி நிற்பன்; அப்போது பிராட்டி 'வாரீர்! சாஸ்த்ரமர்யாதையும் குலையாமே உம்முடைய கருணாதிகளும் பழுதுபடாமேயிருக்க உபாயம் சொல்லுகிறேன் கேளீர்; அளவுகடந்த குற்றங்களைச் செய்தும் உம்மருகே வாராமே விமுகராய்ப் போவார்திறத்திலே சாஸ்த்ரமர்யாதையை நடத்தும்; அநுதபித்து அபிமுகரானவர்கள் திறத்திலே கருணாதிகுணங்களைப் பெருகவிடும்; இப்படியாகில் இரண்டும் ஜீவித்ததாகிறது' என்று உபாயம் சொல்லித்தருவள். அப்போது எம்பெருமான் ஓமென்று இசையக் கூடும்; நிரங்குசஸ்வாதந்த்ரியமிருக்கையாலே அது அடியாக 'போ, உனக்குப் பணியன்றோவிது' என்று உபதேசத்தை உத

றித் தள்ளவுங்கூடும். அப்படிப்பட்ட ஸமயத்திலே * அல்லிமலர்மகள் போக மயக்குகளாகியும் நிற்குமம்மாவென்றும் * பித்தர்பனிமலர்மேல் பாவைக்கு * என்றும் ஆழ்வார்கள் நிலைகண்டறிந்த அவனை வசீகரிப்பதற்குக் கண்ணைப்புரட்டுதல் கச்சை நெகிழ்த்தல் செய்து தன்னழகாலே அவனைப் பிச்சேற்றி, தான் சொன்னபடி செய்தல்லது நிற்கமாட்டாதபடி பண்ணி அங்கீகாரோந்முகனாக்கிவிடுவள். இவ்விஷயங்களை யெல்லாம் இந்த ச்லோகத்திலே பதியவைத்திருக்கிறாராயிற்று பரமரஸிகரான பட்டர். ஸ்ரீவசநபூஷணத்திலே (13) "உபதேசத்தாலே மீளாதபோது சேதநனை அருளாலே திருத்தும், ஈச்வரனை அழகாலே திருத்தும்" என்றதும் அவ்விடத்து வியாக்யான ஸ்ரீஸூக்திகளும் ஸேவிப்பது.

[ஹேஜநநி!] இந்த ச்லோகத்தில் சொல்லுகிற அர்த்தங்களுக்கு உயிரான ஸம்போதநமிது. [த்வத்ப்ரேயாந்] உம்முடைய பரமப்ரீதிபாத்ரமான எம்பெருமானென்கை. [பரிபூர்ணாகஸி ஜநே] நிரம்பின அபராதங்களையுடைய ஆச்ரித ஜனத்தினிடத்தில். [ஹிதஸ்ரோதோ வ்ருத்த்யா பிதேவ கதாசித் கலுஷதீ: பவதி.] வரங்கிடந்து நோன்புகள் நோற்றுப் பெற்ற பிள்ளையையும் ஹிதபரத்வபரீவாஹரூபமாக தண்டிக்கிற தந்தைபோன்று சில ஸமயங்களிலே திருவுள்ளங்கலங்கிச் சீறிச் சிவப்பது முண்டு; அப்படிப்பட்ட ஸமயத்திலே, த்வம்—தேவரீர், செய்வதென்னென்னில்; [கிமேதத்? இஹ ஜகதி நிர் தோஷ: க:? இதி]. என்ன இது குற்றம் காண்பதுமுண்டோ? இவ்வுலகில் குற்றம் செய்யாதாருளரோ? என்று சொல்லிச் சிலவுபதேசங்கள் செய்கிறீர். அதற்கு இசைந்து வாராவிடில் [உசிதைருபாயை: விஸ்மார்ய ஸ்வஜநயஸி] ஈழே பண்ணின உபதேசங்களும் உசிதோபாய சப்தவாச்யமே; ஆனாலும் முக்கியமாக பகவத்வசீகாரஸாதநமான ச்ருங்கார சேஷ்டித விலாஸ விசேஷ ப்ரதர்சநமே இங்குப் பொருளாகக்கடவது. இப்படி உபதேசங்களைச் செய்தும் வடிவழகைக் காட்டியும் மணவாளனை வசப்படுத்திக் குற்றங்களை மறப்பித்தருளுகிறீராகையாலே [ந: மாதா அஸி] எமக்கு நிருபாதிக ஜநநியாகிறீர்.

"ஹிதஸ்ரோதோவ்ருத்த்யா" என்றவிடத்திலே, "சிலரை ஸுகிகளாகவும் சிலரை து:க்கிகளாகவும் ஸ்ருஷ்டித்தால் ஈச்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் வாராதோவென்னில்; கர்மமடியாகச் செய்கையாலும், மண் தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனாய்ச் செய்கையாலும் வாராது." என்கிற தத்வத்ரய ஸ்ரீஸூக்தியில் பிற்பகுதி நினைக்கத்தக்கது ... (52)

नेतुर्नित्यसहायिनी जननि! नस्त्रातुं त्वमत्रागता
लोके त्वन्महिमावबोधबधिरे प्राप्ता विमर्दं बहु!।
क्लिष्टं ग्रावसु मालतीमृदुपदं विश्लिष्य वासो वने
जातो धिक्करुणां धिगस्तु युवयोः स्वातन्त्र्यमत्यङ्कुशम् ॥५३॥

நேதுர் நித்யஸஹாயிநீ ஜநநி! நஸ் த்ராதும் த்வமத்ராகதா
லோகே த்வந்மஹிமாவபோதபதிரே ப்ராப்தா விமர்தம் பஹு,
க்லிஷ்டம் க்ராவஸு மாலதீம்ருது பதம் விச்லிஷ்ய வாஸோ வநே
ஜாதோ திக் கருணாம் திகஸ்து யுவயோஸ் ஸ்வாதந்த்ர்யமத்யங்குசம். .... (53)

***கீழே (48) *யதி மநுஜதிரச்சாம்லீலயா* என்கிற ச்லோகத்திலே எம்பெருமானுடைய அவதாரங்கள்தோறும் பிராட்டியும் கூடவே அவதரிக்கிறபடியைப்பேசி அப்படி ஸஹாவதாரம் செய்யாவிடில் வைரஸ்யமேயாகுமென்றருளிச்செய்தாரே; அதை ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே கடாக்ஷித்து, ராமாவதாரத்திலே திவ்ய தம்பதிகளுக்கு நேர்ந்த க்லேசாதிசயங்களை யநுஸந்தித்து இப்படிப்பட்ட அவதாரம் இனியொருகாலும் நேரவேண்டாவென்கிற திருவுள்ளம் தோற்றவருளிச் செய்கிறாரிதில்.

[ஹே ஜநநி!] வாரீர் தாயாரே!; [ந: த்ராதும் அத்ர ஆகதா த்வம்] எம்போன்ற ஸம்ஸாரி சேதநர்களைக் காத்தருள்வதற்காக இந்நிலத்திலே வந்தவதரித்த தேவரீர்-எப்படியவதரித்தீரென்னில்; [நேது: நித்யஸஹாயிநீ ஸதீ] நாயகனான எம்பெருமானுக்கு நித்யஸஹசாரிணியாய்க்கொண்டு அவதரித்தீர். எப்படிப்பட்ட இடத்திலே அவதரித்தீரென்னில்; [த்வந்மஹிமாவபோதபதிரே லோகே] உம்முடைய பெருமையை எடுத்துரைத்தாலும் கேட்கச் செவியில் துளையில்லாத லோகத்திலேயாயிற்று வந்தவதரித்தது. அவதரித்துச் செய்ததென்னென்னில்; [ப்ராப்தா விமர்தம் பஹு] *நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய்* என்கிறபடியே கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாத க்லேசங்களைப்பட்டீர். அந்த க்லேசந்தானென்னென்னில்; [மாலதீம்ருது பதம் க்ராவஸு க்லிஷ்டம்] மாலதீபுஷ்பத்திற்காட்டிலும் ஸுகுமாரமான திருவடியானது வெம்பரல்களிலே நடந்துவருந்திற்று. *நெய்வாய வேல்நெடுங்கண்ணேரிழையுமிளங்கோவும் பின்புபோக எவ்வாறு நடந்தனை யெம்மிராமாவோ!* என்றும், *மெல்லணைமேல் முன்துயின்றாய் இன்றினிப்போய் வியன்கானமரத்தினீழல் கல்லணைமேல் கண்துயிலக்கற்றனையோ காகுத்தா கரிய கோவே!* என்றும், *பொருந்தார்கைவேல் நுதிபோல் பரல்பாய மெல்லடிக்கள் குருதிசோர, விரும்பாத கான் விரும்பி வெயிலுறைப்ப வெம்பசிநோய்கூர, இன்று பெரும்பாவியேன் மகனே! போகின்றாய்!* என்றும் சக்ரவர்த்தி புலம்பும்படி கானகமே நடந்த மன்னனிராமன் பின் நடந்தவளாகையாலே அவனுடைய திருவடிகள் பட்ட க்லேசமெல்லாம் இவளுடைய திருவடியும் பட்டதிறே. எத்தனை க்லேசங்கள் பட்டாலும் *அகலகில்லேனிறையுமென்ற ப்ரதிஜ்ஞையின்படி அகலாதேதான் இருக்கப்பெற்றதோ? [விச்லிஷ்ய வதே வாஸோ ஜாத:] பத்துமாஸம் பிரிந்து அசோகவனத்திலன்றோ ஏகாக்ஷி ஏககர்ணி முதலான எழு நூறு ராக்ஷஸிகளினிடையே *स्वगणेन मृगीं हीनां श्वगणेनावृतामिव* என்று துடிக்கும்படி வாழ்ந்தது.

இப்படி நித்யஸம்ச்லேஷத்தைவிட்டு விச்லேஷித்தது எதற்காகவென்று விமர்சிக்குமளவில், "பிராட்டி முற்படப்பிரிந்தது தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக" (ஸ்ரீவசந பூஷணம்—8.) என்று கருணையை வெளியிடுவதற்காகவென்று சொல்லுவாரும், ஸ்வாதந்த்ர்யத்தாலே செய்த செய்கையில் ஆராய்ச்சியென்ன? என்பாருமாய் இராநின்றார்கள்; அந்தோ! இக்குணங்களையறிந்து உகப்பாருண்டாகில் அழகியதே; "த்வந்மஹிமாவபோதபதிரே லோகே" என்னும்படி குணங்கண்டு உகக்கு மூலகமன்றே இது. இக்கொடியவுலகில் கருணையைக் காட்டுவதற்குப் பிரிகிறேனென்றும் ஸ்வாதந்த்ர்யங்கொண்டாடிப் பிரிகிறேனென்றுஞ் சொல்லிப் பிரிவதானது எம்போல்வார்க்கு ஹாஹாகாரயோக்யமாத்தனை. இப்படிப்பட்ட ஸங்கல்பம் இனியொருகாலும் ஙகவந்க்கு வேண்டாவென்பது கருத்தாறு.

இதில் ஜநகி! என்று பிராட்டியை மாத்திரம் ஸம்போதித்து விஜ்ஞாபித்துக் கொண்டு போந்து சுற்றடியில் யுவயோ: என்று இவ்வளவும் இருவரையும் ப்ரஸ்தாவித்து வெறுத்துரைத்துத் தலைக்கட்டினது. தாயே! உம்முடைய செய்கைமாத்திரமே யன்று, உமது மணவாளருடைய செய்கையும் நன்றன்று என்று வெறுக்கிற கருத்திலேயாயிற்று.

**युवयोः करुणांप्रति धिगस्तु–निन्दा भवतु; स्वातन्त्र्यं प्रतिच निन्दा भवतु ॥** பிராட்டி திறத்திலே கருணையையும் பெருமாள் திறத்திலே ஸ்வாதந்த்ரியத்தையும் யோஜித்து நிர்வஹிப்பது நன்று. ... ... ... ... (53)

**अधिशयितवानब्धिं नाथो ममन्थ बबन्ध तं**
**हरधनुरसौ वल्लीभञ्जं बभञ्ज च मैथिलि ।**
**अपि दशमुखीं लूत्वा रक्षःकबन्धमनर्तयत्**
**किमिव न पतिः कर्ता त्वच्चाटुचुञ्चुमनोरथः ॥५४॥**

What all he did for Sita

**அதிசயிதவாநப்திம் நாதோ மமந்த பபந்த தம்**
**ஹரதநுரஸௌ வல்லீபஞ்ஜம் பபஞ்ஜ ச மைதிலி!,**
**அபி தசமுகீம் லூத்வா ரக்ஷ:கபந்தமநர்த்தயத்**
**கிமிவ ந பதி: கர்த்தா த்வச்சாடுசுஞ்சுமநோரத:** .... ... .... .... (54)



***கீழே (52) **'பிதேவ த்வத்ப்ரேயாந்'** என்ற ச்லோகத்தை மீண்டும் கடாக்ஷித்து அதில் சொன்ன அர்த்தத்திற்கு உபபாதகமாகவருளிச்செய்கிறாரிது. ஆச்ரித ஜந ஸம்ரக்ஷணார்த்தமாக எம்பெருமானை வசீகரிக்கவேண்டும்போது **स्वाधीनपतिकत्वम्** [பர்த்தாவை ஸ்வாதீநமாகவுடைமை] அவச்யாபேக்ஷிதம்; அதுதன்னை விசதீகரிக்கிறது இந்த ச்லோகம். ஸ்தோத்ர ரத்நத்தில் ***तव प्रियं धाम यदीयजन्मभूः यदर्थमम्भोधिरमन्थ्य-बन्धि च** * என்ற இரண்டு பாதங்களை நோக்கி இதில் முதல் பாதமருளிச்செய்கிறார்.

[ஹே மைதிலி] ஸீதாபிராட்டியாகத் திருவவதரித்த ஸ்ரீரங்கநாச்சியாரே! **[असौ नाथः अब्धिम् अधिशयितवान्—** அஸௌ நாத: அப்திம் அதிசயிதவாந்] தேவரீருடைய பிறந்தகமான திருப்பாற்கடலை விட்டுப்பிரியமாட்டாமல் அதுதன்னிலே பள்ளிகொண்டருளாநின்றார் மணவாளர். *மாகடல் நீருள்ளான்* என்கிறபடியே.

[**तं ममन्थ** – தம் மமந்த] * **या वै त्वयाऽप्युदधिमन्थनयत्नलभ्या** * (ஸ்ரீவைகுண்டஸ்தவே] என்கிறபடியே, உம்மைப் பெறுதற்காகவே தம்முடைய சயநஸ்தானமென்றும் பாராதே *ஆழ்கடல்தன்னை மிடைந்திட்டு மந்தரம் மத்தாக நாட்டி வடம் சுற்றி வாசுகி வன்கயிறாகக் கடைந்திட்டார். [**बबन्ध तम्**—பபந்த தம்] *உண்ணாதுறங்கா தொலிகடலையூடறுத்துப் பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்ற பேது* (நாச்சியார் திருமொழி 11-7) என்கிறபடியே உம்மிடத்தில் வ்யாமோஹமுடையவராகவன்றோ அக்கடலில் கற்களையும் மலைகளையுமிட்டு அணை கட்டினார். இவ்வளவேயோ? [**हरधनुः वल्लीभञ्जं बभञ्ज च**— ஹரதநு: வல்லீபஞ்ஜம் பபஞ்ஜ ச] *திக்குநிறை புகழாளன் தீவேள்விச்சென்ற நாள், மிக்கபெருஞ்சபைநடுவே வில்லிறுத்தான் * என்றும், * காந்தள் முகிழ்விரல்

சிதைக்காகிக் கடுஞ்சிலை சென்றிறுக்க * என்றும் சொல்லுகிறபடியே உமக்காக வன்றோ அரனுடைய வில்லை அநாயாஸமாக முறித்தருளினர். இவ்வளவேயோ?

[दशमुखीं लूत्वा रक्षःकबन्धमनर्तयदपि—தசமுகீம் லூத்வா ரக்ஷ:கபந்தம் அநர்த்தயதபி] दशानां मुखानां समाहारः दशमुखी; ताम्—இராவணனுடைய பத்துத்தலைகளையும் அறுக்கவறுக்க முளைத்தெழுந்தபோது அறவேயறுத்தொழித்துப் போர்க்களத்திலே ராக்ஷஸகபந்தத்தைக் கூத்தாடவைத்தார். ஆக இவையெல்லாம் உம்மைப்பெறுதற்காகவன்றோ. [त्वचाटुचुञ्चुमनोरथः पतिः किमिव न कर्ता—த்வச் சாடுசுஞ்சுமநோரத: பதி: கிமிவ ந கர்த்தா] உம்முடையமணவாளர்தாம் உம்மையுகப்பிப்பதொன்றையே பாரித்திருப்பவராகையாலே எதைத்தான் செய்யார். அவர்க்கு துர்க்கட (दुर्घट) மான தொன்றுண்டோ? உமக்கென்று நினைத்தால் எதுவும் செய்யவல்லவரென்றபடி. * यदि रामस्समुद्रान्तां मेदिनीं परिवर्तयेत्। अस्या हेतोर्विशालाक्ष्या युक्तमित्येव मे मतिः॥ * என்று திருவடிசொன்னது இங்கே அநுஸந்தேயம். இந்தச்லோகத்தின் பரிபூர்ண ஹ்ருதயத்தைத் திருவுள்ளம்பற்றியே பிள்ளைலோகாசார்யர் முமுக்ஷுப்படியில் "தன் சொல்வழிவருமவனைப் பொறுப்பிக்கச் சொல்லவேண்டாவிறே." என்றருளிச்செய்தது. ... ... ... ... ... ... ... (54)

What all He did and Avatara He made ... Your Grace



दशशतपाणिपादवदनाक्षिमुखैरखिलैः अपि निजवैश्वरूप्यविभवैरनुरूपगुणैः।
अवतरणैस्तैश्च रसयन् कमिता कमले! क्वचन हि विभ्रमभ्रमिमुखे विनिमज्जति ते॥५५॥

தசசதபாணிபாதவதநாக்ஷிமுகைரகிலை: அபி நிஜவைச்வரூப்யவிபவைரநுரூபகுணை:,
அவதரணைஸ்தைச்ச ரஸயந் கமிதா கமலே! க்வசந ஹி விப்ரமப்ரமிமுகே விநிமஜ்ஜதி தே (55)

***எம்பெருமானுடைய ஸர்வப்ரகாரமான உபபோக ஸாமர்த்தியமும் பிராட்டியினுடைய விலாஸசேஷ்டிதவைதக்த்யத்தின் ஏகதேசத்திலே சுவறிப்போமத்தனையென்கிறாரிதில். ஹேகமலே!—வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே!; தவ கமிதா—தேவரீருடைய வல்லபர்; [दशशतपाणिपादवदनाक्षिमुखैः—தச சதபாணிபாத வதநாக்ஷிமுகை:] * ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: * என்றும் * ஸஹஸ்ரபாஹூதர வக்த்ர நேத்ரம் * என்றும் சொல்லுகிறபடியே ஆயிரக்கணக்கான திருக்கைகள் திருவடிகள் திருமுகங்கள் திருக்கண்கள் முதலான. [அநுரூபகுணை:] தேவரீருக்கு ஏற்றவையான. [அகிலை: நிஜவைச்வரூப்யவிபவை: அபி] தம்முடைய விச்வரூபாதிசயங்களெல்லாவற்றாலும். [அதை: அவதரணைச்ச] மற்றும் அவதாரவிசேஷங்களினாலும். 'அதை:' என்கிறபதம் தச்சப்தரூபத்தின் மேல் நஞ் கூட்டப்பெற்றது. तद्भिन्नैः என்றபடி. சிலர் 'ரதை:' என்று பதம் பிரிப்பர்கள். 'அதை:' என்கிற விபாகமே பெரியார் ஆதரிப்பது. 'அவதரணை:' என்றது அவதாரை: என்றபடி. வாஸுதேவாதி சாதுர்வ்யூஹம், விதிசிவமத்யே விஷ்ணுரூபங்கொள்ளுதல், உபேந்த்ர மத்ஸ்ய கூர்மாதிரூபேண ஜனித்தல்—ஆக இப்படிப்பட்ட பலவகையவதாரங்களினாலே [ரஸயந்] அநுபவியாநின்றவராய் என்றபடி. [ते क्वचन विभ्रमभ्रमिमुखे विनिमज्जति—தே க்வசந விப்ரமப்ரமிமுகே விநிமஜ்ஜதி] பெருங்கடலில் ஒரு திவலைபோலே உம்முடைய விலாஸசேஷ்டிதமாகிற சுழியின் ஏகதேசத்திலே அமிழ்ந்துபோகிறார். ... ... ... (55)

**जननभवनप्रीत्या दुग्धार्णवं बहुमन्यसे जननि! दयितप्रेम्णा पुष्णासि तत् परमं पदम्।**
**उदधिपरमव्योम्नोर्विस्मृत्य मादृशरक्षणक्षममिति धिया भूयः श्रीरङ्गधामनि मोदसे ॥५६॥**

**ஜநநபவநப்ரீத்யா துக்தார்ணவம் பஹுமந்யஸே**
**ஜநநி! தயிதப்ரேம்ணா புஷ்ணாஸி தத் பரமம் பதம்,**
**உததிபரமவ்யோம்நோர் விஸ்ம்ருத்ய மாத்ருசரக்ஷண-**
**க்ஷமமிதி தியா பூயச் ஸ்ரீரங்கதாமநி மோதஸே, .... .... .... (56)**

***பெரிய பிராட்டியார்க்குத் திருப்பாற்கடலிலும் திருநாட்டிலும் உகப்பு இருந்தாலும் திருவரங்கம் பெரிய கோயிலில்தான் மிக்கவுகப்பு என்பதை ஹேதூபந்யாஸபூர்வகமாக அருளிச்செய்கிறாரிதில். [**ஹேஜநநி!**] வாரீர் ஸர்வலோகமாதாவான ஸ்ரீரங்கநாச்சியாரே!; [**துக்தார்ணவம் ஜநநபவநப்ரீத்யா பஹுமந்யஸே**] பிறப்பகமென்னும் ப்ரீதிவிசேஷத்தினாலே திருப்பாற்கடலை உகந்தருளுகின்றீர். உலகில் மாதர்களுக்குப் பிறப்பகத்திலேயும் ஒரு ப்ரீதிவிசேஷமுண்டிறே அந்த மர்யாதைக்குச்சேர க்ஷீரஸாகரகந்யகையான தமக்கு க்ஷீராப்தியிலே ப்ரீதி வர்த்தியாநின்றது. அதற்குமேலே [**தத் பரமம் பதம் தயிதப்ரேம்ணா புஷ்ணாஸி**] *தத் விஷ்ணோ: பரமம் பதம்* என்று ச்ருதிப்ரஸித்தமான திருநாட்டை மணவாளரிடத்துள்ள ப்ரேமவிசேஷத்தினாலே ஆதரியாநின்றீர். மாதர்களுக்குப் புக்ககத்தில் ப்ரீதி ப்ரஸித்தமிறே. ஆகவிப்படி, பிறந்தகத்திலும் புக்ககத்திலும் ப்ரீதிவர்த்தியாநிற்கச்செய்தேயும்; [**உததிபரமவ்யோம்நோர் விஸ்ம்ருத்ய**] பிறந்தகமான திருப்பாற்கடலையும் புக்ககமான ஸ்ரீவைகுண்டத்தையும் மறந்தொழிந்து. [**மாத்ருசரக்ஷணக்ஷமமிதி தியா ஸ்ரீரங்கதாமநி பூய: மோதஸே**] எம்போன்ற ஸம்ஸாரி சேதநர்களைக் காத்தருள்வதற்கு இதுவே பாங்கான விடமென்று திருவுள்ளம் பற்றிக் கோயிலிலே அதிமாத்ரப்ரீதியோடே வர்த்தியாநின்றீர். இத்தால் பெரிய பிராட்டியார்க்கு ஆச்ரிதரக்ஷணத்திலேயே முழுநோக்கு என்பது மூதலிக்கப்பட்டது. ஸ்ரீரங்கராஜஸ்தவ-பூர்வசதகத்தில் (79) "**உததிபரமவ்யோம்நோர் விஸ்ம்ருத்ய**" என்று தொடங்கியுள்ளச்லோகமும் இங்கே நினைக்கத்தக்கது.

***अधीगर्थदयेशां कर्मणीति सूत्रेण उदधिपरमव्योम्नोरिति षष्ठी ॥** ... .... .... (56)

**औदार्यकारुणिकताश्रितवत्सलत्वपूर्वेषु सर्वमतिशायितमत्र मातः!**
**श्रीरङ्गधाम्नि यदुतान्यदुदाहरन्ति सीतावतारमुखमेतदमुष्य योग्या ॥५७॥**

**ஔதார்யகாருணிகதாச்ரிதவத்ஸலத்வபூர்வேஷு ஸர்வமதிசாயிதமத்ர மாத:!,**
**ஸ்ரீரங்கதாம்நி யதுதாந்யதுதாஹரந்தி ஸீதாவதாரமுகமேதமுஷ்ய யோக்யா ... (57)**

***"அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றும் *எங்கின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா* என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் பல திருவவதாரங்கள் செய்தருள்வது போலவே பிராட்டியும் செய்வதுண்டே; அப்படி பல அவதாரங்களுண்டானாலும் ***अर्चावतारविषये मयाऽप्युद्देशतस्तव। उक्ता गुणा न शक्यन्ते वक्तुं वर्षशतैरपि**—அர்ச்சாவதாரவிஷயே மயாப்யுத்தேசதஸ் தவ, உக்தா குணா ந சக்யந்தே வக்தும் வர்ஷசதைரபி * என்கிறபடியே மற்றையவதாரங்களிற் காட்டிலும் ஸ்ரீரங்கநாச்சியாரான இவ்வர்ச்சாவதாரத்தில்தான் ஸகல கல்யாணகுணங்களும் அதிசயிதமா

யிருக்கும்படியை யருளிச்செய்கிறாரிதில். ஹே மாத:! = வாரீர் ஜகஜ்ஜநநியான ஸ்ரீரங்க நாச்சியாரே!. [ஔதார்யகாருணிகதாச்ரிதவத்ஸலத்வபூர்வேஷு (குணேஷு)] ஸர்வஸ்வ தானம் பண்ணுகையாகிற ஔதார்ய மென்ன, பரதுக்காஸஹிஷ்ணுத்வ ரூபமான காருணிகத்வமென்ன, ஆச்ரித தோஷபோக்யத்வமென்ன — ஆக இவை முதலான திருக்குணங்களுக்குள்ளே. [ஸர்வம் அத்ர ஸ்ரீரங்கதாம்நி அதிசாயிதம்] ஒவ்வொரு திருக்குணமும் திருவரங்கம் பெரிய கோயிலிலெழுந்தருளியிருக்குமிவ்விருப்பிலே மிக்க சிறப்புப்பெற்று விளங்காநின்றது.

இங்ஙனே சொல்லும் பக்ஷத்தில், கீழே *மாதர் மைதிலி!* என்கிற ச்லோகத்தில் ஸீதாவதாரமாகிற விபவாவதாரத்தில் குணோத்கர்ஷம் சொல்லிற்றே; அது சேரும்படி எங்ஙனே? என்று சங்கையுண்டாகக் கூடியதாதலால் அதற்குப் பரிஹாரம் போலருளிச்செய்வது * यदुतान्यदुदाहरन्ति— யதுதாந்யதுதாஹரந்தி * இத்யாதி. அந்யத்—அர்ச்சாவதாரத்திற்காட்டிலும் வேறுபட்டதான, ஸீதாவதாரமுகம்—ஸீதா பிராட்டியாக அவதரித்தது முதலான விபவாவதாரத்தை, அதிசயிதகுணமுதாஹரந்தீதி யத்—குணோத்கர்ஷ முடையதாகச் சொல்லுகிறார்களே யென்னில்; கேண்மின்; ஏதத் அமுஷ்ய யோக்யா—இந்த ஸீதாவதாராதி விபவாவதாரமானது, ஸ்ரீரங்கநாச்சியாரான இந்த அர்ச்சாவதார நிலைக்கு அப்யாஸம் செய்தபடியத்தனை. உலகில் பஹிரங்கமாக நர்த்தனஞ்செய்யவிரும்புமவர்கள் உள்ளே யாடிப்பழகுவதுண்டே; அது போல ஸீதாவதாராதிகளிலே குணங்களைப்பழக்கிக்கொண்டபடியென்கை. இத்தால், விபவாவதாரங்களில் குணாப்யாஸமாகையாலே அங்கு அபரிஷ்க்ருதஸ்திதியும் அர்ச்சையில் ஸுபரிஷ்க்ருதஸ்திதியும் சொல்லிற்றாயிற்று.

இந்த ச்லோகத்தின் முடிவில் யோக்யம் என்று சிலர் பாடமோதிவருவது பிறழ்வு; அர்த்தமின்னதென்று உணராமையினாலான தவறு. யோக்யா என்பதே சுத்தபாடம். அப்யாஸமென்பது பொருள். "योग्याऽभ्यासः" என்பது அமரகோசம்; அப்யாஸஸ்தலமென்பது கருத்து. ... ... ... ... ... (57)

ऐश्वर्यमक्षरगतिं परमं पदं वा कस्मैचिदञ्जलिभरं वहते वितीर्य ।
अस्मै न किञ्चिदुचितं कृतमित्यथाम्ब! त्वं लज्जसे कथय कोऽयमुदारभावः ॥५८॥

ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா கஸ்மைசிதஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய,
அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதமித்யதாம்ப! த்வம் லஜ்ஜஸே கதய கோயமுதாரபாவ: (58)

***கீழ்ச்லோகத்தில் ப்ரஸ்தாவித்த திருக்குணங்களில் தலையான ஔதார்ய குணத்தை ஒரு சமத்காரம் பொலியப் பேசுகிறாரிதில். ஸ்த்ரீகளுக்கு லக்ஷணம் சொல்லுமிடத்து 'நாண் மடமச்சம் பயிர்ப்பு' என்பவை லக்ஷணமாகச் சொல்லப்பட்டன; நாணாவது லஜ்ஜை; இது ஸ்த்ரீத்வத்திற்கு ஐகாந்திகமாகையாலே ஸ்ரீரங்க நாச்சியாருக்கு அர்ச்சாவதாரநிலையிலும் இது அவிநாபூதமாயிருக்கிறதென்கிறார். லஜ்ஜையோடு கூடியிருக்குந்தன்மை முகத்திலேயே தெரியுமிறே; அது ஸ்ரீரங்கநாச்சியாருடைய திருமுகமண்டலத்திலும் காணலாயிராநின்றது; இதற்கொரு ஹேதுவை உல்லேகிக்கிறார். க்ருத்யத்தைச் செய்யாதபோதும் அக்ருத்யத்தைச் செய்தபோதும் லஜ்ஜையுண்டாவது இயல்பு. பெருமாள் தண்டகாரணியத்து ஆச்ரமத்தில் எழுந்

தருளியிருந்தபோது மஹர்ஷிகள் தாங்கள் பட்டஇலேசங்களை முறையிட்டுக்கொள்ள வந்துசேர, அப்போது பெருமாள் தம்முடைய லஜ்ஜாதிசயத்தை * ஹ்ரீரேஷா ஹி மமாதுலா * என்று வெளியிட்டார்; * प्रसीदन्तु भवन्तो मे ह्रीरेषा हि ममातुला । यदीदृशैरहं विप्रैरुपस्थेयैरुपस्थितः— ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா, யதீத்ருசை ரஹம் விப்ரைருபஸ்தேயைருபஸ்தித: * என்பது பெருமாளுடைய திருமுகப்பாசுரம். மஹர்ஷிகளிருக்கு மிடந்தேடித் தாமெழுந்தருளி அவர்களுக்கு ஆபயமளிக்கவேண்டி யிருக்க அது செய்யப்பெறாததற்குத் தாம் லஜ்ஜைப்படுவதாக அருளிச்செய்தது பொருத்தம். ஸ்ரீரங்கநாச்சியார் லஜ்ஜைப்படுவதற்கு இவள் பக்கலில் அக்ருத்ய கரணமோ க்ருத்யாகரணமோ என்ன இருக்கிறதென்னில்; உண்மையில் ஒன்று மில்லையாயினும் இவள் தன்னுடைய கருத்தாலே க்ருத்யாகரண முண்டென்றும் அது தான் லஜ்ஜா ஹேதுவாகிறதென்றும் நிரூபிக்கிறார்.

[ஐச்வர்யமக்ஷரகதி மித்யாதி.] ஐச்வர்யமோ, கைவல்யமோ, நலமந்தமில்லதோர் நாடோ எதையும் வேண்டுவார்க்கு வேண்டினபடியே கொடுத்தருள்வதில் ஒருகுறையு மில்லை; அப்படி கொடுத்தும் 'என்ன கொடுத்தோம்! ஒன்றும் கொடுக்கவில்லையே! மிகச்சிறிதளவேயன்றோ கொடுத்தோம்! இதுவொரு கொடையோ!' என்று நெஞ்சு இழவுபட்டேயிருத்தலால் அது பற்றின லஜ்ஜை திருமுகமண்டலத்திலே காணப்படா நின்றதென்கிறார். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் * ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது, உன்னடியார்க்கு என்செய்வனென்றேயிருத்தி நீ * என்றருளிச் செய்தபாசுரம் இங்கே அநுஸந்திக்கத்தகும்.

"அஞ்ஜலிம் க்ருதவதே" என்னவேண்டுமிடத்து 'அஞ்ஜலி भरम् வஹதே' என்றருளிச்செய்தது அத்தலையில் நினைவாலேயாயிற்று. பிரிந்திருந்த கைகளை ஒன்று சேர்ப்பதே அஞ்ஜலியாகையாலே அநாயாஸமான விதனை ஒரு சுமையாகச் சொல்லுவது—அத்தலைக்குக் கனத்துத் தோற்றுகையாலே. * भूयिष्ठां ते नमउक्तिं विधेम— பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம * என்றவிடத்திற்கு நம் ஆசார்ய ஸார்வபௌமர் கள் அருளிச்செய்யும் பொருளை இங்கே அநுஸந்திப்பது.

"கஸ்மைசித் பரமம் பதம் வா விதீர்ய" என்றதனால் பிராட்டி தானே அத்வாரக மாகப் பரமபதத்தையளித்தருள்வதாகக் கொள்ளலாகாது. உலகில், கொடுப்பிக்கிற வர்களையும் கொடுப்பவர்களாகவே சொல்லுவதுண்டாகையாலே அந்த ரீதியில் சொல்லிற்றத்தனை. அல்லாதபோது பிராட்டிக்குப் புருஷகாரத்வம் சொல்லுவது வ்யாஹதமாகும். தானே அத்வாரகமாகக் கொடுக்க சக்தியுள்ளதாகில் நிரங்குசஸ் வதந்த்ரன்பாடே மன்றாடுகையாகிற புருஷகாரக்ருத்யத்திலே கைவைத்து ச்ரமப்பட வேண்டியதில்லையிறே. இதைப்பற்றின விரிவுகளை நம்முடைய ஸ்ரீதத்வசோதந க்ரந்தத்திலே கண்டு தெளிவது. ... ... ... ... (58)

ज्ञानक्रियाभजनसम्पदकिञ्चनोऽहम् इच्छाधिकारशकनानुशयानभिज्ञः ।
आगांसि देवि! युवयोरपि दुस्सहानि बध्नामि मूर्खचरितस्तव दुर्भरोऽस्मि ॥५९॥

ஜ்ஞாநக்ரியாபஜநஸம்பதகிஞ்சநோஹம் இச்சாதிகாரசகநாநுசயாநபிஜ்ஞ:,
ஆகாம்ஸி தேவி! யுவயோரபி துஸ்ஸஹாநி பத்நாமி மூர்க்கசரிதஸ் தவ துர்பரோஸ்மி. (59)

✻✻✻இந்த ச்லோகத்தாலும் அடுத்த ச்லோகத்தாலும் தம்முடைய தாழ்வுகளை யநுஸந்தித்துக் கொண்டு ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டியருளுகிறார். ஹேதேவி!—வாரீர் ஸ்ரீரங்கநாச்சியாரே!; [ஜ்ஞாநக்ரியாபஜநஸம்பதகிஞ்சநோஹம்] ஜ்ஞாநயோககர்மயோக பக்தியோகங்களில் ஒன்றுமில்லாதவனடியேன். ✻ நதர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாந் ✻ என்றும் ✻ நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன் ✻ என்றும் பூருவர்கள் அநுஸந்தித்த கட்டளை. [இச்சாதிகாரசகந அநுசய அநபிஜ்ஞ:] இச்சாமாத்ரத்தையே அதிகாரமாகவுடைத்தான ப்ரபத்தியைச்செய்யவும் சக்தியற்றவன்.' 'நமக்கு இவையொன்றுமில்லையே!, என்று அநுதபிக்கவுமறியாதவன். ✻ இச்சாதிகாரேத்யாதிக்கு இரண்டுவகையாகப் பெரியார் பொருள் கூறுவர்; इच्छैव अधिकारो यस्यतत्, इच्छाधिकारम्; प्रपदनमितियावत्। "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்!" என்றும் "போதுவீர் போதுமினோ" என்றும் சொல்லுகிறபடியே இச்சைக்கு மேற்பட மற்றொன்றை அதிகாரஸம்பத்தியாக வேண்டாததான ப்ரபத்தியிலே யென்றபடி. அதிலுங்கூட சக்தியும் அநுதாபமுமற்றவன்— என்று பொருள் கொள்ளுகை ஒரு வகை: மற்றொருவகையாவது, (इच्छा च अधिकारश्च शकनं च अनुशयश्च) என்று நான்கையும் சேர்த்து த்வந்த்வ ஸமாஸமாக்கி இவை நான்குமறியாதவன் என்பதாக. இவற்றில், இச்சையாவது முமுக்ஷுத்வம்; அதிகாரமாவது சமதமாதிகள்; சகநமாவது அத்யவஸாயத்ருடத்வம்; அநுசயமாவது அநுதாபம். இவை இன்னபடியிருக்குமென்றே தெரியாதெனக்கு என்கிறார் அநபிஜ்ஞ: என்பதனால். இப்படிப் பட்டவடியேன்.

[युवयोरपि दुस्सहानि आगांसि बध्नामि— யுவயோரபி துஸ்ஸஹாநி ஆகாம்ஸி பத்நாமி] திவ்யதம்பதிகளான உங்களுக்கும் ஸஹிக்கமுடியாத குற்றங்களை யிழைக்கின்றேனந்தோ!. தேவி! என்று ஏகவசநமாக ஸம்போதநமிட்டு யுவயோ: என்று த்விவசநமாக அருளிச் செய்கையாலே திவ்யதம்பதிகள் விவக்ஷிதர்களென்பது பெறலாகும். குற்றங்களைக்காணாதவர்களும், கண்டாலும் நற்றமாகக் கொள்பவர்களுமான தேவரீர்களுக்கும் பொறுக்கொணாத குற்றங்களைக் கூடு பூரிக்கின்ற, மூர்க்கசரித: அஹம்—✻ மூர்க்கனேன் வந்து நின்றேன் மூர்க்கனேன் மூர்க்கனேனே ✻ என்கைக்கு ப்ரதமலக்ஷ்யமான வடியேன். [तव दुर्भरोऽस्मि—தவ துர்ப்பரோஸ்மி] தேவரீர்தமக்கும் கைகழியநின்றேனென்கை. விஷயீகாரத்திற்குப் புறம்பாயிரா நின்றேனென்றபடி (59)

**इत्युक्तिकैतवशतेन विडम्बयामि तानम्ब! सत्यवचसः पुरुषान् पुराणान्।**
**यद्वा न मे भुजबलं तव पादपद्मलाभे त्वमेव शरणं विधितः कृताऽसि ॥६०॥**

**இத்யுக்திகைதவசதேந விடம்பயாமி தாநம்ப! ஸத்யவசஸ: புருஷாந் புராணாந்,**
**யத் வா ந மே புஜபலம் தவ பாதபத்மலாபே த்வமேவ சரணம் விதித: க்ருதாஸி (60)**

✻✻✻—இச்ச்லோகத்தில் நைச்யாநுஸந்தாநம் பண்ணினரே; அதுவாகிலும் ஹார்தமாக இருக்கப்பெற்றதாகில், திவ்யதம்பதிகளின் க்ருபைக்கு நம்பக்கலிலே ஒருகைம்முதலுண்டென்று தேறியிருக்கலாமாயிற்று; அது தானுமில்லை யென்கிறார்; பூருவர்களான ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அநுஸந்தித்த நைச்யத்தை அப்படியே அநுகரித்தமையொழிய வேறில்லையே; ஆகவே அந்தவையில் நிர்ஹேதுகக்ருபையே தஞ்ச

மென்னு மிடத்தை அநுஸந்திக்கிறாரிதில். ஹே அம்ப!— வாரீர் ஜகந்மாதாவான ஸ்ரீரங்கநாச்சியாரே!; இதி—கீழ்ச்லோகத்திலநுஸந்தித்த கட்டளையிலே உத்தேசித்தவர தேந— பொட்டென பலபல கைச்யோகதிகளைச் சொல்லுவதாலே; தாந் ஸதாசாரஸாரபுராணாந் புருஷாந் விடம்பயாமி— * மயர்வற மதிநலமருளப்பெற்றவர்களென்று ப்ரஸித்தர்களாய் ப்ராமாணிகர்களான ஸ்ரீபராங்குசபரகாலாதி ஆழ்வார்களையும் ஆளவந்தார் போல்வாரான பூர்வாசாரியர்களையும் அநுகரிக்கிறேனத்தனை: * நிசனேன் நிறையொன்றுமிலேன் * என்றும் * நாபே நாஞ்விதநரகம் புகும் பாவம் செய்தேன் * என்றும் * எவிலாத தீவினைகளெத்தனை செய்தனன் கொல் *. என்றும், * न निन्दितं कर्म तदस्ति लोके सहस्रशो यन्न मया व्यधायि * என்றுமநுஸந்தித்த ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் போலே பாவனை பண்ணிச்சொன்னவித்தனையொழிய உள்ளபடி நெஞ்சிலுள்ளதைச் சொன்னதன்று என்கை.

உண்மையாகத் தம்பக்கலில் ஒருவகையான கைம்முதலுமில்லாமையையும் ஆத்தலையில் இருவருளே தஞ்சமென்பதையும் உத்தரார்த்தத்திலே உறைப்பாக அருளிச்செய்கிறார்.— *यद्वा न मे भुजबलं तव पादपद्मलाभे—யத்வா தவ பாதபத்மலாபே மே புஜபலம் ந—கீழ்ச்சொன்னவிதமாக பூர்வாசார்ய க்ருதநைச்யாநுஸந்தாந அநுகரணமத்தனை போக்கி தேவரீருடைய திருவடிகளைப்பெறுதற்கு என்திறத்தில் ஒரு ஸாமர்த்தியமுமில்லையென்கை. புஜபலம் என்பது தோள்மிடுக்கு என்னும் பொருளையுடையதாயினும், ஸாமர்த்யமென்ற தாத்பர்யத்திலே இங்கு ப்ரயோகிக்கப்பட்டது. ஸர்வாத்மநா அடியேன் அஸமர்த்தன் என்றதாயிற்று. [विधितः त्वमेव शरणं कृता असि— விதித: த்வமேவ சரணம் க்ருதா அஸி] தேவரீரே நிர்ஹேதுகமாக அருள்செய்ய விதிவாய்த்ததென்கை. ... ... ... ... ... ... ... ... (60)

श्रीरङ्गे शरदश्शतं सह सुहृद्वर्गेण निष्कण्टकं
निर्दुःखं सुसुखं च दास्यरसिकां भुक्त्वा समृद्धिं पराम्।
युष्मत्पादसरोरुहान्तररजः स्याम त्वमम्बा पिता
सर्वं धर्ममपि त्वमेव भव नः स्वीकुर्वकस्मात्कृपाम् ॥६१॥

ஸ்ரீரங்கே சரதச் சதம் ஸஹ ஸுஹ்ருத்வர்க்கேண நிஷ்கண்டகம்
நிர்துக்கம் ஸுஸுகஞ்ச தாஸ்யரஸிகாம் புக்த்வா ஸம்ருத்திம் பராம்,
யுஷ்மத்பாதஸரோருஹாந்தரரஜஸ் ஸ்யாம த்வமம்பா பிதா
ஸர்வம் தர்மமபி த்வமேவ பவ ந: ஸ்வீகுர்வகஸ்மாத் க்ருபாம். .... ... (61)

Thy Prayer is for us also

*** தம்முடைய அபேக்ஷிதத்தை விஜ்ஞாபித்துக்கொண்டு ஸ்தோத்ரத்தை நிகமித்தருளுகிறார். ஸ்ரீரங்கநாச்சியாரே! திருவரங்கம் பெரிய கோயிலிலே மித்ரமண்டலியோடுகூட நிராபாதமாகவும் பேரின்பவெள்ளம் பெருகவும் அடிமைச்சுவைமிக்க செல்வத்தையநுபவித்துக்கொண்டு இன்னுமொரு நூற்றாண்டு தேவரீருடைய திருவடி வாரத்திலே வாழக்கடவோம்; ஸகலவிதபந்துவும் தேவரீரேயாகி நிர்ஹேதுகக்ருபையைக் கொண்டருள வேணுமென்று ப்ரார்த்திக்கிறார். ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "ஸ்ரீரங்கே சரதச் சதம் தத இத: பச்யேம லக்ஷ்மீஸகம்" (74) என்றருளிச்செய்ததை இங்கே

நினைப்பது. [ஸஹ ஸுஹ்ருத்வர்க்கேண] சோபநஹ்ருதய முடையவர்கள் ஸுஹ்ருத்துக்கள்; அபிஜ்ஞஸ்தவத்திலே "கிரஸ்தரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்க்யே விபோ! பரஸ்பரஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்றதைச் செய்தபடியே பரஸ்பரஹிதைஷிகளாய் விளங்கும் உத்தமர்களேயாயிற்று ஸுஹ்ருத்துக்களென்கிறது. ஸுஸுகம் என்னுமளவே போதுமாயிருக்க 'நிஷ்கண்டகம், நிர்துக்கம்' என்று ப்ரதியோகிப்ரஸிந்தானத்தோடு அருளிச்செய்தது அக்காலத்தில் ஸ்ரீரங்கவாழ்ச்சிக்குப் பலபல இடையூறுகள் மிடைந்தபடியைக் காட்டுகிறதின்றது. அதனால் ஸ்ரீரங்க வாஸத்தைப் பலகாலமிழந்து திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருந்து மீண்டெழுந்தருளின பின்பிறே இந்த ஸ்தோத்ரமருளிச்செய்தது. [दास्यरसिकां परां समृद्धिं भुक्त्वा—தாஸ்யரஸிகாம் பராம் ஸம்ருத்திம் புக்த்வா] அங்குமிங்கும் அடிமையேயாயிற்று பரம புருஷார்த்தம்; முமுக்ஷுப்படியில் "இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்காகையும்" என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். "தாஸ்ரஸிகாம் ஸம்ருத்திம்" என்றது—தாஸ்ய ரஸிகத்வரூபாம் ஸம்ருத்திம் என்றபடி. 'தாஸ்யரஸிகா:' என்று விஸர்க்காந்தமாகச் சிலர் பாடங்கொள்வர்; அது பெரியார் பேணின பாடமன்று. நான்காவது பாதத்தில் "ஸர்வம் தர்மமபி த்வமேவ பவ ந:" என்கிற ஸ்தானத்தில் "ஸர்வஞ்ச த்வமஸி த்வமேவ பவ ந:" என்பது சிலருடைய பாடம். அதுவும் பொருத்தமற்றது. இங்கு தர்மமென்று ஆமுஷ்மிக பலஸாதனத்தைச் சொல்லுகிறது; ஸாத்யத்திற்கு அபேக்ஷிதங்களான ஸாதனங்களெல்லாமும் தேவரீரே யாகவேணுமென்கை. அப்படியாகைக்குரிய நிர்ஹேதுக க்ருபையை தேவரீர் கொண்டருள வேணுமென்கிற ப்ரார்த்தனையோடே இந்த ஸ்துதியைத் தலைக்கட்டியருளினராயிற்று. ... ... ... (61)

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசார்யர் இயற்றிய**

ஸ்ரீகுணரத்நகோச வியாக்கியானம்

முற்றிற்று.

Printed at The Forward Printers, 49, Sarangapani Sannathi Street, KUMBAKONAM.